க. த. திருநாவுக்கரசு, M.A. (தமிழ்) M.A (வரலாறு)
M. LITT. DIP. IN LINGS.

மக்கள் பதிப்பு:

# திருவருட்பா பாராயணத்திரட்டு



இராமலிங்க சுவாமிகள்
அருளிச்செய்த அருட்பா
ஆறு திருமுறைகளின்றும்
தொகுத்துத் திரட்டியது.

தொகுத்தவர் :

**புலியூர்க் கேசிகன்**




(தலைமை நிலையம் : 1621 தெற்கு ராஜவீதி தஞ்சாவூர்.)

11, நியூபஜார் ரோடு, தியாகராயநகர் : சென்னை-17.

# பதிப்புரை

உலகின் நல்வாழ்வுக்குச் சமரச சுத்த சன்மார்க்க நெறியென்னும் ஒன்றுதான் சிறப்புடைய பெருநெறியாகுமென்று கண்டு, அதனைப் பரப்புதற்கான சங்கத்தையும் தோற்றி, 'வடலூரார்' என வான்புகழ் பெற்று, அருட்பாக் கடலையும் அருளிச்செய்து சிறப்புற்றவர், இராமலிங்க அடிகளார் ஆவர்.

அவர்களுடைய அருட்பாக் கடலினின்றும் திரட்டித் தொகுத்த இந்தப் பாராயணத்திரட்டுத் தமிழன்பர்களுக்கு அடிகளுடைய ஒப்பற்ற பெருநெறியின் உண்மை விளக்கத்தை உணர்ந்து பயன்பெறுவதற்கு உதவுவதாகும்.

இதனை நன்முறையில் ஆக்கித்தந்த தொகுப்பாசிரியர்க்கும், அச்சிடும் பொறுப்பை ஏற்று மிக விரைவிலே வெளியிட உதவிய மெட்ரோபாலிடன் அச்சகத்தினர்க்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

தமிழ் அன்பர்கள் இதனை விருப்புடன் வரவேற்றுத் தமிழ்நலத்தினும் சிவநேயத்தினும் அன்புப் பெருநெறியினும் திளைப்பார்கள் என நம்புகின்றோம்.

**அப்பர் புத்தக நிலையத்தார்**

## இந்தத் திரட்டு......

'அழகார் திருச்சிற்றம்பலம்' எனப் புகழாற் செறிவுற்ற சிதம்பரத்திற்கு அருகாமையிலே, மருதூர் என்னும் சிற்றூர் உள்ளது. அதனிடத்தே, கி. பி. 1823-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 5-ம் நாளில், தமிழும் சைவமும் இணைந்து வாழ்வதற்கு உதவுகின்றதன் பொருட்டாக, நம் அடிகள் தோன்றினர். இவரைப் பெற்றுச் சீராட்டும் பேறுபெற்றவர்கள் அவ்வூர் இராமையாப் பிள்ளையும் சின்னம்மை அம்மையும் ஆவார்கள்.

இராமலிங்கம் எனப் பெற்றோராற் பெயரிடப் பெற்று, அருமையாக வளர்க்கப்பெற்று வளர்ந்து வந்த அடிகள், தம் தந்தையாரின் மறைவுக்குப் பின்னர், சென்னையிலிருந்த தம்முடைய அண்ணரான சபாபதிப் பிள்ளையுடன் வந்திருந்து வாழ்வாராயினர். அவரே தம் இளவலுக்குச் சிவநெறி நூல்களையும் செழுந்தமிழ் நூல்களையும் கற்பித்துவர, இராமலிங்கரும் ஒற்றிப்பெருமானைப் பாடிப் பரவும் சிவநேயத்தாற் சிறப்புற்று நின்றனர்.

உற்றாரும் உறவினரும் தக்க வயதில் இவரது தமக்கையாரின் மகளையே இவருக்கு மணம் செய்வித்துக் களித்த போதும், இவரோ மணவாழ்விற் பற்றின்றி, மாதொருபாகனையே நினைந்துருகும் ஞானநிலையினராக விளங்கினர்.

இதன்பின்னர், தம்முடைய அன்பர்கள் சிலருடனும் கூடியவராக, அடிகள் சிதம்பரத்திற்குச் சென்று, கூத்தப் பெருமானை வழிபட்டுச், சிவத்தொண்டிலும் தம்முடைய அநுபவத்தைப் பாடியருள்வதிலுமே முற்றவும் ஈடுபட்டு வருவாராயினர்.

இதற்கிடையில், இவருடைய அன்பர்கள் இவருடைய பாடல்களைத் தொடுத்துத் திருவருட்பா என அச்சேற்றி வெளியிட்டனர். அந்தப் பெயரைக் குறித்துப் பெரியதொரு மறுப்பும், மறுப்புக்கு மறுப்புமாக மலிந்தன. அடிகளோ அவற்றால் மனமுளையாது இறைவனின் அருள்வயத்தராகி அதனிடத்தேயே இன்புற்றிருந்தனர்.

பின்னர், வடலூரில் தம் அருட்கொள்கைகளை நிலை பெறுத்துவதற்கான நிலையங்கள் பலவற்றையும் அன்பர்களின் பொருளுதவி கொண்டு அமைத்து, அடியவர் பலருக்கும் தம்முடைய சிவாநுபவங்களை அறிவுறுத்திக் கொண்டிருந்து. தம்முடைய ஐம்பத்துமூன்றாவது அகவையில் அடிகள் முத்தி பெற்றனர்.

அடிகளுடைய ஒப்பற்ற அனுபவத்தே எழுந்த பாக்களும் உரைகளும் என்றென்றும் நிலைபெறுமாறு, அவருடைய அன்பர்களால் தொகுத்துத் 'திருவருட்பா' என, ஆறுதிரு முறைகளாக வெளியிடப்பெற்றுள்ளன.

அந்தப் பெருங்கடலினின்றும் திரட்டி வழங்கப்பெறு வதே இந்த நூல். அடிகளின் அருட்பாடல்கள் பலவற்றின் செழுமையினையும் அறிந்து இன்புறுவதற்கு ஏற்றவகையில் இந்நூல் தொகுக்கப் பெற்றிருக்கின்றது.

அடிகளின் சமரச சுத்த சன்மார்க்கப் பெருநெறி, மக்கள் நலத்திற்கு அடிகள் வழங்கிய ஒப்பற்ற ஓர் ஒருமைப் பெரு நெறியாகும். அந்த நன்னெறியின் வளர்ச்சிக்கு, இதுவும் ஒரு சிறுதுணையாக அமையும் என்று நம்புகின்றேன்.

**புலியூர்க் கேசிகன்**

# பொருளடக்கம்

## அருட்பா!

அளவாத பேரன்பு
சொரிந்தருளை விளைவித்துத்
தளவாரு நகைக்கயற்கண்
ணையலிடங் கொண்டபிரான்
வளமாருங் கழன் மலரோ
டிரண்டறுத்து வாழ்விக்கும்
உளவாலே அருட்பாவென்
ஞெருநாமம் பூண்டதுவே!

(தொழுவூர் வேலாயுத முதலியார்)

## முதல் திருமுறை

# 1. திருவடிப் புகழ்ச்சி

[நூற்று இருபத்தெட்டு அடியான் மிகுத்துவந்த
கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]

திருச்சிற்றம்பலம்

பரசிவம் சின்மயம் பூரணம் சிவபோக
பாக்கியம் பரம நிதியம்
பரசுகம் தன்மயம் சச்சிதா நந்தமெய்ப்
பரமவே காந்த நிலையம்
பரமஞானம் பரமசத்துவ மகத்துவம்
பரம கைவல்ய நிமலம்
பரமதத்துவ நிரதிசய நிட்களம் பூத
பௌதிகா தார நிபுணம்

பவபந்த நிக்ரக விநோத சகளஞ்சிற்
பரம்பரா னந்த சொருபம்
பரிசயா தீதஞ்சு யஞ்சதோ தயம்வரம்
பரமார்த்த முக்த மௌனம்
படனவே தாந்தாந்த மாகமாந் தாந்தநிரு
பாதிகம் பரம சாந்தம்
பரநாத தத்துவாந் தஞ்சகச தரிசனம்
பகிரங்கம் அந்த ரங்கம்

பரவியோ மம்பரம ஜோதிமயம் விபுலம்
பரம்பரம் அனந்தம் அசலம்
பரமலோ காதிக்க நித்தியசாம் பிராச்சியம்
பரபதம் பரம சூக்ஷ்மம்

பராபர மனாமய நிராதர மகோசரம்
பரமதந் திரம் விசித்திரம்
பராமுத நிராகரம் விகாசனம் விகோடனம்
பரசுகோ தயம் அக்ஷயம்

பரிபவ விமோசனங் குணரகிதம் விச்சுவம்
பதித்துவ பரோ பரீணம்
பஞ்சகிர்த் தியசுத்த கர்த்தத்து வந்தற்ப
ரஞ்சிதம் பரவி லாசம்
பகர்சுபா வம்புனித மதுலமது லிதமம்ப
ராம்பர நிராலம் பனம்
பரவுசா க்ஷாத்கார நிரவய வங்கற்ப
னுதீத நிருவி காரம்

பரதுரிய அநுபவங் குருதுரிய பதமம்ப
கம்பகா தீத விமலம்
பரமகரு ணும்பரம் தற்பதங் கனசொற்
பதாதீதம் இன்ப வடிவம்
பரோக்ஷஞா னுதீதம் அபரோட்ச ஞானனு
பவவிலா சப்பிர காசம்
பாவனு தீதங்கு ணுதீத முபசாந்த
பதமகா மௌன ரூபம்

பரமபோ தம்போத ரகிதசகி தஞ்சம்ப
வாதீத மப்பிர மேயம்
பகரனந் தானந்த மமலமுசி தஞ்சிற்ப
தஞ்சதா னந்த சாரம்
பரையாதி கிரணங்க சாங்கசௌ பாங்கவிம்
பாகார நிருவி கற்பம்
பரசுகா ரம்பம்ப ரம்பிரம வித்தம்ப
ரானந்த புரண போகம்

பரிமிதா தீதம்ப ரோதயம் பரகிதம்
பரபரீ ணம்ப ராந்தம்
பரமார்ப்பு தம்பரம சேதனம் பசுபாச
பாவனம் பரம மோட்சம்
பரமானு குணநவா தீதஞ்சி தாகாச
பாஸ்கரம் பரம போகம்
பரிபாக வேதன வரோதயா னந்தபத்
பாலனம் பரம யோகம்

பரமசாத் தியவதீ தானந்த போக்கியம்
பரிகதம் பரிவேத் தியம்

பரகேவ லாத்விதா நந்தானு பவசத்த
பாதாக்ர சுத்த பலிதம்
பரமசுத் தாத்விதா னந்தவனு பூதிகம்
பரிபூத சிற் குணுந்தம்
பரமசித் தாந்தநிக மாந்தசம ரசசுத்த
பரமானு பவவி லாசம்

தரமிகுஞ் சர்வசா திட்டான சத்தியஞ்
சர்வவா னந்த போகம்
சார்ந்தசர் வாதார சர்வமங் களசர்வ
சத்திதர மென் றளவிலாச்
சகுணநிற் குணமுறு சலட்சண விலட்சணத்
தன்மைபல வாக நாடித்
தம்மைநிகர் மறையெலாம் இன்னுமள விடநின்ற
சங்கர னநாதி யாதி

சாமகீ தப்பிரியன் மணிகண்ட சீகண்ட
சசிகண்ட சாம கண்ட
சயசய வெனுந்தொண்ட ரிதயமலர் மேவிய
சடாமகுடன் மதன தகனன்
சந்திரசே கரனிடப வாகனன் கங்கா
தரன் சூலபாணி யிறைவன்
தனிமுதல் உமாபதி புராந்தகன் பசுபதி
சயம்புமா தேவன் அமலன்

தாண்டவன் தலைமாலை பூண்டவன் தொழுமன்பர்
தங்களுக் கரு ளாண்டவன்
தன்னிகரில் சித்தெலாம் வல்லவன் வடதிசைச்
சைலமெனு மொரு வில்லவன்
தக்ஷிணா மூர்த்தியருண் மூர்த்திபுண் ணியமூர்த்தி
தகுமட்ட மூர்த்தி யானோன்
தலைமைபெறு கணநாய கன்குழக னழகன்மெய்ச்
சாமிநந் தேவ தேவன்

சம்புவே தண்டன் பிறப்பிலான் முடிவிலான்
தாணுமுக் கண்க ளுடையான்
சதுரன் கடாசல வுரிப்போர்வை யான்செந்
தழற்கரத் தேந்தி நின்றோன்
சர்வகா ரணன்விறற் காலகா லன்சர்வ
சம்பிரமன் சர் வேச்சுரன்
தகைகொள்பர மேச்சுரன் சிவபிரா னென்பிரான்
தம்பிரான் செம்பொற் பதம்

தகவுபெறு நிட்பேத நிட்கம்ப மாம்பரா
சத்திவடி வாம்பொற் பதம்
தக்கநிட் காடின்ய சம்வேத நாங்கசிற்
சத்தி வடிவாம் பொற் பதம்
சாற்றரிய விச்சைஞா னங்கிரியை யென்னுமுச்
சத்தி வடிவாம் பொற் பதம்
தடையிலா நிர்விடய சிற்குண சிவானந்த
சத்திவடி வாம்பொற் பதம்

தகுவிந்தை மோகினியை மாயையசை விக்குமொரு
சத்திவடிவாம் பொற் பதம்
தாழ்விலீ சானமுதன் மூர்த்திவரை யைஞ்சத்தி
தஞ்சத்தி யாம்பொற் பதம்
சவிகற்ப நிருவிகற் பம்பெறு மனந்தமா
சத்திசத் தாம்பொற் பதம்
தடநிருப வவிவர்த்த சாமர்த்திய திருவருட்
சத்தியுரு வாம்பொற் பதம்

தவாதசாந் தப்பதந் துவாதசாந் தப்பதந்
தருமிணை மலர்ப் பூம்பதம்
சகலர்விஞ் ஞானகலர் பிரளயா கலரிதய
சாட்சியா கியபூம் பதம்
தணிவிலா வணுபட்ச சம்புப ட்சங்களிற்
சமரச முறும்பூம் பதம்
தருபரஞ் சூக்குமந் தூலமிவை நிலவிய
தமக்குளுயி ராம்பூம் பதம்

சரவசர வபரிமித விவிதவான் மப்பகுதி
தாங்குந் திருப்பூம் பதம்
தண்டபிண் டாண்டவகி லாண்ட பிர மாண்டந்
தடிக்கவரு ளும்பூம் பதம்
தத்வதாத் விகசகசி ருட்டிதிதி சங்கார
சகலகர்த் துருபூம் பதம்
சகசமல விருளகல நின்மலசு யம்ப்ரகா
சங்குலவு நற்பூம் பதம்

மரபுறு மதாதீத வெளிநடுவி லானந்த
மாநடன மிடுபூம் பதம்
மன்னும்வினை யொப்புமல பரிபாகம் வாய்க்கமா
மாயையை மிதிக்கும் பதம்
மலிபிறவி மறலியி னழுந்துமுயிர் தமையருளின்
மருவுற வெடுக்கும் பதம்

வளரூர்த்வ வீரதாண் டவமுதற் பஞ்சக
மகிழ்ந்திட வியற்றும் பதம்

வல்லமுய லகன்மீதி னூன்றிய திருப்பதம்
வளந்தரத் தூக்கும் பதம்
வல்வினையெ லாந்தவிர்த் தழியாத சுத்தநிலை
வாய்த்திட வழங்கும் பதம்
மறைதுதிக் கும்பத மறைச்சிலம் பொளிர்பதம்
மறைப்பாது கைச்செம் பதம்
மறைமுடி மணிப்பத மறைக்குமெட் டாப்பதம்
மறைப்பரி யுகைக்கும் பதம்

மறையவ னுளங்கொண்ட பதமமித கோடியாம்
மறையவர் சிரஞ்சூழ் பதம்
மறையவன் சிரசிகா மணியெனும் பதமலர்கொண்
மறையவன் வாழ்த்தும் பதம்
மறையவன் செயவுலக மாக்கின்ற வதிகார
வாழ்வையீந் தருளும் பதம்
மறையவன் கனவினும் காணாத பதமந்த
மறையவன் பரவும் பதம்

மால்விடை யிவர்ந்திடு மலர்ப்பதந் தெய்வநெடு
மாலருச் சிக்கும் பதம்
மால்பரவி நாடொறும் வணங்குபத மிக்கதிரு
மால்விழியி லங்கும் பதம்
மால்தேட நின்றபத மோரனந் தங்கோடி
மாற்றலை யலங்கற் பதம்
மான்முடிப் பதநெடிய மாலுளப் பதமந்த
மாலுமறி வரிதாம் பதம்

மால்கொளவ தாரங்கள் பத்தினும் வழிபட்டு
வாய்மைபெற நிற்கும் பதம்
மாலுலகு காக்கின்ற வண்மைபெற் றடிமையின்
வதிந்திட வளிக்கும் பதம்
வரையுறு முருத்திரர்கள் புகழ்பதம் பலகோடி
வயவுருத் திரர்சூழ் பதம்
வாய்ந்திடு முருத்திரற் கியல்கொண்முத் தொழில்
வண்மைதந் தருளும் பதம் [செய்யும்

வானவிந் திரராதி யெண்டிசைக் காவலர்கள்
மாதவத் திறனும் பதம்
மதியிரவி யாதிசுர ரசுரரந் தரர்வான
வாசிகள் வழுத்தும் பதம்

மணியுரகர் கருடர்காந் தருவர்விஞ் சையர்சித்தர்
மாமுனிவ ரேத்தும் பதம்
மாநிருதர் பைசாசர் கிம்புருடர் யட்சர்கள்
மதித்துவர மேற்கும் பதம்

மன்னுகின் னரர்பூதர் வித்தியா தரர்போகர்
மற்றையர்கள் பற்றும் பதம்
வண்மைபெரு நந்திமுதல் சிவகணத் தலைவர்கள்
மனக்கோயில் வாழும் பதம்
மாதேவி யெங்கண்மலை மங்கையென் னம்மைமென்
மலர்க்கையால் வருடும் பதம்
மறலியை யுதைத்தருள் கழற்பத மரக்கனை
மலைக்கீ ழடர்க்கும் பதம்

வஞ்சமறு நெஞ்சினிடை யெஞ்சலற விஞ்சுதிறன்
மஞ்சுற விளங்கும் பதம்
வந்தனைசெய் புந்தியவர் தந்துயர்த விர்ந்திடவுன
மந்தணந விற்றும் பதம்
மாறிலொரு மாறனுள மீறின்மகிழ் வீறியிட
மாறிநட மாடும் பதம்
மறக்கருணை யுந்தனி யறக்கருணை யுந்தந்து
வாழ்விக்கு மொண்மைப் பதம்

இரவுறும் பகலடிய ரிருமருங் கினுமுறுவ
ரெனவயங் கியசீர்ப் பதம்
எம்பந்த மறவெமது சம்பந்த வள்ளன்மொழி
யியன்மணம ணக்கும் பதம்
ஈவரச ரெம்முடைய நாவரசர் சொற்பதிக
விசைபரிம ளிக்கும் பதம்
ஏவலார் புகழெமது நாவலா ரூரர்புக
லிசைதிருப் பாட்டுப் பதம்

ஏதலூர் தங்காத வாதவூ ரெங்கோவின்
இன்சொன்மணி யணியும் பதம்
எல்லூரு மணிமாட நல்லூரி னப்பர்முடி
யிடைவைகி யருண்மென் பதம்
எடுமேலெ னத்தொண்டர் முடிமேன் மறுத்திடவும்
இடைவலித் தேறும் பதம்
எழில்பரவை யிசையவா ரூர்மறுகி னருள்கொண்டு
இராமுழுது முலவும் பதம்

இன்றொண்டர் பசியறக் கச்சூரின் மனைதொறும்
இரக்கநடை கொள்ளும் பதம்

இளைப்புற லறிந்தன்பர் பொதிசோ றருந்தமுன்
இருந்துபின் நடக்கும் பதம்
எரிவிறகு விற்கவளர் கூடற் றெருத்தொறும்
இயங்கிய விரக்கப் பதம்
இறுவைகை யங்கரையின் மண்படப் பல்கால்
எழுந்து விளை யாடும் பதம்

எங்கேமெய் யன்பருள ரங்கே நலந்தர
எழுந்தருளும் வண்மைப் பதம்
எவ்வண்ணம் வேண்டுகினும் அவ்வண்ணம் அன்றே
யிரங்கியீந் தருளும் பதம்
என்போன்ற வர்க்குமிகு பொன்போன்ற கருணைதந்
திதயத் திருக்கும் பதம்
என்னுயிரை யன்னபத மென்னுயிர்க் குயிரா
யிலங்குசெம் பதுமப் பதம்

என்னறிவெ னும்பதமெ னறிவினுக் கறிவாய்
இருந்தசெங் கமலப் பதம்
என்னன்பெ னும்பதமெ னன்பிற்கு வித்தாய்
இசைந்தகோ கனகப் பதம்
என்தவ மெனும்பதமென் மெய்த்தவப் பயனாய்
இயைந்தசெஞ் சலசப் பதம்
என்னிருகண் மணியான பதமென்கண் மணிகளுக்
கினியநல் விருந்தாம் பதம்

என்செல்வ மாம்பதமென் மெய்ச்செல்வ வருவா
யெனுந்தாம ரைப்பொற் பதம்
என்பெரிய வாழ்வான பதமென்க ளிப்பா
மிரும்பதமெ னிதியாம் பதம்
என்தந்தை தாயெனு மிணைப்பதமெ னுறவாம்
இயற்பதமெ னட்பாம் பதம்
என்குருவெ னும்பதமெ னிட்டதெய் வப்பதம்
எனதுகுல தெய்வப் பதம்

என்பொறிக ளுக்கெலா நல்விடய மாம்பதமென்
எழுமையும் விடாப்பொற் பதம்
என்குறை யெலாந்தவிர்த் தாட்கொண்ட பதமெனக்
கெய்ப்பில்வைப் பாகும் பதம்
எல்லார்க்கும் நல்லபதம் எல்லாஞ்செய் வல்லபதம்
இணையிலாத் துணையாம் பதம்
எழுமன முடைந்துடைந் துருகிநெகிழ் பத்தர்கட்
கின்னமுத மாகும் பதம்

எண்ணுறிற் பாலினறு நெய்யொடு சருக்கரை
யிசைந்தென வினிக்கும் பதம்
ஏற்றமுக் கனிபாகு கன்னல்கற் கண்டுதேன்
என்னமது ரிக்கும் பதம்
எங்கள்பத மெங்கள்பத மென்றுசம யத்தேவர்
இசைவழக் கிடுநற் பதம்
ஈறிலாப் பதமெலாந் தருதிருப் பதமழிவில்
இன்புதவு கின்ற பதமே. (1)

## 2. சிவநேச வெண்பா

முன்னவனே யானை முகத்தவனே முத்திநலம்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே-மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின்றுள் சரண். (2)

வீறுடையாய் வேலுடையாய் வெற்புடையாய் விண்ணுடை
நீறுடையாய் நேயர்கள்தம் நெஞ்சுடையாய்-கூறும் [யாய்
முதல்வாவோ ராறு முகவாமுக் கண்ணன்
புதல்வாநின் தாள்எம் புகல். (3)

பூதமெங்கே மற்றைப் புலனெங்கே பல்லுயிரின்
பேதமெங்கே அண்டமெனும் பேரெங்கே-நாதமெங்கே
மன்வடிவ மெங்கே மறையெங்கே வான்பொருள்நீ
பொன்வடிவம் கொள்ளாத போது, (4)

தந்தையாய் என்னுடைய தாயாய்த் தகைசான்ற
சிந்தையாய் என்னருமைத் தேசிகனாய்-முந்தையாய்
நீடுமறை முதலாய் நின்றாயென் னேநெஞ்சம்
வாடுமெனை யாட்கொள்ளா வாறு. (5)

உன்னால் எனக்காவ துண்டதுநீ கண்டதுவே
என்னால் உனக்காவ தேதுளது-சொன்னால்யான்
தந்தார்வத் தோடுந் தலைமேற்கொண் டுய்கிற்பேன்
எந்தாயிங் கொன்றுமறி யேன். (6)

உப்பிருந்த வோடோ வொதியோ வுலாப்பிணமோ
வெப்பிருந்த காடோ வினைச்சுமையோ-செப்பறியேன்
கண்ணப்ப ருக்குக் கனியனையாய் நிற்பணியா
துண்ணப் பருக்கும் உடம்பு. (7)

ஏலார் மனைதொறும்போ யேற்றெலும்புந் தேயநெடுங்
காலாய்த் திரிந்துழலுங் கால்கண்டாய்-மாலாகித்
தொண்டே வலஞ்செய்கழற் றோன்றலே நின்கோயிற்
கண்டே வலஞ்செய்யாக் கால். (8)

ஏசும் பிறர்மனையி லேங்கவவ ரீயுமரைக்
காசும் பெறவிரிக்குங் கைகண்டாய்-மாசுந்த
விண்டும் சிரங்குனிக்கும் வித்தகனே நின்தலத்தைக்
கண்டும் சிரங்குவியாக் கை. (9)

வெங்கோடை யாதபத்தின் வீழ்நீர் வறந்துலர்ந்து
மங்கோடை யாதல் வழக்கன்றோ-எங்கோநின்
சீர்சிந்தாச் சேவடியின் சீர்கேட்டு மானந்த
நீர்சிந்தா வன்கண் நிலை. (10)

வாயன்றேல் வெம்மலஞ்செல் வாயன்றேன் மாநரக
வாயன்றேல் வல்வெறிநாய் வாயென்பாம்-தாயென்றே
வூழ்த்தாதா வேத்து முடையாய் சிவவென்றே
வாழ்த்தாதார் நாற்றப்பாழ் வாய். (11)

வீட்டா ரிறைநீ விடைமேல் வரும்பவனி
காட்டா தடைத்த கதவன்றோ-நாட்டாதி
நல்லத் துளையா நதிச்சடையா யென்னுஞ்சீர்ச்
செல்லத் துளையாச் செவி. (12)

புல்லங் கணநீர்ப் புழையொன்கோ புற்றென்கோ
சொல்லும் பசுமட் டுளையென்கோ-சொல்லுஞ்சீர்
வீயாத பிஞ்ஞகப்பேர் மெல்லினத்தி னல்லிசைதான்
தோயாத நாசித் துளை. (13)

தோற்றமிலாக் கண்ணுஞ் சுவையுணரா நாவுநிகழ்
நாற்ற மறியாத நாசியுமோர்-மாற்றமுந்தான்
கேளாச் செவியுங்கொள் கீழ்முகமே நீற்றணிதான்
மூளாது பாழ்த்த முகம். (14)

மான்று முலக வழக்கின் படிமதித்து
மூன்று வகிர்ந்தே முடைநாற-ஊன்று
மலக்கூடை யேற்றுகினு மாணுதே தென்பால்
தலைக்கூடற் றுழாத் தலை. (15)

கல்லென்கோ நீரடைக்குங் கல்லென்கோ கான்கொள்கருங்
கல்லென்கோ காழ்வயிரக் கல்லென்கோ-சொல்லென்கோ
வின்று லெனிலோ வெடுத்தாளெம் மீன்றுள்நேர்
நின்றுள் நினையாத நெஞ்சு. (16)

சொல்லுகின்ற உள்ளுயிரைச் சோர்வுற் றிடக்குளிர்ந்து
கொல்லுகின்ற நஞ்சிற் கொடிதன்றே-ஒல்லுமன்றத்
தெம்மானின் றுட்கமல மெண்ணுது பாழ்வயிற்றிற்
சும்மா அடைக்கின்ற சோறு. (17)

வெள்ளைப் பிறையணிந்த வேணிப் பிரானேநான்
பிள்ளைப் பிராயத்திற் பெற்றுளே-எள்ளப்
பொறுத்தாளத் தாயிற் பொறுப்புடையோய் நீதான்
வெறுத்தா லினியென்செய் வேன். (18)

எவ்வேளை யோவருங்கூற் றெம்பாலென் றெண்ணுகின்ற
அவ்வேளை தோறு மழுங்குற்றேன்—செவ்வேளை
மிக்களித்தோய் நின்கழற்கால் வீரத்தை யெண்ணுதொறும்
எக்களித்து வாழ்கின்றேன் யான். (19)

எந்தாயென் குற்றமெலா மெண்ணிங்கா லுண்ணடுங்கி
நொந்தா குலத்தி னுழைகின்றேன்-சிந்தாத
காள மகிழ்நின் களக்கருணை யெண்ணுதொறும்
மீளமகிழ் கின்றேன் விரைந்து. (20)

கண்ணப்ப னேத்துநுதற் கண்ணப்ப மெய்ஞ்ஞான
விண்ணப்ப நின்றனக்கோர் விண்ணப்பம்-மண்ணிற்சில்
வானவரைப் போற்று மதத்தோர் பலருண்டு
நானவரைச் சேராம னட்டு. (21)

பொன்னின் றெளிரும் புரிசடையோய் நின்னையன்றிப்
பின்னொன் றறியேன் பிழைநோக்கி-யென்னை
அடித்தாலும் நீயே அணைத்தாலும் நீயே
பிடித்தேனுன் பொற்பாதப் பேறு. (22)

## 3. மகாதேவமாலை

கருணைநிறைந் தகம்புறமுந் துளும்பிவழிந்
துயிர்க்கெல்லாங் களைகண் ஆகித்
தெருணிறைந்த இன்பநிலை வளர்க்கின்ற
கண்ணுடையோய் சிதையா ஞானப்
பொருணிறைந்த மறையமுதம் பொழிகின்ற
மலர்வாயோய் பொய்ய னேன்றன்
மருணிறைந்த மனக்கருங்கற் பாறையுமுட்
கசிந்துருக்கும் வடிவத் தோயே. (23)

உலகநிலை முழுதாகி யாங்காங் குள்ள
உயிராகி யுயிர்க்குயிராம் ஒளிதா னுகிக்

கலகநிலை அறியாத காட்சி யாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ண தாகி
இலகுசிதா காசமதாய்ப் பரமா காச
இயல்பாகி இணையொன்றும் இல்லா தாகி
அலகிலறி வானந்த மாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே. **(24)**

உலகமெலாந் தனிநிறைந்த உண்மை யாகி
யோகியர்தம் அனுபவத்தின் உவப்பா யென்றுங்
கலகமுறா உபசாந்த நிலைய தாகிக்
களங்கமற்ற அருண்ஞானக் காட்சி யாகி
விலகலுறா நிபிடவா னந்த மாகி
மீதானத் தொளிர்கின்ற விளக்க மாகி
இலகுபரா பரமாய்ச்சிற் பரமா யன்பர்
இதயமலர் மீதிருந்த வின்பத் தேவே. **(25)**

வித்தாகி முளையாகி விளைவ தாகி
விளைவிக்கும் பொருளாகி மேலு மாகிக்
கொத்தாகிப் பயனாகிக் கொள்வோ னாகிக்
குறைவாகி நிறைவாகிக் குறைவி லாத
சத்தாகிச் சித்தாகி யின்ப மாகிச்
சதாநிலையா யெவ்வுயிர்க்குஞ் சாட்சி யாகி
முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ
முழுவயிரத் தனிமணியாய் முளைத்த தேவே. **(26)**

வேதாந்த நிலையாகிச் சித்தாந் தத்தின்
மெய்யாகிச் சமரசத்தின் விவேக மாகி
நாதாந்த வெளியாகி முத்தாந் தத்தின்
நடுவாகி நவநிலைக்கும் நண்ணா தாகி
மூதாண்ட கோடியெல்லாந் தாங்கி நின்ற
முதலாகி மனாதீத முத்தி யாகி
வாதாண்ட சமயநெறிக் கமையா தென்றும்
மௌனவியோ மத்தினிடை வயங்குந் தேவே. **(27)**

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர் யோகர்
அறிஞர்மல ரயன்முதலோ ரனந்த வேதம்
களவிறந்துங் கரணாதி யிறந்துஞ் செய்யுங்
கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவு ளாகி
உளவிறந்த வெம்போல்வா ருள்ளத் துள்ளே
ஊறுகின்ற தெள்ளமுத வூற லாகிப்
பிளவிறந்து பிண்டாண்ட முழுதுந் தானாய்ப்
பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே. **(28)**

வாயாகி வாயிறந்த மௌன மாகி
மதமாகி மதங்கடந்த வாய்மை யாகிக்
காயாகிப் பழமாகித் தருவாய் மற்றைக்
கருவிகர ணுதிகளின் கலப்பாய்ப் பெற்ற
தாயாகித் தந்தையாய்ப் பிள்ளை யாகித்
தானுகி நானுகிச் சகல மாகி
ஓயாத சத்தியெலா முடைய தாகி
ஒன்றுகிப் பலவாகி யோங்குந் தேவே. (29)

பொன்னுகி மணியாகிப் போக மாகிப்
புறமாகி யகமாகிப் புனித மாகி
மண்ணுகி மலையாகிக் கடலு மாகி
மதியாகி ரவியாகி மற்று மாகி
முன்னுகிப் பின்னுகி நடுவு மாகி
முழுதாகி நாதமுற முழங்கி யெங்கும்
மின்னுகிப் பரவியின்ப வெள்ளந் தேக்க
வியன்கருணைப் பொழிமுகிலாய் விளங்குந் தேவே.

அரிதாகி யரியதினு மரிய தாகி
அநாதியாய் ஆதியாய் அருள தாகிப்
பெரிதாகிப் பெரியதினும் பெரிய தாகிப்
பேதமா யபேதமாய்ப் பிறங்கா நின்ற
கரிதாகி வெளிதாகிக் கலைக ளாகிக்
கலைகடந்த பொருளாகிக் கரணு தீதத்
தெரிதான வெளிநடுவி லருளாம் வண்மைச்
செழுங்கிரணச் சுடராகித் திகழுந் தேவே. (31)

உருவாகி உருவினிலுள் ளுருவ மாகி
உருவத்தி லுருவமாகி யுருவுள் ளொன்றுய்
அருவாகி அருவினிலுள் அருவ மாகி
அருவத்தி லருவாகி அருவுள் ளொன்றுய்க்
குருவாகிச் சத்துவசிற் குணத்த தாகிக்
குணரகிதப் பொருளாகிக் குலவா நின்ற
மருவாகி மலராகி வல்லி யாகி
மகத்துவமா யணுத்துவமாய் வயங்குந் தேவே. (32)

கோவேயென் குணக்குன்றே குன்று ஞானக்
கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக்
காவேமெய் யறிவின்ப மயமே யென்றன்
கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத்
தேவேயத் தேவுக்குந் தெளிய வொண்ணுத்
தெய்வமே வாடாமற் றிகழ்சிற் போதப்

பூவேயப் பூவிலுறு மணமே யெங்கும்
பூரணமாய் நிறைந்தருளும் புனிதத் தேவே. (33)

வானேயவ் வானுலவுங் காற்றே காற்றின்
வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவே நீரில்
தானேயும் புவியேயப் புவியிற் றங்குந்
தாபரமே சங்கமமே சாற்று கின்ற
ஊனேநல் லுயிரேயுள் ளொளியே யுள்ளத்
துணர்வேயவ் வுணர்வுகலந் தூறு கின்ற
தேனேமுக் கனியேசெங் கரும்பே பாகின்
றீஞ்சுவையே சுவையனைத்துந் திரண்ட தேவே. (34)

விண்ணேவின் ணுருவேவின் முதலே விண்ணுள்
வெளியேயவ் வெளிவிளங்கு வெளியே யென்றன்
கண்ணேகண் மணியேகண் ணொளியே கண்ணுட்
கலந்துநின்ற கதிரேயக் கதிரின் வித்தே
தண்ணேதண் மதியேயம் மதியிற் பூத்த
தண்ணமுதே தண்ணமுத சார மேசொற்
பண்ணேபண் ணிசையேபண் மயமே பண்ணின்
பயனேமெய்த் தவர்வாழ்த்திப் பரவுந் தேவே. (35)

யோகமே யோகத்தின் பயனே யோகத்
தொருமுதலே யோகத்தி னோங்குந் தூய
போகமே போகத்தின் பொலிவே போகம்
புரிந்தருளும் புண்ணியமே புனித ஞான
யாகமே யாகத்தின் விளைவே யாகத்
திறையேயவ் விறைபுரியு மின்பே யன்பர்
மோகமே மோகமெலா மழித்து வீறு
மோனமே மோனத்தின் முளைத்த தேவே. (36)

கோதகன்ற யோகர்மனக் குகையில் வாழுங்
குருவேசண் முகங்கொண்ட கோவே வஞ்ச
வாதகன்ற ஞானியர்தம் மதியி லூறும்
வானமுதே யானந்த மழையே மாயை
வேதகன்ற முத்தர்களை விழுங்கு ஞான
வேழமே மெய்யின்ப விருந்தே நெஞ்சில்
தீதகன்ற மெய்யடியார் தமக்கு வாய்த்த
செல்வமே யெல்லையிலாச் சீர்மைத் தேவே. (37)

வன்புகலந் தறியாத மனத்தோர் தங்கள்
மனங்கலந்து மதிகலந்து வயங்கா நின்ற
என்புகலந் தூன்கலந்து புலன்க ளோடும்
இந்திரிய மவைகலந்துள் ளியங்கு கின்ற

அன்புகலந் தறிவுகலந் துயிரைம் பூதம்
ஆன்மாவுங் கலந்துகலந் தண்ணித் தூறி
இன்புகலந் தருள்கலந்து துளும்பிப் பொங்கி
எழுங்கருணைப் பெருக்காறே யின்பத் தேவே. (38)

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீச
தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல் வீச
எண்ணமுதப் பளிக்குநிலா முற்றத் தேயின்
னிசைவீசத் தண்பனிநீ ரெடுத்து வீசப்
பெண்ணமுத மனையவர்விண் ணமுத மூட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிறப்பட் டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்து மின்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுட் டேவே. (39)

சுழியாத வருட்கருணைப் பெருக்கே யென்றுந்
தூண்டாத மணிவிளக்கின் சோதி யேவான்
ஒழியாது கதிர்ப்பரப்புஞ் சுடரே யன்பர்க்
கோவாத வின்பருளு மொன்றே விண்ணோர்
விழியாலு மொழியாலு மனத்தி னாலும்
விழைதருமெய்த் தவத்தாலும் விளம்பு மெந்த
வழியாலுங் கண்டுகொளற் கரிதாய்ச் சுத்த
மௌனவெளி யூடிருந்து வயங்குந் தேவே. (40)

அலைகடலும் புவிவரையு மனல்கா னீரும்
அந்தரமு மற்றையகி லாண்டம் யாவும்
நிலைகுலையா வண்ணமருள் வெளியி னூடு
நிரைநிரையா நிறுத்தியுயிர் நிகழும் வண்ணம்
தலைகுலையாத் தத்துவஞ்செய் திரோதை யென்னுந்
தனியாணை நடத்தியருட் டலத்தி லென்றும்
மலைவறவீற் றிருந்தருளு மரசே முத்தி
வழித்துணையே விழித்துணையுண் மணியாந் தேவே.

வரம்பழுத்த நெறியேமெய்ந் நெறியி லின்ப
வளம்பழுத்த பெருவாழ்வே வானோர் தங்கள்
சிரம்பழுத்த பதப்பொருளே யறிவா னந்த
சிவம்பழுத்த வநுபவமே சிதாகா சத்திற்
பரம்பழுத்த நடத்தரசே கருணை யென்னும்
பழம்பழுத்த வான்தருவே பரம ஞானத்
திரம்பழுத்த யோகியர்தம் யோகத் துள்ளே
தினம்பழுத்துக் கனிந்தவருட் செல்வத் தேவே. (42)

உடல்குளிர வுயிர்தழைக்க வுணர்ச்சி யோங்க
உளங்கனிய மெய்யன்ப ருள்ளத் தூடே

கடலனைய பேரின்பந் துளும்ப நாளுங்
கருணைமலர்த் தேன்பொழியுங் கடவுட் காவே
விடலரிய வெம்போல்வா ரிதயந் தோறும்
வேதாந்த மருந்தளிக்கும் விருந்தே வேதந்
தொடலரிய வெளிமுழுதும் பரவி ஞானச்
சோதிவிரித் தொளிர்கின்ற சோதித் தேவே. (43)

பொங்குபல சமயமெனு நதிக ளெல்லாம்
புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி யோங்குங்
கங்குகரை காணாத கடலே யெங்குங்
கண்ணுகைக் காண்கின்ற கதியே யன்பர்
தங்கநிழல் பரப்பிமயற் சோடை யெல்லாந்
தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச்
செங்குமுத மலரவரு மதியே யெல்லாஞ்
செய்யவல்ல கடவுளே தேவ தேவே. (44)

பற்றறியா முத்தர்தமை யெல்லாம் வாழைப்
பழம்போல விழுங்குகின்ற பரமே மாசு
பெற்றறியாப் பெரும்பதமே பதத்தைக் காட்டும்
பெருமானே யானந்தப் பேற்றின் வாழ்வே
உற்றறியா தின்னுமின்னு மறைக ளெல்லாம்
ஓலமிட்டுத் தேடநின்ற வொன்றே யொன்றுங்
கற்றறியாப் பேதையேன் றனக்கு மின்பங்
கனிந்தளித்த வருட்கடலே கருணைத் தேவே. (45)

எழுத்தறிந்து தமையுணர்ந்த யோக ருள்ளத்
தியலறிவாந் தருவினிலன் பெனுமோ ருச்சி
பழுத்தளிந்து மௌனநறுஞ் சுவைமேற் பொங்கிப்
பதம்பொருந்த வநுபவிக்கும் பழமே மாயைக்
கழுத்தரிந்து கருமமலத் தலையை வீசுங்
கடுந்தொழிலோர் தமக்கேநற் கருணை காட்டி
விழுத்துணையா யமர்ந்தருளும் பொருளே மான
வெளியினிறை யானந்த விளைவாந் தேவே. (46)

என்னுயிர்நீ யென்னுயிர்க்கோ ருயிரு நீயென்
இன்னுயிர்க்குத் துணைவனீ யென்னை யீன்ற
அன்னைநீ யென்னுடைய அப்பனீ யென்
அரும்பொருணீ யென்னிதயத் தன்பு நீயென்
நன்னெறிநீ யெனக்குரிய வுறவு நீயென்
நற்குருநீ யெனைக்கலந்த நட்பு நீயென்
றன்னுடைய வாழ்வுநீ யென்னைக் காக்குந்
தலைவனீ கண்மூன்று தழைத்த தேவே. (47)

ஆனேறும் பெருமானே அரசே யென்றன்
ஆருயிருக் கொருதுணையே அமுதே கொன்றைத்
தேனேறு மலர்ச்சடையெஞ் சிவனே தில்லைச்
செழுஞ்சுடரே ஆனந்தத் தெய்வ மேயென்
ஊனேறு முயிர்க்குணிறை யொளியே யெல்லாம்
உடையானே நின்னடிச்சீ ருன்னி யன்பர்
வானேறு கின்றார்நா னொருவன் பாவி
மண்ணேறி மயக்கேறி வருந்துற் றேனே. (48)

அன்னையினும் பெரிதினிய கருணை யூட்டும்
ஆரமுதே யென்னுறவே அரசே யிந்த
மன்னுலகி லடியேனை யென்னே துன்ப
வலையிலகப் படவியற்றி மறைந்தா யந்தோ
பொன்னைமதித் திடுகின்றோர் மருங்கே சூழ்ந்து
போனகமும் பொய்யுறவும் பொருந்த லாற்றேன்
என்னையுளங் கொள்ளுதியோ கொள்கி லாயோ
என்செய்வே னென்செய்வே னென்செய்வேனே. (49)

மத்தேறி யலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்தி னோடு
பித்தேறி யுழல்கின்ற மனத்தா லந்தோ
பேயேறி நலிகின்ற பேதை யானேன்
வித்தேறி விளைவேறி மகிழ்கின் றோர்போன்
மேலேறி யன்பரெலாம் விளங்கு கின்றார்
ஒத்தேறி யுயிர்க்குயிராய் நிறைந்த வெங்கள்
உடையானே யிதுதகுமோ வுணர்கி லேனே. (50)

மதியணிந்த முடிக்கனியே மணியே யெல்லாம்
வல்லவருட் குருவேநின் மலர்த்தாள் வாழ்த்திக்
கதியணிந்தா ரன்பரெலா மடியே னொன்றுங்
கண்டறியேன் கருமத்தாற் கலங்கி யந்தோ
பொதியணிந்து திரிந்துழலு மேறு போலப்
பொய்யுலகிற் பொய்சுமந்து புலம்பா நின்றேன்
துதியணிந்த நின்னருளென் றனக்கு முண்டோ
வின்றெனிலிப் பாவியேன் சொல்வ தென்னே. (51)

கற்றவளை தனக்குமுண வளிக்கு முன்றன்
கருணைநிலை தனையறியேன் கடையே னிங்கே
எற்றவளை யெறும்பேபோற் றிரிந்து நாளும்
இளைத்துநின தருள்காணு தெந்தா யந்தோ

பெற்றவளைக் காணாத பிள்ளை போலப்
பேதுறுகின் றேன்செய்யும் பிழையை நோக்கி
இற்றவளைக் கேள்விடல்போல் விடுதி யேல்யான்
என்செய்வே னெங்குறுவே னென்சொல் வேனே. (52)

எம்பெருமா னின்விளையாட் டென்சொல் கேனான்
ஏதுமறி யாச்சிறியே னெனைத்தா னிங்கே
செம்புனலாற் குழைத்தபுலாற் சுவர்சூழ் பொத்தைச்
சிறுவீட்டி லிருட்டறையிற் சிறைசெய் தந்தோ
கம்பமுறப் பசித்தழலுங் கொளுந்த வந்தக்
கரணமுதற் பொறிபுலப்பேய் கவர்ந்து சூழ்ந்து
வம்பியற்றக் காமாதி யரட்ட ரெல்லாம்
மடிபிடித்து வருத்தவென்றோ வளர்த்தா யெந்தாய்.

அம்பரத்தே யானந்த வடிவா லென்றும்
ஆடுகின்ற மாமணியே அரசே நாயேன்
இம்பரத்த மெனுமுலக நடையி லந்தோ
இடருழந்தேன் பன்னெறியி லெனையி ழுத்தே
பம்பரத்தி னுடியலைப் படுத்து மிந்தப்
பாவிமன மெனக்குவயப் படுவ தில்லை
கொம்பரற்ற விளங்கொடிபோற் றளர்ந்தேன் என்னைக்
குறிக்கொள்ளக் கருதுதியோ குறித்தி டாயே. (54)

பொன்மலையோ சிறிதெனப்பே ராசை பொங்கிப்
புவிநடையிற் பற்பலகாற் போந்து போந்து
நென்மலையோ நிதிமலையோ வென்று தேடி
நிலைகுலைந்த தன்றியுனை நினைந்து நேடி
மன்மலையோ மாமணியோ மருந்தோ வென்று
வழுத்தியதே யில்லையிந்த வஞ்ச நெஞ்சங்
கன்மலையோ விரும்போசெம் மரமோ பாறைக்
கருங்கல்லோ பராய்முருட்டுக் கட்டை யேயோ. 55

நற்றாயும் பிழைகுறிக்கக் கண்டோ மிந்த
நானிலத்தே மற்றவர்யார் நாடார் வீணே
பற்றாயு மவர்தமைநாம் பற்றேம் பற்றிற்
பற்றாத பற்றுடையார் பற்றி யுள்ளே
உற்றாயுஞ் சிவபெருமான் கருணை யொன்றே
உறுபிழைக ளெத்துணையும் பொறுப்ப தென்றுன்
பொற்றாளை விரும்பியது மன்று ளாடும்
பொருளேயென் பிழையனைத்தும் பொறுக்கவன்றே.

அருளுடைய பரம்பொருளே மன்றி லாடும்
ஆனந்தப் பெருவாழ்வே அன்பு ளோர்தந்

தெருளுடைய உளமுழுதுங் கோயில் கொண்ட
சிவமேமெய் யறிவுருவாந் தெய்வ மேயிம்
மருளுடைய மனப்பேதை நாயி னேன்செய்
வன்பிழையைச் சிறிதேனு மதித்தி யாயில்
இருளுடைய பவக்கடல்விட் டேற னென்னை
யேற்றுவதற் கெண்ணுகவென் இன்பத் தேவே. (57)

## 4. திருவருள் முறையீடு

அருளர சேயருட் குன்றேமன் றுடு மருளிறையே
அருளமு தேயருட் பேறே நிறைந்த வருட்கடலே
அருளணி யேயருட் கண்ணேவிண் ணேங்கு மருளொளியே
அருளற மேயருட் பண்பேமுக் கண்கொ ளருட்சிவமே. (58)

நான்படும் பாடு சிவனே யுலகர் நவிலும்பஞ்சு [மோ
தான்படு மோசொல்லத் தான்படு மோவெண்ணத் தான்படு
கான்படு கண்ணியின் மான்படு மாறு கலங்கிநின்றேன்
ஏன்படு கின்றனை யென்றிரங் காயென்னி லென்செய்வனே.

மின்போலுஞ் செஞ்சடை வித்தக னேயொளி மேவியசெம்
பொன்போலு மேனியெம் புண்ணிய னேயெனைப் போற்றிப்
[பெற்ற
தன்போலுந் தாய்தந்தை யாயிரம் பேரிருந் தாலுமந்தோ
நின்போலு மன்புடை யாரெனக் காரிந்த நீணிலத்தே. (60)

அரும்பொரு ளேயென் னரசேயென் னுருயிர்க் காகவந்த
பெரும்பொரு ளேயருட் பேறே சிவாநந்தம் பெற்றவர்பால்
வரும்பொரு ளேமுக்கண்மா மணியேநின் வழியருளால்
தரும்பொரு ளேபொரு ளென்றுவந் தேனெனைத் தாங்கிக்
[கொள்ளே. (61)

அடுத்தார் தமையென்று மேலோர்விடார்க ளவர்க்குப்பிச்சை
எடுத்தா யினுமிடு வார்களென் பாரதற் கேற்கச் சொற்பூத்
தொடுத்தாரொருவர்க்குக் கச்சூரி லேபிச்சைச்சோறெடுத்துக்
கொடுத்தாய்நின் பேரரு ளென்சொல்லு கேனெண்
[குணக்குன்றமே. (62)

நடும்பாட்டை நாவலன் வாய்த்திருப் பாட்டை நயந்திட்டநீ
குடும்பாட்டை மேற்கொண்ட வென்றமிழ்ப் பாட்டையுங்
[கொண்டெனுள்ளத்
திடும்பாட்டை நீக்கிலை யென்னினுந் துன்பத் திழுக்குற்றுநான்
படும்பாட்டை யாயினும் பார்த்திரங் காயெம் பரஞ்சுடரே.

மடல்வற்றி ஞாலு மணம்வற் றுறுத மலரெனவென்
உடல்வற்றி ஞாலுமென் னுள்வற்று மோதுய ருள்ளவெல்லாம்
அடல்வற் றுறுதநின் ருட்கன்றி யீங்கய லார்க்குரையேன்
கடல்வற்றி ஞாலுங் கருணைவற் ருதமுக் கண்ணவனே, (64)

அருட்கட லேயக் கடலமு தேயவ் வமுதத்துற்ற
தெருட்சுவை யேயச் சுவைப்பய னேமறைச் சென்னிநின்ற
பொருட்பத மேயப் பதத்தர சேநின் புகழ்நினையா
இருட்குண மாயை மனத்தே னையுமுவந் தேன்றுகொள்ளே.

வன்பட்ட கூடலில் வான்பட்ட வையை வரம்பிட்டநின்
பொன்பட்ட மேனியிற் புண்பட்ட போதிற் புவிநடையாந்
துன்பட்ட வீரரந் தோவாத வூரர்தந் தூயநெஞ்சம்
என்பட்ட தோவின்று கேட்டவென் னெஞ்ச மிடிபட்டதே

நானடங் காதொரு நாட்செயுங் குற்ற நடக்கையெல்லாம்
வானடங் காதிந்த மண்ணடங் காது மதிக்குமண்டந்
தானடங் காதெங்குந் தானடங் காதெனத் தானறிந்து
மானடங் காட்டு மணியெனை யாண்டது மாவியப்பே. (67)

வலைப்பட்ட மானென வாட்பட்டகண்ணியர்மையலென்னும்
புலைப்பட்ட பேய்க்கு விலைப்பட்ட நான்மதி போய்ப்புலம்ப
விலைப்பட்ட விம்மன மந்தோவிவ் வேழைக்கென் றெங்கிருந்து
தலைப்பட்ட தோவிதற் கென்செய்கு வேன்முக்கட் சங்கரனே.

ஊர்தரு வார்நல்ல ஊண்தரு வாருடை யுந்தருவார்
பார்தரு வாருழற் கேர்தரு வார்பொன் பணந்தருவார்
சோர்தரு வாருள் ளறிவுகெ டாமற் சுகிப்பதற்கிங்
கார்தரு வாரம்மை யார்தரு பாகனை யன்றிநெஞ்சே. (69)

சேலுக்கு நேர்விழி மங்கைபங் காவென் சிறுமதிதான்
மேலுக்கு நெஞ்சையுட் காப்பது போனின்று வெவ்விடய
மாலுக்கு வாங்கி வழங்கவுந் தான்சம் மதித்ததுகாண்
பாலுக்குங் காவல் வெம் பூனைக்குந் தோழனென் பாரிதுவே.

பதியே சரணம் பரமே சரணம் பரம்பரமாந்
திதியே சரணஞ் சிவமே சரணஞ் சிவமுணர்ந்தோர்
கதியே சரணமென் கண்ணே சரணமுக் கட்கருணை
நிதியே சரணஞ் சரணமென் பான்மெய்ந் நிலையருளே (71)

என்னுற வேயென் குருவேயென் னுள்ளத் தெழுமின்பமே
யென்னுயி ரேயென்ற னன்பே நிலைபெற்ற வென்செல்வமே
யென்னறி வேயென்றன் வாழ்வேயென் வாழ்வுக் கிடுமுதலே
யென்னர சேயென் குலதெய்வ மேயெனை யேன்றுகொள்ளே.

*நிலையறி யாத குடும்பத் துயரென்னு நீத்தத்திலே*
*தலையறி யாது விழுந்தேனை யாண்டரு டானளிப்பாய்*
*அலையறி யார் கடலேமுக் கண்கொண்ட வாரமுதே*
*விலையறி யாத மணியே விடேலிதென் விண்ணப்பமே. (73)*

இரையேற்று துன்பக் குடும்ப விகார விருட்கடலிற்
புரையேற்று நெஞ்சம் புலர்ந்துநின் றேனைப் பொருட்படுத்திக்
கரையேற்ற வேண்டுமென் கண்ணே பவத்தைக் கடிமருந்தே
திரையேற்று செஞ்சடைத் தேவே அமரர் சிகாமணியே. (74)

போற்றியென் ஞவித் துணையேயென் னன்பிற் புகுஞ்சிவமே
போற்றியென் வாழ்வின் பயனேயென் னின்பப் புதுநறவே
போற்றியென் கண்ணுண் மணியேயென் னுள்ளம் [புனையணியே
போற்றியென் ஞேர்பெருந் தேவே கருணை புரிந்தருளே. (75)

## 5. வடிவுடை மாணிக்கமாலை

சீர்கொண்ட வொற்றிப் பதியுடை யானிடஞ் சேர்ந்தமணி
வார்கொண்ட கொங்கை வடிவாம் பிகைதன் மலரடிக்குத்
தார்கொண்ட செந்தமிழ்ப் பாமாலை சாத்தத் தமியனுக்கே
ஏர்கொண்ட நல்லரு ளீயுங் குணலய வேரம்பனே (76)

கடலமு தேசெங் கரும்பே யருட்கற் பகக்கனியே
உடலுயி ரேயுயிர்க் குள்ளுணர் வேயுணர் வுள்ளொளியே
அடல்விடை யாரொற்றி யாரிடங்கொண்ட வருமருந்தே
மடலவிழ் ஞான மலரே வடிவுடை மாணிக்கமே. (77)

அணியே யணிபெறு மொற்றித் தியாகர்தம் மன்புறுசற்
குணியேயெம் வாழ்க்கைக் குலதெய்வ மேமலைக் கோன்றவமே
பணியேன் பிழைபொறுத் தாட்கொண்ட தெய்வப் பதிகொள் [சிந்தா
மணியே யென்கண்ணுண் மணியே வடிவுடை மாணிக்கமே.

உன்னே ரருட்டெய்வங் காணேன் மனத்து முரைக்கப்படாப்
பொன்னேயப் பொன்னற் புதவொளியே மலர்ப் [பொன் வணங்கும்
அன்னேயெம் மாருயிர்க் கோருயிரே யொற்றி யம்பதிவாழ்
மன்னே ரிடம்வளர் மின்னே வடிவுடை மாணிக்கமே. (79)

கண்ணேயக் கண்ணின் மணியே மணியிற் கலந்தொளிசெய்
விண்ணே வியனொற்றி யூரண்ணல் வாமத்தில் வீற்றிருக்கும்
பெண்ணே மலைபெறும் பெண்மணியே தெய்வப் பெண்ணமுதே
மண்ணேய நீத்தவர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே (80)

பொன்னேடு வாணியென் போரிரு வோரும் பொருணற்கல்வி
தன்னோ டருளுந் திறநின்குற் றேவலைத் தாங்கிநின்ற
பின்னே வலததன் முன்னே தெளிந்திடப் பேசுகநீ
மன்னே டெழிலொற்றி யூர்வாழ் வடிவுடை மாணிக்கமே.

காமட் டலர்திரு வொற்றிநின் னாயகன் கந்தைசுற்றி
யேமட் டரையொடு நிற்பது கண்டு மிரங்கலர்போல்
நீமட்டு மேபட் டுடுக்கின் றனையுன்ற னேயமென்னே
மாமட் டலர்குழன் மானே வடிவுடை மாணிக்கமே. (82)

சேய்க்குற்றந் தாய்பொறுத் தேடா வருகெனச் செப்புவளிந்
நாய்க்குற்ற நீ பொறுத் தாளுதல் வேண்டு நவின்மதியின்
தேய்க்குற்ற மாற்றுந் திருவொற்றி நாதர்தந் தேவியன்பர்
வாய்க்குற்ற நீக்கு மயிலே வடிவுடை மாணிக்கமே. (83)

வான்றேட நான்கு மறைதேட மாலுடன் வாரிசமே
லான்றேட மற்றை யருந்தவர் தேடவென் னன்பின்மையால்
யான்றேட வென்னுளஞ் சேரொற்றி யூரெம் மிருநிதியே
மான்றேடும் வாட்கண் மயிலே வடிவுடை மாணிக்கமே. (84)

ஓவா தயன்முத லோர்முடி கோடி யுறழ்ந்துபடில்
ஆவா வனிச்சம் பொருமலர்ச் சிற்றடி யாற்றுங்கொலோ
காவா யிமயப்பொற் பாவா யருளொற்றிக் காமர்வல்லி
வாவா வெனுமன்பர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே. (85)

பன்னும்பல் வேறண்ட மெல்லாமவ் வண்டப் பரப்பினின்று
துன்னுஞ் சராசரம் யாவையு மீன்றது சூழ்ந்துமுன்னே
யின்னு மிளந்தை யழியாத கன்னிகை யென்பதென்னே
மன்னுஞ் சுகாநந்த வாழ்வே வடிவுடை மாணிக்கமே. (86)

எழுதா வெழிலுயிர்ச் சித்திர மேயின் னிசைப்பயனே
தொழுதாடு மன்பர்த முட்களிப் பேசிற் சுகக்கடலே [யே
செழுவார் மலர்ப்பொழி லொற்றியெம் மான்றன் றிருத்துணை
வழுவா மறையின் பொருளே வடிவுடை மாணிக்கமே. (87)

தீதுசெய் தாலுநின் னன்பர்க டம்முன் செருக்கிநின்று
வாதுசெய் தாலுநின் றுண்மறந் தாலு மதியிலியேன்
ஏதுசெய் தாலும் பொறுத்தருள் வாயொற்றி யின்னிடைப்பூ
மாதுசெய் தாழ்குழன் மானே வடிவுடை மாணிக்கமே (88)

என்போற் குணத்தி லிழிந்தவ ரில்லையெப் போதுமெங்கும்
நின்போ லருளிற் சிறந்தவ ரில்லையிந் நீர்மையினாற்
பொன்போலு நின்னரு ளென்னே யெனக்கும் புரிதிகண்டாய்
மன்போ லுயரொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே.(89)

வேதங்க ளா யொற்றி மேவுஞ்சிவத்தின் விளைவருளாய்ப்
பூதங்க ளாய்ப்பொறி யாய்ப்புல னாகிப் புகல்கரண
பேதங்க ளாயுயி ராகிய நின்னையிப் பேதையென்வாய்
வாதங்க ளாலறி வேனோ வடிவுடை மாணிக்கமே. (90)

மதியே மதிமுக மானே யடியர் மனத்துவைத்த
நிதியே கருணை நிறைவே சுகாநந்த நீணிலையே
கதியே சுதிவழி காட்டுங்கண் ணேயொற்றிக் காவலர்பால்
வதியே ரிளமட மானே வடிவுடை மாணிக்கமே. (91)

தாயே மிகவுந் தயவுடை யாளெனச் சாற்றுவரிச்
சேயேன் படுந்துயர் நீக்கவென் னேயுளஞ் செய்திலையே
நாயேன் பிழையினி நாடாது நல்லரு ளல்கவரு
வாயேயெம் மொற்றி மயிலே வடிவுடை மாணிக்கமே. (92)

பூவாய் மலர்க்குழற் பூவாய்மெய் யன்பர் புனைந்ததமிழ்ப்
பாவாய் நிறைந்தபொற் பாவாய்செந் தேனிற் பகர்மொழி
[யாய்
காவா யெனவயன் காவாய் பவனுங் கருதுமலர்
மாவா யெழிலொற்றி வாழ்வே வடிவுடை மாணிக்கமே (93)

கற்பதுங் கேட்பது மெல்லாநின் னற்புதக் கஞ்சமலர்ப்
பொற்பதங் காணும் பொருட்டென வெண்ணுவர்
[புண்ணியரே
சொற்பத மாயவைக் கப்புற மாய்நின்ற தூய்ச்சுடரே
மற்பதஞ் சேரொற்றி வாழ்வேவடிவுடை மாணிக்கமே. (94)

நின்னால் எனக்குள எல்லா நலனும் நினையடைந்த
என்னால் உனக்குள தென்னைகண் டாயெமை ஈன்றவளே
முன்னால் வருக்கருள் ஒற்றியெம் மான்கண் முழுமணியே
மன்னான் மறையின் முடிவே வடிவுடை மாணிக்கமே. (95)

நேயானு கூல மனமுடை யாயினி நீயுமென்றன்
தாயாகில் யானுன் தனயனும் ஆகிலென் றன்னுளத்தில்
ஓயா துறுந்துயர் எல்லாந் தவிர்த்தருள் ஒற்றியிற்செவ்
வாயா ரமுத வடிவே வடிவுடை மாணிக்கமே. (96)

பொன்னுடை யாரன்றிப் போற்றுநற் கல்விப் பொருளுடை
[யார்
என்னுடை யாரென வேசுகின் றாரிஃ தென்னையன்னே [ண்
மின்னுடை யாய்மின்னிற் றுன்னிடை யாயொற்றிமேவுமுக்க
மன்னுடை யாயென் னுடையாய் வடிவுடை மாணிக்கமே.

வாழிநின் சேவடி போற்றிநின் பூம்பத வாரிசங்கள்
வாழிநின் றாண்மலர் போற்றிநின் தண்ணளி வாழிநின்சீர்
வாழியென் னுள்ளத்தி னீயுநின் னொற்றி மகிழ்நருநீ
வாழியென் னுருயிர் வாழ்வே வடிவுடை மாணிக்கமே. (98)

## இரண்டாவது திருமுறை

### 1. புண்ணிய விளக்கம்

பாடற் கினிய வாக்களிக்கும் பாலுஞ் சோறும் பரிந்தளிக்கும்
கூடற் கினிய வடியவர்தங் கூட்டமளிக்குங் குணமளிக்கும்
ஆடற் கினிய நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
தேடற் கினிய சீரளிக்குஞ் சிவாய நமவென் றிடுநீறே (1)

கருமா லகற்றும் பிறப்பதனைக் களையு நெறியுங் காட்டுவிக்கும்
பெருமா லதனுன் மயக்குகின்றபேதை மடவார் நசையறுக்கும்
அருமா லுழந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
திருமா லயனுந் தொழுதேத்துஞ் சிவாய நமவென் றிடுநீறே.

எண்ண வினிய வின்னமுதை யின்பக் கருணைப் பெருங்கடலை
உண்ண முடியாச் செழுந்தேனை யொருமால் விடைமேற்
[காட்டுவிக்கும்
அண்ண லினையா னெஞ்சேநீ யஞ்சே லென்மேலாணைகண்டாய்
திண்ண மளிக்குந் திறமளிக்குஞ்சிவாயநமவென் றிடுநீறே. (3)

உற்ற விடத்தி லுதவநமக் குடையோர் வைத்த வைப்பதனைக்
கற்றமனத்திற் புகுங்கருணைக் கனியைவிடைமேற்காட்டுவிக்கு
மற்ற மடைந்த நெஞ்சேநீ யஞ்சே லென்மே லாணைகண்டாய்
செற்ற மகற்றித்திறலளிக்குஞ்சிவாயநம வென் றிடுநீறே. (4)

### 2. அருள்நாம விளக்கம்

வாது செய்ம் மட வார்தமை விழைந்தாய்
மறலி வந்துனை வாவென வழைக்கில்
ஏது செய்வையோ ஏழைநீ யந்தோ
எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
போது வைகிய நான்முகன் மகவான்
புணரி வைகிய பூமகள் கொழுநன்
ஓது மோஞ்சிவ சண்முக சிவவோம்
ஓம்சி வாயவென் றுன்னுதி மனனே. (5)

நிலவு மொண்மதி முகத்தியர்க் குழன்றாய்
  நீச நெஞ்சர்தம் நெடுங்கடை தனிற்போய்
இலவு காத்தனை யென்னநின் மதியோ
  எழில்கொ ளொற்றியூர்க் கென்னுடன் போந்து
பலவு மாய்ந்துநன் குண்மையை யுணர்ந்த
  பத்த ருள்ளகப் பதுமங்க டோறும்
உலவு மோஞ்சிவ சண்முக சிவவோம்
  ஓம்சி வாயவென் றுன்னுதி மனனே. (6)

## 3. ஸ்ரீ சிவசண்முக நாமசங்கீர்த்தன லகரி

பழுது நேர்கின்ற வஞ்சகர் கடைவாய்
  பற்றி நின்றதிற் பயனெது கண்டாய்
பொழுது போகின்ற தெழுதியென் னெஞ்சே
  பொழில்கொ ளொற்றியம் புரிதனக் கேகி
தொழுது சண்முக சிவசிவ வெனநந்
  தோன்ற லார்தமைத் துதித்தவர் திருமுன்
பழுது சொல்லுது மையுற லென்மே
  லாணை காணவ ரருள்பெற லாமே. (7)

ஞாலஞ் செல்கின்ற வஞ்சகர் கடைவாய்
  நண்ணி நின்றதி னலமெது கண்டாய்
காலஞ் செல்கின்ற தெழுதியென் னெஞ்சே
  கருது மொற்றியங் கடிநகர்க் கேகிக்
கோலஞ் செய்யருட் சண்முக சிவவோங்
  குழக வோவெனக் கூவிநந் துயராம்
ஆலஞ் சொல்லுது மையுற லென்மே
  லாணை காணவ ரருள்பெற லாமே. (8)

உறைந்து வஞ்சர்பால் குறையிரந் தவமே
  யுழல்கின் றாயினி யுரைக்குமிப் பொழுதுங்
குறைந்து போகின்ற தெழுதியென் னெஞ்சே
  குலவு மொற்றியங் கோநகர்க் கேகி
நிறைந்த சண்முக குருநம சிவவோம்
  நிமல சிற்பர வரகர வெனவே
அறைந்து போற்றுது மையுற லென்மே
  லாணை காணவ ரருள்பெற லாமே. (9)

## 4. நமச்சிவாய சங்கீர்த்தன லகரி

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடன்மறந் தாலும்
கற்ற நெஞ்சகங் கலைமறந் தாலுங்
கண்க ணின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவ ருள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே. (10)

உடையு டுத்திட இடைமறந் தாலும்
உலகு ளோர்பசிக் குணமறந் தாலும்
படையெ டுத்தவர் படைமறந் தாலும்
பரவை தானலைப் பதுமறந் தாலும்
புடைய டுத்தவர் தமைமறந் தாலும்
பொன்னை வைத்தவப் புதைமறந் தாலும்
நடைய டுத்தவர் வழிமறந் தாலும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே. (11)

வன்மை செய்திடும் வறுமைவந் தாலும்
மகிழ்வு செய்பெரு வாழ்வுவந் தாலும்
புன்மை மங்கையர் புணர்ச்சிநேர்ந் தாலும்
பொருந்தி னுலுநின் றுலுஞ்சென் றுலும்
தன்மை யில்லவர் சார்பிருந் தாலும்
சான்ற மேலவர் தமையடைந் தாலும்
நன்மை யென்பன யாவையு மளிக்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே. (12)

இன்னும் பற்பல நாளிருந் தாலும்
இக்க ணந்தனி லேயிறந் தாலும்
துன்னும் வான்கதிக் கேபுகுந் தாலும்
சோர்ந்து மாநர கத்துழன் றுலும்
என்ன மேலுமிங் கெனக்கு வந்தாலும்
எம்பி ரானெனக் கியாதுசெய் தாலும்
நன்னர் நெஞ்சக நாடிநின் றோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே. (13)

## 5. நற்றுணை விளக்கம்

*காவின் மன்னவ னெதிர்க்கினுங் காமன்*
*கணைக ளேவினுங் காலனே வரினும்*
*பூவின் மன்னவன் சீறினும் திருமால்*
*போர்க்கு நேரினும் பொருளல நெஞ்சே*
*ஓவின் மாதுய ரெற்றினுக் கடைந்தா*
*யொன்று மஞ்சனீ யுளவறிந் திலையோ*
*நாவின் மன்னரைக் கரைதனிற் சேர்த்த*
*நமச்சி வாயங்கா ணும்பெறுந் துணையே.* (14)

*ஓடு கின்றனன் கதிரவ னவன்பின்*
*ஓடு கின்றன வொவ்வொரு நாளாய்*
*வீடு கின்றன வென்செய்வோ மினியவ்*
*வெய்ய கூற்றுவன் வெகுண்டிடி லென்றே*
*வாடு கின்றனை யஞ்சலை நெஞ்சே*
*மார்க்கண் டேயர்தம் மாண்பறிந் திலையோ*
*நாடு கின்றவர் நாதன்றன் னாமம்*
*நமச்சி வாயங்கா ணும்பெறுந் துணையே.* (15)

*மாலுந் துஞ்சுவான் மலரவ னிறப்பான்*
*மற்றை வானவர் முற்றிலு மழிவார்*
*ஏலு நற்றுணை யார்நமக் கென்றே*
*யெண்ணி நிற்றியோ யேழைநீ நெஞ்சே*
*கோலு மாயிரங் கோடியண் டங்கள்*
*குலைய நீக்கியு மாக்கியு மளிக்கும்*
*நாலு மாமறைப் பரம்பொரு ளாமம்*
*நமச்சி வாயங்கா ணும்பெறுந் துணையே.* (16)

## 6. திருவருள் வழக்க விளக்கம்

**தோடுடை யார்புலித் தோலுடை யார்கடற் றூங்குமொரு**
**மாடுடை யார்மழு மானுடை யார்பிர மன்றலையாம்**
**ஓடுடை யாரொற்றி யூருடை யார்புக ழோங்கியவெண்**
**காடுடை யார்நெற்றிக் கண்ணுடை யாரெங் கடவுளரே.** (17)

**நாட்டிற் புகழ்பெற்ற நாவுக் கரசர்முன் னாட்பதிகப்**
**பாட்டிற் கிரக்கமில் லீரெம் பிரானெனப் பாடவன்றே**
**ஆட்டிற் கிசைந்த மலர்வாழ்த்தி வேத மமைத்தமறைக்**
**காட்டிற் கதவந் திறந்தன ராலெங் கடவுளரே.** (18)

## 7. முத்திவுபாயம்

சேர நெஞ்சமே தூர மன்றுகாண்
வாரம் வைத்தியேற் சாரும் முத்தியே. (19)

முத்தி வேண்டுமேற் பத்தி வேண்டுமால்
சத்தி யம்மிது புத்தி நெஞ்சமே. (20)

## 8. அவலத்து அழுங்கல்

உள்ளி யோவென வலறிநின் றேத்தி
யுருகி நெக்கிலா வுளத்தன்யா னெனினும்
வள்ளி யோயுனை மறக்கவு மாட்டேன்
மற்றைத் தேவரை மதிக்கவு மாட்டேன்
வெள்ளி யோவெனப் பொன்மகிழ் சிறக்க
விரைந்து மும்மதிள் வில்வளைத் தெரித்தோய்
தெள்ளி யோர்புகழ்ந் தரகர வென்னத்
திகழு மொற்றியூர்த் தியாகமா மணியே. (21)

நிலையி லாவுல கியற்படு மனத்தை
நிறுத்தி லேனொரு நியமமு மறியேன்
விலையி லாமணி யேவுனை வாழ்த்தி
வீட்டு நன்னெறிக் கூட்டென விளம்பேன்
அலையி லார்ந்தெழுந் துரும்பென வலைந்தேன்
அற்ப னேன்றிரு வருளடை வேனே
சிலையி லாரழற் கணைதொடுத் தவனே
திகழு மொற்றியூர்த் தியாகமா மணியே. (22)

## 9. பழமொழிமேல் வைத்துப் பரிவுகூர்தல்

வானை நோக்கிமண் வழிநடப் பவன்போல்
வயங்கு நின்னருள் வழியிடை நடப்பான்
ஊனை நோக்கினே னுயினு மடியேன்
உய்யும் வண்ணநீ யுவந்தருள் புரிவாய்
மானை நோக்கிய ளேக்குடை மலையாண்
மகிழ மன்றிடை மாநடம் புரிவோய்
தேனை நோக்கிய கொன்றையஞ் சடையோய்
திகழு மொற்றியூர்த் தியாகநா யகனே. (23)

வித்தை யின்றியே விளைத்திடு பவன்போன்
மெய்ய நின்னிரு மென்மலர்ப் பதத்திற்
பத்தி யின்றியே முத்தியை விழைந்தேன்
பாவி யேனருட் பண்புற நினையாய்

*மித்தை யின்றியே விளங்கிய வடியார்*
*விழைந்த யாவையுந் தழைந்திட வருள்வோய்*
*சித்தி வேண்டிய முனிவரர் பரவித்*
*திகழு மொற்றியூர்த் தியாகநா யகனே.* **(24)**

*ஓட வுன்னியே வுறங்குகின் றவன்போல்*
*ஓங்கு முத்தம வுன்னருட் கடலில்*
*ஆட வுன்னியே மங்கையர் மயலில்*
*அழுந்து கின்றவெற் கருள்செய நினைவாய்*
*நாட வுன்னியே மாலய னேங்க*
*நாயி னேனுள நண்ணிய பொருளே*
*தேட வுன்னிய மாதவ முனிவர்*
*திகழு மொற்றியூர்த் தியாகநா யகனே.* **(25)**

## 10. அபராதத்து ஆற்றாமை

*தூங்கினேன் சோம்பற் குறைவிட மானேன்*
*தோகையர் மயக்கிடை யழுந்தி*
*யேங்கினே னவமே யிருந்தன னென்னை*
*யென் செய்தாற் றீருமோ வறியேன்*
*வாங்கிமே ருவினை வளைத்திடும் பவள*
*மாமணிக் குன்றமே மருந்தே*
*ஓங்கிவா னளவும் பொழிற்செறி யொற்றி*
*யூர்வரு மென்னுடை யுயிரே.* **(26)**

*மண்ணிலே மயங்கு மனத்தினை மீட்டுன்*
*மலரடி வழுத்திடச் சிறிதும்*
*எண்ணிலேன் கொடிய வேழையே னென்னை*
*யென்செய்தாற் றீருமோ வறியேன்*
*விண்ணிலே விளங்கு மொளியினுள் ளொளியே*
*விடையில்வந் தருள்விழி விருந்தே*
*கண்ணிலே விளங்கு மரும்பெறன் மணியே*
*காட்சியே யொற்றியங் கரும்பே,* **(27)**

*வாதமே புரிவேன் கொடும்புலி யனையேன்*
*வஞ்சக மனத்தினேன் பொல்லா*
*ஏதமே யுடையே னென்செய்வே னென்னை*
*யென்செய்தாற் றீருமோ வறியேன்*
*போதமே யைந்தாம் பூதமே யொழியாப்*
*புனிதமே புதுமணப் பூவே*
*பாதமே சரணஞ் சரணமென் றன்னைப்*
*பாதுகாத் தளிப்பதுன் பரமே.* **(28)**

## 11. அருளியல் விஞவல்

தேனென வினிக்குந் திருவருட் கடலே
தெள்ளிய வமுதமே சிவமே
வானென நிற்குந் தெய்வமே முல்லை
வாயில்வாழ் மாசிலா மணியே
ஊனென நின்ற வுணர்விலே னெனினும்
உன்றிருக் கோயில்வந் தடைந்தால்
ஏனெனக் கேளா திருந்தனை யையோ
வீதுநின் றிருவருட் கியல்போ. (29)

நல்லவர் பெறுநற் செல்வமே மன்றுண்
ஞானநா டகம்புரி நலமே
வல்லவர் மதிக்குந் தெய்வமே முல்லை
வாயில்வாழ் மாசிலா மணியே
புல்லவ னெனினு மடியனே னையா
பொய்யல வுலகறிந் ததுநீ
யில்லையென் றாலும் விடுவனோ சும்மா
விருப்பதுன் றிருவருட் கியல்போ. (30)

## 12. திரு விண்ணப்பம்

தில்லை வாய்ந்த செழுங்கனி யேதிரு
முல்லை வாயின் முதற்சிவ மூர்த்தியே
தொல்லை யேனுன்றன் றூய்திருக் கோயிலின்
எல்லை சேரவின் றெந்தவஞ் செய்ததே. (31)

## 13. காட்சிப் பெருமிதம்

வேலை கொண்ட விடமுண்ட கண்டனே
மாலை கொண்ட வளர்வல்லி கேசனே
பாலை கொண்ட பராபர நீபழஞ்
சேலை கொண்ட திறமிது வென்கொலோ. (32)

கடுத்த தும்பிய கண்டவ கண்டனே
மடுத்த நற்புகழ் வாழ்வல்லி கேசநீ
தொடுத்த கந்தையை நீக்கித் துணிந்தொன்றை
யுடித்து வாரிலை யோவிவ் வுலகிலே. (33)

## 14. கொடைமடப் புகழ்ச்சி

வெள்ளி மாமலை வீடென வுடையீர்
விளங்கும் பொன்மலை வில்லெனக் கொண்டீர்

வள்ளி யீரென நும்மைவந் தடைந்தால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
எள்ளி லெண்ணெய்போ லெங்கணு நின்றீர்
ஏழை யேன்குறை யேனறி யீரோ
வொள்ளி யீருமை யன்றியொன் றறியேன்
ஓங்கு சீரொற்றி யூருடை யீரே. (34)

கல்லை யும்பசும் பொன்னெனப் புரிந்த
கருணை கேட்டுமைக் காதலித் திங்கு
வல்லை வந்துநின் றேற்றிடிற் சிறிதும்
வாய் திறந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
இல்லை நீர்பிச்சை யெடுக்கின் றீரேனும்
இரக்கின் றோர்களு மிட்டுண்பர் கண்டீர்
ஒல்லை யிங்கென துளங்கொண்ட தறிவீர்
ஓங்கு சீரொற்றி யூருடை யீரே. (35)

தாயி லாரென நெஞ்சகந் தளர்ந்தேன்
தந்தை யுந்திருச் சந்நிதி யடைந்தேன்
வாயி லாரென விருக்கின்றீ ரல்லால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
கோயி லாகவென் நெஞ்சகத் தமர்ந்த
குணத்தி னீரென்றன் குறையறி யீரோ
வோயி லாதுநற் றொண்டருக் கருள்வான்
ஓங்கு சீரொற்றி யூருடை யீரே. (36)

## 15. திருவருள் வேட்கை

ஊர்மதிக்க வீணி லுளறுகின்ற தல்லதுநின்
சீர்மதிக்க நின்னடியைத் தேர்ந்தேத்தே னயிடினும்
கார்மதிக்கு நஞ்சமுண்ட கண்டநினைந் துள்குகின்றேன்
ஏர்மதிக்கு மொற்றியூ ரெந்தையளி யெய்தாயோ. (37)

தாய்க்குமினி தாகுமுன்றன் றண்மலரை யேத்தாது
நாய்க்குங் கடையாய் நலிகின்றே னயிடினும்
வாய்க்கு முன்றன் சந்நிதிக்கண் வந்துவந்து வாடுகின்றேன்
தூய்க்குமரன் தந்தாயென் சோர்வறிந்து தீராயோ. (38)

## 16. அபராத விண்ணப்பம்

நாணமொன்றில்லா நாயினேன் பிழையை
நாடிநின் றிருவுளத் தடைத்தே
வீணனென் றையோ கைவிடிற் சிவனே
வேறுநான் யாதுசெய் வேனே

காணநின் றடியர்க் கருள்தரும் பொருளே
கடிமதி லொற்றியூர்க் கரசே
பூணயிற் கரத்தோர் புத்தமு தெழுந்த
புண்ணியப் புனிதவா ரிதியே. (39)

துரும்பினேன் பிழையைத் திருவுளத் தடையேற்
றுய்யநின் னருட்கட லாட
விரும்பினே னையோ கைவிடிற் சிவனே
வேறுநான் யாதுசெய் வேனே
கரும்பினேர் மொழியா ரிருவரை மணக்குங்
கனிதனை யளித்தகற் பகமே
இரும்பினேர் நெஞ்ச ரெனினுமென் போல்வார்க்
கின்னரு டருமொற்றி யிறையே. (40)

## 17. அறிவரும் பெருமை

நாயினுங் கடையே னென்செய்வேன் பிணியா
னலிகின்ற நலிவினை யறிந்துந்
தாயினு மினியா யின்னுநீ வரவு
தாழ்த்தனை யென்னெவென் றறியேன்
மாயினு மல்லால் வாழினு நினது
மலரடி யன்றியொன் றேத்தேன்
காயினு மென்னைக் கனியினு நின்னைக்
கனவினும் விட்டிடேன் நானே. (41)

கரைபடா வஞ்சப் பவக்கட லுழக்குங்
கடையனேன் நின்திரு வடிக்கு
விரைபடா மலர்போ லிருந்துழல் கின்றேன்
வெற்றனே னென்செய விரைகேன்
திரைபடாக் கருணைச் செல்வவா ரிதியே
திருவொற்றி யூர்வளர் தேனே
உரைபடாப் பொன்னே புரைபடா மணியே
உண்ணுதற் கினியநல் லமுதே. (42)

## 18. எழுத்தறியும் பெருமான்மாலை

சிந்தை மயங்கித் தியங்குகின்ற நாயேனை
முந்தை வினைதொலைத்துன் மொய்கழற்கா ளாக்காதே
நிந்தையுறு நோயா னிகழவைத்தல் நீதியோ
எந்தைநீ யொற்றி யெழுத்தறியும் பெருமானே. (43)

மைப்படியுங் கண்ணார் மயலுழக்கச் செய்வாயோ
கைப்படிய வுன்றன் கழல்கருதச் செய்வாயோ
இப்படியென் றப்படியென் றென்னறிவே னுன்சித்தம்
எப்படியோ வையா வெழுத்தறியும் பெருமானே. (44)

தீதறிவே னன்கணுவுஞ் செய்யேன்வீ ணுட்போக்கும்
வாதறிவேன் வஞ்சகனேன் வல்வினையேன் வாய்மையிலேன்
சூதறிவேன் மாலயனுஞ் சொல்லரிய நின்பெருமை
யாதறிவே னையா வெழுத்தறியும் பெருமானே. (45)

உண்ணுடும் வல்வினையா லோயாப் பிணியுழந்து
புண்ணாக நெஞ்சம் புழுங்குகின்றேன் புண்ணியனே
கண்ணாளா உன்றன் கருணை யெனக்களிக்க
எண்ணுயோ வையா வெழுத்தறியும் பெருமானே. (46)

சங்குடையான் தாமரையான் தாண்முடியுங் காண்பரிதாங்
கொங்குடைய கொன்றைக் குளிர்ச்சடையாய் கோதையொரு
பங்குடையா யேழைமுகம் பாராது தள்ளிவிட்டால்
எங்கடைவே னையா வெழுத்தறியும் பெருமானே. (47)

பூமாந்தும் வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்கள்
தாமாந்தி நின்னடிக்கீழ்ச் சார்ந்துநின்ரு ரையோநான்
காமாந்த காரமெனுங் கள்ளுண்டு கண்மூடி
ஏமாந்தே னெற்றி யெழுத்தறியும் பெருமானே. (48)

பன்னருமிப் பார்நடையிற் பாடுழன்ற பாதகனேன்
துன்னியநின் பொன்னடியைச் சூழாதே ணுயிடினும்
புன்னிகரேன் குற்றம் பொறுக்கப் பொறுப்புனக்கே
என்னருமைத் தாய்நீ யெழுத்தறியும் பெருமானே. (49)

வீட்டுக் கடங்கா விளையாட்டுப் பிள்ளையெனத்
தேட்டுக் கடங்காத தீமனத்தா லாந்துயரம்
பாட்டுக் கடங்காநின் பத்தரடிப் புகழ்போல்
ஏட்டுக் கடங்கா தெழுத்தறியும் பெருமானே. (50)

பொன்னைமதித் தையாநின் பொன்னடியைப் போற்ருத
கன்னிகரு நெஞ்சாற் கலங்குகின்ற கைதவனேன்
இன்ன லுழக்கின்ற வேழைகட்கு மேழைகண்டாய்
என்னை விடாதே யெழுத்தறியும் பெருமானே. (51)

ஒல்லையே நஞ்சனைத்து முண்ட தயாநிதிநீ
அல்லையோ நின்றிங் கயர்வேன்முன் வந்தொருசொற்
சொல்லையோ வொற்றியூர்த் தூயதிருக் கோயிலுணீ
இல்லையோ வையா வெழுத்தறியும் பெருமானே. (52)

## 19. நெஞ்சொடு நேர்தல்

வேண்டு நெஞ்சமே மேவி யொற்றியூர்
ஆண்டு நின்றரு ளரசின் பொற்பதம்
பூண்டு கொண்டுளே போற்றி நிற்பையேல்
யாண்டுந் துன்பநீ யடைத லில்லையே. (53)

## 20. திருப்புகழ் விலாசம்

ஏல வார்குழ லாளிடத் தவனே
யென்னை யாண்டவ னேயென தரசே
கோல மாகமா லுருக்கொண்டுங் காணாக்
குரைக ழற்பதக் கோமளக் கன்றே
ஞால மீதிலெம் போல்பவர் பிழையை
நாடி டாதருள் நற்குணக் குன்றே
சீல மேவிய தவத்தினர் போற்றத்
திகழு மொற்றியூர்ச் சிவபெரு மானே. (54)

ஆறு வாண்முகத் தமுதெழுங் கடலே
யயனு மாலுநின் றறிவரும் பொருளே
ஏறு மீதுவந் தேறுமெம் மரசே
யெந்தை யேயெமை யேன்றுகொள் ளிறையே
வீறு கொன்றையஞ் சடையுடைக் கனியே
வேத நாறிய மென்மலர்ப் பதனே
தேறு நெஞ்சினர் நாடொறும் வாழ்த்தத்
திகழு மொற்றியூர்ச் சிவ பெருமானே. (55)

நாட்டு முப்புர நகைத்தெரித் தவனே
நண்ணி யம்பல நடஞ்செயும் பதனே
வேட்டு வெண்டலைத் தார்புனைந் தவனே
வேட னெச்சிலை விரும்பியுண் டவனே
கோட்டு மேருவைக் கோட்டிய புயனே
குற்ற முங்குண மாக்குறிப் பவனே
நீட்டு மெய்ப்புகழ்த் திசைபரந் தோங்கத்
திகழு மொற்றியூர்ச் சிவபெரு மானே. (56)

## 21. திருச்சாதனத் தெய்வத்திறம்

அருள்பழுக்குங் கற்பகமே யரசே முக்கண்
ஆரமுதே நினைப்புகழேன் அந்தோ வஞ்ச

மருள்பழுக்கு நெஞ்சகத்தேன் வாளா நாளை
வாதமிட்டுக் கழிக்கின்றேன் மதியி லேனை
வெருள்பழுக்குங் கடுங்காட்டில் விடினும் ஆற்று
வெள்ளத்தி லடித்தேக விடினும் பொல்லா
இருள்பழுக்கும் பிலஞ்சேர விடினும் அன்றி
என்செயினும் போதாதே யெந்தா யெந்தாய். (57)

பெருங்கருணைக் கடலேயென் குருவே முக்கட்
பெருமானே நினைப்புகழேன் பேயேன் அந்தோ
கருங்கன்மனக் குரங்காட்டி வாளா நாளைக்
கழிக்கின்றேன் பயனறியாக் கடைய னேனை
ஒருங்குருள வுடல்பதைப்ப வுறுங்குன் றேற்றி
உருட்டுகினு முயிர்நடுங்க வுள்ள மேங்க
இருங்கழுவி லேற்றுகினு மன்றி யின்னும்
என்செயினும் போதாதே யெந்தா யெந்தாய். (58)

தொழுகின்றோ ருளத்தமர்ந்த சுடரே முக்கட்
சுடர்க்கொழுந்தே நின்பதத்தைத் துதியேன் வாதில்
விழுகின்றே னல்லோர்கள் வெறுப்பாய்ப் பேசி
வெறித்துழலு நாயனையேன் விழல னேனை
உழுகின்ற நுகப்படைகொண் டுலையத் தள்ளி
உழக்கினுநெட் டுடனடுங்க வுறுக்கி மேன்மேல்
எழுகின்ற கடலிடைவீழ்த் திடினு மன்றி
என்செயினும் போதாதே யெந்தா யெந்தாய். (59)

## 22. ஆடலமுதப் பத்து

சிந்தை நொந்துநொந் தயர்கின்றேன் சிவனே
செய்வ தோர்ந்திலேன் தீக்குண முடையேன்
வந்து நின்னடிக் காட்செய வென்றால்
வஞ்ச நெஞ்சமென் வசநின்ற திலையே
எந்தை நின்னரு ளுண்டெனி லுய்வேன்
இல்லை யென்னிலு னில்லையுய்ந் திடவே
அந்தி வானிறத் தொற்றியூ ரரசே
அம்ப லத்திநின் றாடல்செய் யமுதே. (60)

உன்னை யுன்னிநெக் குருகிநின் றேத்த
யுள்ள மென்வச முற்றதின் றேனும்
என்னை யாளுத லுன்கட னன்றேல்
இரக்க மென்பதுன் னிடத்திலை யன்றோ
முன்னை வல்வினை முடித்திடிற் சிவனே
மூட னேனுக்கு முன்னிற்ப தெவனோ

அன்னை யப்பனே யொற்றியூ ரரசே
அம்ப லத்தினின் றாடல்செய் யமுதே. (61)

யாது நின்கருத் தறிந்திலேன் மனமோ
என்வ சப்படா திருத்தலை யுரைத்தேன்
தீது செய்யினும் பொறுத்தெனைச் சிவனே
தீய வல்வினைச் சேர்ந்திடா வண்ணம்
பாது காப்பதுன் பரமின்றேற் பலவாய்
பகர்த லென்னகாண் பழிவரு முனக்கே
யாது காண்டியெம் மொற்றியூ ரரசே
அம்ப லத்தினின் றாடல்செய் யமுதே. (62)

## 23. திருவடிச் சரண்புகல்

விடங்கொள் கண்ணினு ரடிவிழுந் தையோ
வெட்கி னுயிந்த விதியுனக் கேனோ
மடங்கொ ணெஞ்சமே நினக்கின்று நல்ல
வாழ்வு வந்தது வருதியென் னுடனே
இடங்கொள் பாரிடை நமக்கினி யொப்பார்
இயார்கண் டாயொன்று மெண்ணலை கமலத்
தடங்கொ ளொற்றியூ ரமர்ந்தநஞ் செல்வத்
தந்தை யாரடிச் சரண்புக லாமே. (63)

## 24. தவத்திறம் போற்றல்

வில்வத் தொடும்பொற் கொன்றையணி
வேணிப் பெருமா னொற்றிநகர்
செல்வப் பெருமான் சிவபெருமான்
தியாகப் பெருமான் திருவழகைக்
கல்வைப் புடைய மனங்களிக்கக்
கண்கள் களிக்கக் கண்டுநின்றேன்
இல்வைப் புடையே னம்மாநான்
என்ன தவந்தான் செய்தேனோ! (64)

மறப்பை யகன்ற மனத்து ரவோர்
வாழ்த்த வவர்க்கு வான்கதியின்
சிறப்பை யளிக்குஞ் சிவபெருமான்
தியாகப் பெருமான் திருநடத்தைப்
பிறப்பை யகற்று மொற்றியிற்போய்ப்
பேரானந்தம் பெறக் கண்டேன்
இறப்பைத் தவிர்த்தே னம்மாநான்
என்ன தவந்தான் செய்தேனோ! (65)

முன்னங் காழி வள்ளலுக்கு
முத்துச் சிவிகை குடையொடுபொற்
சின்ன மளித்தோன் சிவபெருமான்
தியாகப் பெருமான் திருவடிவைக்
கன்னின் றுருகா நெஞ்சுருகக்
கண்டேன் கண்ட காட்சிதனை
என்னென் றுரைப்பே னம்மாநான்
என்ன தவந்தான் செய்தேனோ! (66)

## 25. நெஞ்சுறுத்த திருநேரிசை

நெஞ்சே வுலக நெறிநின்று நீமயலால்
அஞ்சே லென்பின்வந் தருள்கண்டாய்—எஞ்சாத்
தவக்கொழுந்தாஞ் சற்குணவர் தாழ்ந்தேத்து மொற்றிச்
சிவக்கொழுந்தை வாழ்த்துநாஞ் சென்று. (67)

வருநா ளுயிர்வாழு மாண்பறியோ நெஞ்சே
யொருநாளு நீவேறொன் றுன்னேல்-திருநாளைப்
போவான் றொழுமன்றிற் புண்ணியனை யொற்றியிற்று
யாவான் றிருவடியல் லால். (68)

அல்லால முண்டமிடற் றாரமுதை யற்புதத்தைக்
கல்லால நீழலமர் கற்பகத்தைச்-சொல்லார்ந்த
விண்மணியை யென்னுயிரை மெய்ப்பொருளை யொற்றி
கண்மணியை நெஞ்சே கருது. [யிலென் (69)

என்றென் றழுதா யிலையேயென் னெஞ்சமே
யொன்றென்று நின்ற வுயர்வுடையான்-நன்றென்ற
செம்மைத் தொழும்பர்தொழுஞ் சீரொற்றி யூரண்ணல்
நம்மைத் தொழும்புகொள்ளு நாள். (70)

பதந்தருவான் செல்வப் பயன்தருவான் மன்னுஞ்
சதந்தருவான் யாவுந் தருவான்-இதந்தருமென்
நெஞ்சமென்கொல் வாடுகின்றாய் நின்மலா நின்னடியே
தஞ்சமென்று லொற்றியப்பன் றான். (71)

## 26. சிகாமணி மாலை

நானே நினக்குப் பணிசெயல் வேண்டுநின் றண்மலர்த்தாள்
தானே யெனக்குத் துணைசெயல் வேண்டுந் தயாநிதியே
கோனே கரும்பின் சுவையேசெம் பாலொடு கூட்டுநறுந்
தேனே வயித்திய நாதா வமரர்சி காமணியே. (72)

ஊன்கொண்ட தேகத்து முள்ளத்து மேவி யுறும்பிணியால்
நான்கொண்ட துன்பந் தவிர்ப்பாய் வயித்திய நாதவென்றே
வான்கொண்ட நின்னருட் சீரேத்துகின்ற வகையறியேன்
தேன்கொண்ட கொன்றைச் சடையா யமரர் சிகாமணியே.

## 27. கலிமுறையீடு

பொய்விடு கின்றில னென்றெம் புண்ணியா
கைவிடு கின்றியோ கடைய னேன்றனைப்
பைவிட முடையவெம் பாம்பு மேற்றநீ
பெய்விட மனையவென் பிழைபொ றுக்கவே. (74)

இல்லையே யென்ப திங்கில்லை யென்றருள்
நல்லையே நீயரு ணயந்து நல்கினுற்
கல்லையே யனையவென் கன்ம நெஞ்சகம்
ஒல்லையே வஞ்சம்விட் டுவக்கு முண்மையே. (75)

## 28. நெஞ்சொடு நேர்தல்

இன்னு மெங்ஙன மேகுகின் றனையோ
ஏழை நெஞ்சமே யிங்குமங் குந்தான்
முன்னை நாம்பிறந் துழன்றவத் துயரை
முன்னி லென்குலை முறுக்குகின் றனகாண்
என்னை நீயெனக் குறுதுணை யந்தோ
என்சொ லேற்றிலை யெழில்கொளும் பொதுவின்
மன்னு நம்முடை வள்ளலை நினைத்தால்
மற்று நாம்பிற வாவகை வருமே. (76)

## 29. நெஞ்சைத் தேற்றல்

இலவு காக்கின்ற கிள்ளைபோ லுழன்றாய்
என்னை நின்மதி யேழைநீ நெஞ்சே
பலவு வாழைமாக் கனிகனிந் திழியும்
பணைகொ ளொற்றியூர்க் கென்னுடன் வருதி
நிலவு வெண்மதிச் சடையுடை யழகர்
நிறைய மேனியி னிகழ்ந்தநீற் றழகர்
குலவு கின்றனர் வேண்டிய வெல்லாங்
கொடுப்பர் வாங்கிநான் கொடுப்பனுன் றனக்கே

காலஞ் செல்கின்ற தறிந்திலை போலுங்
காலன் வந்திடிற் காரிய மிலைகாண்

நீலஞ் செல்கின்ற மிடற்றினர் கரத்தில்
நிமிர்ந்த வெண்மணொருப் பேந்திய நிமலர்
ஏலஞ் செல்கின்ற குழலியோர் புடையார்
இருக்கு மொற்றியூர்க் கென்னுடன் வருதி
ஞாலஞ் செல்கின்ற துயர்கெட வரங்கள்
நல்கு வாரவை நல்குவ னுனக்கே. (78)

## 30. பற்றின் திறம் பகர்தல்

மூவரை யளித்த முதல்வனை முக்கண்
மூர்த்தியைத் தீர்த்தனைப் பெரிய
தேவரைக் காத்த செல்வனை யொற்றித்
தியாகனை நினைந்துநின் றேத்தாப்
பாவரை வரையாப் படிற்றரை வாதப்
பதடரைச் சிதடரைப் பகைசேர்
கோவரைக் கொடிய குணத்தரைக் கண்டால்
கூசுவ கூசுவ விழியே. (79)

கஞ்சனைச் சிரங்கொய் கரத்தனை மூன்று
கண்ணனைக் கண்ணனைக் காத்த
தஞ்சனை யொற்றித் தலத்தனைச் சைவத்
தலைவனைத் தாழ்ந்துநின் றேத்தா
வஞ்சரைக் கடைய மடையரைக் காம
மனத்தரைச் சினத்தரை வலிய
நஞ்சரை யிழிந்த நரகரைக் கண்டால்
நடுங்குவ நடுங்குவ மனமே. (80)

ஈசனைத் தாயி லினியனை யொற்றி
யின்பனை யன்பனை யழியாத்
தேசனைத் தலைமைத் தேவனை ஞானச்
சிறப்பனைச் சேர்ந்துநின் றேத்தா
நீசரை நாணி னெட்டரை நரக
நேயரைத் தீயரைத் தரும
நாசரை யொழியா நட்டரைக் கண்டால்
நடுங்குவ நடுங்குவ மனமே. (81)

## 31. அடிமைத்திறத் தலைசல்

தேவ ரறியார் மாலறியான்
திசைமா முகத்தோன் தானறியான்
யாவ ரறிவார் திருவொற்றி
யப்பா வடியேன் யாதறிவேன்

மூவர் திருப்பாட் டினுக்கிசைந்தே
முதிர்தீம் பாலும் முக்கனியுங்
காவ லமுது நறுந்தேனுங்
கைப்ப வினிக்கும் நின்புகழே. (82)

விடுத்தேன் தவத்தோர் நெறிதன்னை
வியந்தே னுலக வெந்நெறியை
மடுத்தேன் துன்ப வாரிதனை
வஞ்ச மனத்தர் மாட்டுறவை
அடுத்தே னொற்றி யப்பாவுன்
அடியை நினையே னலமந்தேன்
படுத்தே நமன்செக் கிடும்போது
படிறேன் யாது படுவேனே. (83)

## 32. நாளவத் தலைசல்

இன்றிருந் தவரை நாளையிவ் வுலகி
லிருந்திடக் கண்டிலே மாவா
வென்றிருந் தவத்தோ ராற்றுகின் றனரா
லேழையே னுண்டுடுத் தவமே
சென்றிருந் துறங்கி விழிப்பதே யல்லாற்
செய்வன செய்கிலே னந்தோ
மன்றிருந் தோங்கு மணிச்சுட ரொளியே
வள்ளலே யொற்றியூர் வாழ்வே. (84)

நீரின்மே லெழுது மெழுத்தினும் விரைந்து
நிலைபடா வுடம்பினை யோம்பிப்
பாரின்மே லலையும் பாவியேன் றனக்கு
பரிந்தருள் பாலியா யென்னிற்
காரின்மேல் வரல்போற் கடாமிசை வருமக்
காலன்வந் திடிலெது செய்வேன்
வாரின்மேல் வளருந் திருமுலை மலையாண்
மணாளனே யொற்றியூர் வாழ்வே. (85)

கான்றசோ றருந்துஞ் சுணங்கனிற் பலநாள்
கண்டபுன் சுகத்தையே விரும்பு
நான்றநெஞ் சகனே னமன்றமர் வருநாள்
நாணுவ தன்றியென் செய்கேன்
சான்றவர் மதிக்கு நின்றிரு வருடான்
சார்ந்திடிற் றருக்குவ னையா
மான்றனிக் கரத்தெம் வள்ளலே யென்னை
வாழ்விக்கு மொற்றியூர் வாழ்வே. (86)

## 33. அருட்டிறத்தலைசல்

நறைமணக்குங் கொன்றை நதிச்சடில நாயகனே
கறைமணக்குந் திருநீல கண்டப் பெருமானே
உறைமணக்கும் பூம்பொழில்சூ ழொற்றியப்பா வுன்னுடைய
மறைமணக்குந் திருவடியை வாய்நிரம்ப வாழ்த்தேனே. (87)

அலைவளைக்கும் பாற்கடலா னம்புயத்தான் வாழ்த்திநிதந்
தலைவளைக்குஞ் செங்கமலத் தாளுடையா யாளுடையாய்
உலைவளைக்கா முத்தலைவே லொற்றியப்பா வுன்னுடைய
மலைவளைக்குங் கைம்மலரின் வண்மைதனை வாழ்த்தேனே.

குற்றஞ் செயினுங் குணமாகக் கொண்டருளும்
நற்றவர்த முள்ள நடுநின்ற நம்பரனே
உற்றவர்த நற்றுணைவா வொற்றியப்பா வென்கருத்து
முற்றிடநின் சந்நிதியின் முன்னின்று வாழ்த்தேனே. (89)

பெண்மணியே யென்றுலகிற் பேதையரைப் பேசாதென்
கண்மணியே கற்பகமே கண்ணுதலிற் கொள்கரும்பே
ஒண்மணியே தேனேயென் றொற்றியப்பா வுன்றனைநான்
பண்மணஞ் செய்பாட்டிற் பரவித் துதியேனே. (90)

தந்தைதாய் மக்கண்மனை தாரமெனுஞ் சங்கடத்தில்
சிந்தைதான் சென்று தியங்கி மயங்காமே
உந்தையென்போ ரில்லாத வொற்றியப்பா வுன்னடிக்கீழ்
முந்தையோர் போன்று முயங்கி மகிழேனே. (91)

மின்னொப்பாம் வாழ்வை வியந்திடருள் வீழ்ந்தலைந்தேன்
பொன்னொப்பாய் தெய்வமணப் பூவொப்பா யென்னினுமே
உன்னொப்பா ரில்லாத வொற்றியப்பா வுன்னுடைய
தன்னொப்பாம் வேணியின்மேற் சார்பிறையைப் பாரேனே.

## 34. திருவிண்ணப்பம்

சழக் கிருந்ததென் னிடத்திலா யினுநீர்
தந்தை யாதலிற் சார்ந்தநன் னெறியிற்
பழக்கி வைப்பது தேவரீர்க் குரிய
பண்பன் றோவெனைப் பரிந்திலீ ரானுல்
வழக் கிருப்பதிங் குமக்குமென் றனக்கும்
வகுத்துக் கூறுதன் மரபுமற் றன்றால்
புழைக்கை மாவுரி யீரொற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ.

வன்மை பேசிய வன்றொண்டர் பொருட்டாய்
வழக்குப் பேசிய வள்ளல்நீ ரன்றோ
இன்மை யாளர்போல் வலியவந் திடினு
மேழை யாமிவ னென்றொழித் திட்டால்
தன்மை யன்றது தருமமு மன்றால்
தமியனே னின்னுஞ் சாற்றுவ தென்னே
பொன்மை யஞ்சடை யீரொற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ.

விருப்பு நின்றதும் பதமலர் மிசையவ்
விருப்பை மாற்றுதல் விரகுமற் றன்றால்
கருப்பு நேரினும் வள்ளியோர் கொடுக்குங்
கடமை நீங்குறு ருடைமை யின்றேனும்
நெருப்பு நும்முரு வாயினு மருகி
னிற்க வஞ்சுறே னீலனு மன்றாற்
பொருப்பு வில்லுடை யீரொற்றி யுடையீர்
பொய்ய னென்னில்யான் போம்வழி யெதுவோ.

## 35. வழிமொழி விண்ணப்பம்

ஆட்டு கின்றநீ யறிந்திலை போலும்
ஐவர் பக்கநா னாடுகின் றதனைக்
காட்டு கின்றவான் கடலிடை யெழுந்த
காள முண்டவக் கருணையை யுலகில்
நாட்டு கின்றனே யாயிவிக் கொடிய
நாய்க்கு முன்னருள் நல்கிட வேண்டுந்
தீட்டு கின்றநற் புகழொற்றி யரசே
திருச்சிற் றம்பலந் திகழொளி விளக்கே. (96)

## 36. சிறுமை விண்ணப்பம்

வெல்லு கின்றனர் வினைப்புல வேடர்
மெலிகின் றேனிங்கு வீணினிற் காலஞ்
செல்லு கின்றன வையவோ சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியேன்
சொல்லு கின்றனன் கேட்கின்றாய் கேட்டுந்
தூர நின்றனை ஈரமில் லார்போல்
புல்லு கின்றசீ ரொற்றியம் பரனே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே. (97)

சுத்த நெஞ்சருட் சேர்க்கினு மலது
சோம்ப னெஞ்சருட் சேர்க்கினு நினது
சித்த மென்னள வன்றது சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியேன்
நித்தநின்னடி யன்றியொன் றேத்தேன்
நித்த னேயது நீயறி யாயோ
புத்த ருந்தமி ழொற்றியூ ரரசே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே. (98)

தத்து மத்திடைத் தயிரென வினையாற்
றளர்ந்து மூப்பினிற் றண்டுகொண் டுழன்றே
செத்துமீளவும் பிறப்பெனிற் சிவனே
செய்வ தென்னைநான் சிறியருட் சிறியேன்
தொத்து வேண்டுநின் றிருவடிக் கெனையே
துட்ட னென்றியேற் றுணைபிறி தறியேன்
புத்தை நீக்கிய வொற்றியம் பரனே
போற்றும் யாவர்க்கும் பொதுவினின் றவனே.

## 37. ஆற்ரு விண்ணப்பம்

சரணவா ரிசமென் றலைமிசை யின்னுந்
தரித்திலை தாழ்த்தனை யடியேன்
கரணவா தனையுங் கந்தவா தனையுங்
கலங்கிடக் கபமிழுத் துந்து
மரணவா தனைக்கென் செய்குவ மென்றே
வருந்துகின் றனன்மன மாழாந்
தரணமூன் றெரிய நகைத்தவெம் மிறையே
யடியனை யாள்வதுன் கடனே. (100)

கடம்பொழி யோங்க லுரியுடை யுடுக்குங்
கடவுளே கடவுளர் கோவே
மடம்பொழி மனத்தேன் மலஞ்செறிந் தூறும்
வாயிலோ ரொன்பதில் வருமிவ்
வுடம்பொழிந் திடுமேன் மீண்டுமீண் டெந்த
வுடம்புகொண் டுழல்வனோ வென்று
நடம்பொழி பதத்தாய் நடுங்குகின் றனன்காண்
நான்செயும் வகையெது நவிலே. (101)

## 38. இரங்கல் விண்ணப்பம்

கொடிய நெஞ்சினேன் கோபமே யடைந்தேன்
கோடி கோடியாங் குணப்பழு துடையேன்
கடிய வஞ்சகக் கள்வனேன் றனக்குன்
கருணை யீந்திடா திருந்திடிற் கடையேன்
அடிய னுகுவ தெவ்வண மென்றே
யைய வையநா னலறிடு கின்றேன்
ஓடிய மும்மல மொருங்கறுத் தவர்சே
ரொற்றி மேவிய வுலகுடை யோனே. (102)

4174/4

பந்த மட்டிலும் பாவிநெஞ் சகத்தாற்
பவப்பெ ருங்கடற் படிந்துழன் றயர்ந்தேன்
இந்த மட்டினு முழன்றதே யமையும்
ஏற வேண்டுமுன் னெண்ணமே தறியேன்
அந்த மட்டினி லிருத்தியோ வன்றி
யடிமை வேண்டிநின் னருட்பெரும் புணையை
உந்த மட்டிலுற் றருதியோ வுரையா
யொற்றி மேவிய வுலகுடை யோனே. (103)

## 39. காதல் விண்ணப்பம்

வஞ்சக வினைக்கோர் கொள்கல மனைய
மனத்தினே னனைத்தினுங் கொடியேன்
தஞ்சமென் றடைந்தே னின்றிருக் கோயிற்
சந்நிதி முன்னர்நிற் கின்றேன்
எஞ்சலி லடங்காப் பாவியன் றெனைநீ
இகழ்ந்திடி லென்செய்வேன் சிவனே
கஞ்சன்மால் புகழு மொற்றியங் கரும்பே
கதிதருங் கருணையங் கடலே. (104)

அளவிலா வுலகத் தனந்தகோ டிகளாம்
ஆருயிர்த் தொகைக்குளு மெனைப்போல்
இளகிலா வஞ்ச நெஞ்சகப் பாவி
யேழைக ளுண்டுகொ லிலைகாண்
தளர்விலா துனது திருவடி யெனும்பொற்
றாமரைக் கணியனு குவனோ
களவிலார்க் கினிய வொற்றியம் மருந்தே
கனந்தருங் கருணையங் கடலே. (105)

சற்றுநற் குணந்தான் சார்ந்திடாக் கொடியார்
தந்தலை வாயிலுட் குரைக்கும்
வெற்றுநாய் தனக்கும் வேறு நாயாக
மெலிகின்றே னைம்புலச் சேட்டை
அற்றுநின் றவர்க்கு மரியநின் றிருத்தாட்
கடிமைசெய் தொழுகுவ னேயோ
கற்றுமுற் றுணர்ந்தோர்க் கருடரு மொற்றிக்
கடவுளே கருணையங் கடலே. (106)

## 40. பொருள் விண்ணப்பம்

எண்ணி லாநினைப் புற்றதின் வழியே
யின்ப துன்பங்க ளெய்தியென் னெஞ்சம்
கண்ணி லாக்குரங் கெனவுழன் றதுகாண்
கடைய னேன்செயக் கடவதொன் றறியேன்
பெண்ணி லாவிய பாகத்தெம் மமுதே
பிரம ஞதியர் பேசருந் திறனே
தெண்ணி லாமுடி யொற்றியங் கனியே
செல்வ மேபர சிவபரம் பொருளே. (107)

யாது சொல்லினுங் கேட்பதின் றந்தோ
யான்செய் தேனென தென்னுமிவ் விருளிற்
காது கின்றதென் வஞ்சக நெஞ்சங்
கடைய னேன்செயக் கடவதொன் றறியேன்
ஓது மாமறை யுபநிட தத்தி
னுச்சி மேவிய வச்சிர மணியே
தீது நீக்கிய வொற்றியந் தேனே
செல்வ மேபர சிவபரம் பொருளே. (108)

## 41. கொடி விண்ணப்பம்

மாலை யொன்றுதோட் சுந்தரப் பெருமான்
மணத்திற் சென்றவண் வழக்கிட்ட தெனவே
யோலை யொன்றுநீர் காட்டுதல் வேண்டாம்
உவந்து தொண்டனென் றுரைப்பிரே லென்னை
வேலை யொன்றல மிகப்பல வெனினும்
வெறுப்பி லாதுளம் வியந்துசெய் குவன்காண்
சோலை யொன்றுசீ ரொற்றியூ ருடையீர்
தூய மால்விடைத் துவசத்தி னீரே. (109)

புதிய னென்றெனைப் போக்குதி ரோநீர்
பூரு வத்தினும் பொன்னடிக் கடிமை
பதிய வைத்தன ளயினு மந்தப்
பழங்க ணக்கினைப் பார்ப்பதி லென்னே
முதிய னல்லன்யா னெப்பணி விடையும்
முயன்று செய்குவேன் மூர்க்கனு மல்லேன்
துதிய தோங்கிய வொற்றியூ ருடையீர்
தூய மால்விடைத் துவசத்தி னீரே. (110)

முத்தி நேர்கிலாத் தேவர்க டமைநான்
முந்து றேனவர் முற்பட வரினுஞ்
சுத்தி யாகிய சொல்லுடை யணுக்கத்
தொண்டர் தம்முடன் சூழ்த்திட ரெனினும்
புத்தி சேர்புறத் தொண்டர்தம் முடனே
பொருந்த வைக்கினும் போதுமற் றதுவே
துத்தி யார்பணி யீரொற்றி யுடையீர்
தூய மால்விடை துவசத்தி னீரே. (111)

## 42. நாடக விண்ணப்பம்

பிறவிக் கண்ணிலான் கைக்கொளுங் கோலைக்
பிடுங்கி வீசுதல் பெரியவர்க் கறமோ
மறவிக் கையறை மனத்தினே னும்மேல்
வைக்கு மன்பைநீர் மாற்றுத லழகோ
உறவிக் கொள்கையை யுள்ளிரே லிதனை
யோதிக் கொள்ளிட மொன்றிலை கண்டீர்
நறவிக் கோங்கிய வொற்றியம் பதியீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே. (112)

தந்தை யாயவர் தனையரைக் கெடுக்கச்
சமைவ ரென்பது சற்றுமின் றுலகில்
எந்தை நீரெனை வஞ்சக வாழ்வில்
இருத்து வீரெனில் யார்க்கிது புகல்வேன்
பந்த மேலிட வென்பரி தாபம்
பார்ப்பி ரோவிருட் பங்கய விழியீர்
நந்த வொண்பனை யொற்றியூ ருடையீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே. (113)

கல்வி வேண்டிய மகன்றனைப் பெற்றோர்
கடுத்த லோர்சிறு கதையிலு மிலைகாண்
செல்வம் வேண்டிலேன் திருவருள் விழைந்தேன்
சிறிய னேனைநீர் தியக்குத லழகோ

பல்வி தங்களாற் பணிசெயு முரிமைப்
பாங்கு நல்குமப் பரமுமக் கன்றே
நல்வி தத்தினர் புகழொற்றி யுடையீர்
ஞான நாடக நவிற்றுகின் றீரே. (114)

## 43. திருவண்ண விண்ணப்பம்

கண்ணப்பா வென்றருளுங் காளத்தி யப்பாமுன்
வண்ணப்பால் வேண்டு மதலையைப்பால் வாரிதியை
உண்ணப்பா வென்றுரைத்த வொற்றியப்பா வந்தருள
வெண்ணப்பா வென்றழுமிவ் வேழைமுகம் பாராயோ.

## 44. மருட்கை விண்ணப்பம்

யாது செய்குவேன் போது போகின்ற
தண்ண லேயும தன்பருக் கடியேன்
கோது செய்யினும் பொறுத்தருள் புரியுங்
கொள்கை யீரெனைக் குறுகிய குறும்பர்
வாது செய்கின்றார் மனந்தளர் கின்றேன்
வலியி லேன்செயும் வகையொன்று மறியேன்
மாதர் செய்பொழி லொற்றியீ ருடையீர்
வண்கையீ ரென்கண் மணியனை யீரே. (116)

என்பி றப்பினை யார்க்கெடுத் துரைப்பேன்
என்செய் வேனெனை யென்செய நினைக்கேன்
முன்பி றப்பிடை யிருந்தசே டத்தான்
மூட வாழ்க்கையாங் காடகத் தடைந்தே
அன்பி றந்தவெங் காமவேட் டுவனால்
அலைப்புண் டேனும தருள்பெற விழைந்தேன்
வன்பி றந்தவர் புகழொற்றி யுடையீர்
வண்கையீ ரென்கண் மணியனை யீரே. (117)

## 45. கொடைமட விண்ணப்பம்

நின்போன்ற தெய்வமொன் றின்றென வேத நிகழ்த்தவுநின்
பொன்போன்ற ஞானப் புதுமலர்த் தாட்டுணைப் போற்று
[கிலேன்
என்போன்ற வேழையர் யாண்டுள ரம்பலத் தேநடஞ்செய்
மின்போன்ற வேணிய னேயொற்றி மேவிய வேதியனே. (118)

காவல னேயன்று மாணிக்குப் பொற்கிழிக் கட்டவிழ்த்த
பாவல னேதொழும் பாணன் பரிசுறப் பாட்டளித்த
நாவல னேதில்லை நாயக னேகடல் நஞ்சையுண்ட
மாவல னேமுக்கண் வானவ னேயொற்றி மன்னவனே. (119)

## 46. சிறு விண்ணப்பம்

பண்ணுலுன் னருட்புகழைப் பாடு கின்றார்
பணிகின்றார் நின்னழகைப் பார்த்துப் பார்த்துக்
கண்ணார வுளங்குளிரக் களித்தா னந்தக்
கண்ணீர்கொண் டாடுகின்றார் கருணை வாழ்வை
யெண்ணுநின் றுனையெந்தா யெந்தா யெந்தா
யென்கின்றார் நின்னன்ப ரெல்லா மென்றன்
அண்ணுநா னொருபாவி வஞ்ச நெஞ்சால்
அலைகின்றே னென்செய்கேன் அந்தோ அந்தோ.

கொலையறியாக் குணத்தோர்நின் னன்பரெல்லாம்
குணமேசெய் துன்னருடான் கூடுகின்றார்
புலையறிவே னொருவன் பிழையே செய்து
புலங்கெட்ட விலங்கேபோற் கலங்குகின்றேன்
நிலையறியே னெறியொன்று மறியே னெங்கும்
நினையன்றித் துணையொன்று மறியேன்சற்றும்
அலையறியா அருட்கடனீ யாள்க வீணில்
அலைகின்றே னென்செய்கே னந்தோ வந்தோ. (121)

## 47. பெரு விண்ணப்பம்

உண்மை யறியே னெனினுமெனை
உடையா யுனையே யொவ்வொருகால்
எண்மை யுடையே னினைக்கின்றேன்
என்னே யுன்னை யேத்தாத
வெண்மை யுடையார் சார்பாக
விட்டா யந்தோ வினையேனை
வண்மை யுடையா யென்செய்கேன்
மற்றோர் துணையிங் கறியேனே. (122)

பாலே யமுதே பழமேசெம்
பாகே யெனுநின் பதப்புகழை
மாலே அயனே இந்திரனே
மற்றைத் தேவ ரேமறைகள்
நாலே யறியா தெனிற்சிறியேன்
நானோ வறிவே னுயகவென்
மேலே யருள்கூர்ந் தெனைநின்றன்
மேவு வோர்பாற் சேர்த்தருளே. (123)

கண்ணார் நுதலோய் பெருங்கருணைக்
கடலோய் கங்கை மதிச்சடையோய்

பெண்ணு ரிடத்தோ யாவர்கட்கும்
பெரியோய் கரியோன் பிரமனொடும்
அண்ணு வெனநின் றேத்தெடுப்ப
அமர்ந்தோய் நின்ற னடிமலரை
எண்ணு துழல்வோர் சார்பாக
இருக்கத் தரியேன் எளியேனே. (124)

## 48. திருக்காட்சிக் கிரங்கல்

மண்ணேயும் வாழ்க்கையிடை மாழாந்து வன்பிணியாற்
புண்ணேயும் நெஞ்சம் புழுங்குகின்ற பொய்யவனேன்
பண்ணேயு மின்பப் பரஞ்சுடரே யென்னிரண்டு
கண்ணேயுன் பொன்முகத்தைக் காணக் கிடைத்திலனே.

அல்வைத்த நெஞ்சால் அழுங்குகின்ற நாயடியேன்
சொல்வைத்த உண்மைத் துணையே யிணைத்தோண்மேல்
வில்வத் தொடையணிந்த வித்தகனே நின்னுடைய
செல்வத் திருவடியின் சீர்காணப் பெற்றிலனே. (126)

## 49. திருவருட்கு இரங்கல்

எஞ்சா விடரால் இரும்பிணியால் ஏங்கிமனம்
பஞ்சாக நொந்து பரதவிக்கும் நாயேனைச்
செஞ்சாலி யோங்குந் திருவொற்றி யப்பாநீ
அஞ்சாதே யென்றுன் அருள்கொடுத்தா லாகாதோ. (127)

சேய்பிழையைத் தானறிந்துஞ் சீருள் பொறுப்பாளிந்
நாய்பிழையை நீபொறுக்க ஞாயமுண்டு ஐயாவே
தேய்மதிபோல் நெஞ்சந் தியக்கமுறச் சஞ்சலத்தால்
வாயலறி வாடுமெனை வாவென்று லாகாதோ. (128)

கண்ணுண் மணியேபோற் கருதுகின்ற நல்லோரை
எண்ணுங் கணமும்விடுத் தேகாத இன்னமுதே
உண்ணும் உணவுக்கும் உடைக்குமுயன் றோடுகின்ற
மண்ணுலகத் தென்றன் மயக்கறுத்தா லாகாதோ. (129)

## 50. எண்ணத்து இரங்கல்

முன்னேசெய் வெவ்வினைதான் மூண்டதுவோ வல்லதுநான்
இன்னே பிழைதா னியற்றியதுண் டோவறியேன்
பொன்னேர் புரிசடையெம் புண்ணியனே யென்னுளையை
அன்னே நீ நீக்காயே லார்நீக்க வல்லாரே. (130)

## 51. நெஞ்சுநிலைக்கு இரங்கல்

ஒளியா யொளிக்கு ளொளிரொளி யேயொற்றி யுத்தமநீ
அளியா விடிலிதற் கென்னைசெய் கேனணங் கன்னவர்தங்
களியாற் களித்துத் தலைதெரி யாது கயன்றுலவா
வளியாய்ச் சுழன்றிவண் மாயா மனமெனை வாதிப்பதே. (131)

## 52. தனிமைக்கு இரங்கல்

ஆக்க லாதிய வைந்தொழி னடத்தல்
அயன்மு ஞகிய வைவரை யளித்து
நீக்க மின்றியெவ் விடத்தினும் நிறைந்த
நித்த நீயெனு நிச்சய மதனைத்
தாக்க வெண்ணியே தாமதப் பாவி
தலைப்பட் டானவன் றனையகற் றுதற்கே
ஊக்க முற்றநின் றிருவருள் வேண்டும்
ஒற்றி யோங்கிய உத்தமப் பொருளே. (132)

இமைக்கு மவ்வள வேனுநெஞ் சொடுங்கி
யிருக்கக் கண்டிலேன் இழிவுகொண் மலத்தின்
சுமைக்கு நொந்துநொந் தையவோ நாளுந்
துயர்கின் றேனயர் கின்றவென் றுயரைக்
குமைக்கும் வண்ணநின் றிருவரு ளின்னும்
கூடப் பெற்றிலேன் கூறுவ தென்னே
உமைக்கு நல்வர முதவிய தேவே
ஒற்றி யோங்கிய வுத்தமப் பொருளே. (133)

சென்ற நாளிலோர் இறைப்பொழு தேனும்
சிந்தை யோர்வகை தெளிந்ததன் றதுபோய்
நின்ற நாளினு நிற்கின்ற திலைகாண்
நெடிய பாவியேன் நிகழ்த்துவ தென்னே
என்ற னுருயிர்க் கொருபெருந் துணையாம்
எந்தை யேயெனை யெழுமையுங் காத்த
உன்றனு லின்னு முவகைகொள் கின்றேன்
ஒற்றி யோங்கிய வுத்தமப் பொருளே. (134)

## 53. கழிபகற்கு இரங்கல்

ஊழை யேமிக நொந்திடு வேனே
உளத்தை நோவனே உலகிடை மயக்கும்
பாழை யேபலன் தருவதென் றெண்ணிப்
பாவி யேன்பெரும் படருழக் கின்றேன்

மாழை யேர்திரு மேனியெம் பெருமான்
மனமி ரங்கிமெய்யன் வல்வினை கெடவந்
தேழை யேற்கரு ளாயெனி லந்தோ
என்செய் கேன்நர கிடையிடும் போதே. (135)

அம்மை யப்பனென் னுருயிர்த் துணைவன்
அரசன் தேசிகன் அன்புடைத் தேவன்
இம்மை யிற்பய னம்மையிற் பயன்மற்
றியாவு நீயென வெண்ணிநிற் கின்றேன்
செம்மை யிற்பெறு மன்பருள் ளகஞ்சேர்
செல்வ மேயெனைச் சேர்த்தரு ளாயேல்
எம்மை யிற்பெறு வேன்சிறு நாயேன்
என்செய் கேனர கிடையிடும் போதே. (136)

உண்ணு கின்றது முறங்குகின் றதுமேல்
உடுத்து கின்றது முலவுகின் றதுமால்
நண்ணு கின்றது நங்கையர் வாழ்க்கை
நாடு கின்றது நவையுடைத் தொழில்கள்
பண்ணு கின்றது மானபின் னுடலைப்
பாடை மேலுறப் படுத்துகின் றதுமென்
றெண்ணு கின்றதோ றுளம்பதைக் கின்றேன்
என்செய் கேனர கிடையிடும் போதே. (137)

## 54. அர்ப்பித்து இரங்கல்

ஊட்டு கின்றனை யுண்ணுகின் றனன்பின்
உறக்கு கின்றனை யுறங்குகின் றனன்பின்
காட்டு கின்றனை காணுகின் றனனீ
களிப்பிக் கின்றனை களிப்புறு கின்றேன்
ஆட்டு கின்றனை யாடுகின் றனனிவ்
வகில கோடியு மவ்வகை யானால்
தீட்டு மன்பருக் கன்பநின் றனது
சித்த மன்றியான் செய்வதொன் றிலையே. (138)

## 55. அச்சத்து இரங்கல்

பொருளெலாம் புணர்க்கும் புண்ணியப் பொருளே
புத்தமு தேகுணப் பொருப்பே
இருளெலா மறுக்கும் பேரொளிப் பிழம்பே
இன்பமே என்பெருந் துணையே

அருளெலாந் திரண்ட வொருசிவ மூர்த்தி
அண்ணலே நின்னடிக் கபயம்
மருளெலாங் கொண்ட மனத்தினேன் றுன்ப
மயக்கெலாம் மாற்றியாண் டருளே. (139)

அருள்பவ னின்னை யல்லதை யிங்கு
மங்குமற் றெங்குமின் றதுபோன்
மருள்பவ னென்னை யல்லதை மண்ணும்
வானமுந் தேடினு மின்றே
இருள்பவ முடையே னென்செய்கே னின்றுள்
இணைதுணை யெனநினைந் துற்றேன்!
மருள்பவத் தொடுமென் றுயரறுத் தாள்வாய்
வாழிய வருட்பெருந் துரையே. (140)

## 56. புறமொழிக்கு இரங்கல்

ஐதட் டிடுநெஞ் சகத்தேன் பிழைகளை யாய்ந்துவெறும்
பொய்தட் டிகலுடை யேற்குன் கருணை புரிந்திலையேல்
வெய்தட்டி யுண்ட விரதாநின் னேன்பு விருத்தமென்றே
கைதட்டி வெண்ணகை செய்வர்கண் டாயருட் கற்பகமே.

## 57. கருணைபெறாது இரங்கல்

அன்னை யப்பனு நீயென மகிழ்ந்தே
யகங்கு ளிர்ந்துநா னுதரித் திருந்தேன்
என்னை யிப்படி யிடர்கொள விடுத்தால்
என்செய் கேனிதை யாரொடு புகல்கேன்
பொன்னை யொத்தநின் னடித்துணை மலரைப்
போற்று வார்க்குநீ புரிகுவ திதுவோ
உன்னை யெப்படி யாயினு மறவேன்
உனைய லாலெனை வுடையவ ரெவரே. (142)

கொடிய பாவியேன் படும்பரி தாபங்
குறித்துக் கண்டுமென் குறையகற் றுது
நெடிய காலமுந் தாழ்த்தனை நினது
நெஞ்சும் வஞ்சக நேர்ந்ததுண் டேயோ
அடியர் தந்துயர் கண்டிடிற் றரியார்
ஐய ரென்பரென் னளவஃ திலையோ
ஒடிய மாதுயர் நீக்கிடா யென்னில்
உனைய லாலெனை யுடையவ ரெவரே. (143)

## 58. திருவருட் பதிகம்

அருட்பெருங் கடலே யானந்த நறவே
அடிநடு வந்தமுங் கடந்த
தெருட்பெரு மலையே திருவணு மலையிற்
றிகழ்சுயஞ் சோதியே சிவனே
மருட்பெருங் கடலின் மயங்குகின் றேனென்
மயக்கெலா மொழிந்துவன் பிறவி
இருட்பெருங் கடல்விட் டேறநின் கோயிற்
கெளியனேன் வரவர மருளே. (144)

## 59. பிரசாதப் பதிகம்

கல்லை வில்லிற் கணித்தருள் செய்தோர்
எல்லை யின்றி யெழுமின்ப வெள்ளமே
இல்லை யில்லை நின்னரு ளில்லையேல்
தொல்லை நோயின் தொடக்கது நீங்கலே. (145)

## 60. பிராத்தனைப் பதிகம்

நிலத்தே சிறுவர்செய் குற்றங்கள் யாவும் நினைத்தறவோர்
சலத்தே யுளத்தை விடாரென்ப ராதலிற் றூதையென்றே
குலத்தேவர் போற்றுங் குணக்குன்ற மேயெங் குலதெய்வமே
புலத்தே யிழிதகை யேன்பிழை யாவும் பொறுத்தருளே(146)

## 61. சிந்தைத் திருப்பதிகம்

விடையார்க்குங் கொடியுடைய வித்தகவென் றுன்னடியின்
இடையார்த்து நின்றழுமிவ் வேழைமுகம் பாராமே
நடையார்க்கும் வாழ்க்கையிலே நல்குரவோர்க் கீயாத
உடையார்க்கோ வென்னை உடையாய் உதவுவதே. (147)

## 62. உய்கைத் திருப்பதிகம்

திருவுஞ் சீரும் சிறப்புந் திறலுஞ்சற்
குருவுங் கல்வியும் குற்றமில் கேள்வியும்
பொருவி லன்னையும் போக்கறு தந்தையும்
தரும வெள்விடைச் சாமிநின் றுமமே. (148)

## 63. ஆனந்தப் பதிகம்

குருதி நிறைந்த குறுங்குடத்தைக்
கொண்டோன் வழியிற் சென்றிடவா
யெருதின் மனத்தேன் சுமந்துநலை
மிழந்து திரியு மெய்ப்பொழிய
வருதி யெனவே வழியருளி
யொற்றி யூர்க்கு வந்துன்னைக்
கருதி வணங்கச் செய்ததற்கோர்
கைம்மா றறியேன் கடையேனே. (149)

பாவ மெனுமோர் பெருஞ்சரக்குப்
பையை யெடுத்துப் பண்பரியாக்
கோவ மெனுமோர் குரங்காட்டுங்
கொடியேன் றன்னைப் பொருட்படுத்தி
தேவ ரமுதே சிவனே நின்
றிருத்தா ளேத்த வொற்றியெனுங்
காவ னகரம் வரச்செய்தாய்
கைம்மா றறியேன் கடையேனே. (150)

## 64. திருவண்ணப் பதிகம்

எண்ணுறு விருப்பாதி வல்விலங் கினமெலாம்
இடைவிடா துழல வொளியோர்
என்னளவு மின்றியஞ் ஞானவிருண் மூடிட
விருண்டுயிர் மருண்டு மாழ்க
நண்ணுமன மாயையாங் காட்டைக் கடந்துநின்
ஞானவரு ணாட்டை யடையும்
நாளெந்த நாளந்த நாளிந்த நாளென்று
நாயினேற் கருள்செய் கண்டாய்
விண்ணுறு சுடர்க்கெலாஞ் சுடரளித் தொருபெரு
வெளிக்குள்வளர் கின்ற சுடரே
வித்தொன்று மின்றியே விளைவெலாந் தருகின்ற
விஞ்ஞான மழைசெய் முகிலே
கண்ணுறு நுதற்பெருங் கடவுளே மன்றினிற்
கருணைநட மிடு தெய்வமே
கனகவம் பலநாத கருணையாங் கணபோத
கமலகுஞ் சிதபாத னே. (151)

## 65. போற்றித் திருப்பதிகம்

நிதிதரு நிறைவே போற்றியென் னுயிர்க்கோர்
நெறிதரு நிமலமே போற்றி
மதிமுடிக் கனியே போற்றியென் றன்னை
வாழ்வித்த வள்ளலே போற்றி
விதிமுதற் கிடையே போற்றி மெய்ஞ்ஞான
வியனெறி விளக்கமே போற்றி
பதிபசு பதியே போற்றிநின் பாதம்
பாடவெற் கருளுக போற்றி. (152)

## 66. விண்ணப்பம்

தெரியத் தெரியுந் தெரிவுடையார்
சிவானு பவத்திற் சிறக்கின்றார்
பிரியப் பிரியும் பெரும்பாவி
யடியேன் பிழையிற் பிழைக்கின்றேன்
துரியப் பொருளே யணியாரூர்ச்
சோதி மணிநீ தூயவருள்
புரியப் பெறுவே னெனிலவர்போல்
யானுஞ் சுகத்திற் பொலிவேனே. (153)

## 67. அபராத விண்ணப்பம்

உலகம் பரவும் பொருளேயென்
உறவே யென்றன் உயிர்க்குயிரே
இலகம் பரத்தே பரம்பரமாய்
இன்ப நடஞ்செய் எம்மிறையே
கலகம் பரவு மனத்தேனைக்
கைவிட் டிடநீ கருதுதியோ
திலகம் பரவு நுதற்பாக
னென்ப தருணின் றிறத்தன்றே. (154)

உரைத்தார் சிலர்சின் னாட்கழிய
வுறுவே மென்ன வுரைத்தவரே
நரைத்தா ரிறந்தா ரவர்தம்மை
நான்கண் டிருந்து நாணுமே
விரைத்தாண் மலரைப் பெறலாமென்
றெண்ணி வீணே விளைக்கின்றேன்
திரைத்தாழ் கடலிற் பெரும்பிழையே
செய்தே னென்ன செய்வேனே. (155)

வாழா மனத்தின் வழிசென்று வாளா நாளைக் கழிக்கின்ற
பாழா முலகச் சிறுநடையிற் பாவியேனைப் பதிவித்தாய் [யேன்
ஊழா மெனிலெம் பெருமானே யின்னும் வினையா லொதியனை
ஏழா நரகுக் காளாவே னல்லாற் புகலென் னெளியேற்கே.

## 68. கலி விண்ணப்பம்

பள்ளத்தி லேசெலு நீர்போலென் னுள்ளம் பரப்பதலால்
எள்ளத்தி லேசிறி தாயினு நான்செல்வ தில்லையெந்தாய்
கள்ளத்தி லேசொல்லு கின்றே னலநின் கழலிணையென்
உள்ளத்தி லேநின்ற வாங்கவை காண்க வுடையவனே. (157)

## 69. கருணை விண்ணப்பம்

சொல்லற் கரிய பெரியபரஞ்
சுடரே முக்கட் சுடர்க்கொழுந்தே
மல்லற் கருமா லயன்முதலோர்
வழுத்தும் பெருஞ்சீர் மணிக்குன்றே
புல்லற் கரிதா மெளியேன்றன்
பிழைகள் யாவும் பொறுத்திந்த
அல்லற் கடனின் றெனையெடுத்தே
அருள்வா யுன்றன் அருணலமே. (158)

## 70. அடிமைப் பதிகம்

உள்ளமறிந் துதவுனம் முடையா னெல்லாம்
உடையான்மற் றொருகுறையிங் குண்டோவென்னக்
கள்ளமனத் தேனந்தோ களித்தி ருந்தேன்
கைவிடுவார் போலிருந்தாய் கருணைக் குன்றே
எள்ளலுறப் படுவேனிங் கேதுசெய்வேன்
எங்கெழுகேன் யார்க்குரைப்பே னின்னு முன்றன்
வள்ளலருட் டிறநோக்கி நிற்கின் றேனென்
மனத்துயர்போம் வகையருள மதித்திடாயே. (159)

## 71. உள்ளப் பஞ்சகம்

பேதப் படாதது பற்பல கற்பங்கள் பேர்ந்திடினும்
சேதப் படாதது நன்றிது தீதெனச் செய்கைகளால்
ஏதப் படாததுள் ளெட்டப் படாததிங் கியாவர்கட்கும்
ஓதப் படாததொன் றுண்டேமுக் கண்ணொடென் னுள்ளக
[த்தே. (160)

## 72. சரணப் பதிகம்

மறவாதுனே வாழ்த்துமெய் யன்பரை மாநிலத்தே
இறவாவகை யாட்கொண் டருளிய வீசனேமெய்
யுறவாகிய நின்பத மன்றியொன் றோர்கி லேனுன்
பிறவாநெறி தந்தரு ளென்பதென் பேசி டாயே. (161)

நாட்டார் நகைசெய்வ ரென்றேவருள் நல்கிலாய்நீ
வீட்டார் நினையென் னினைப்பா ரெனை மேவிலாயேல்
தாட்டா மரையன்றித் துணையொன்றுஞ் சார்ந்தி லேனென்
மாட்டாமை யறிந்தருள் வாய்மணி மன்று ளானே. (162)

## 73. நெஞ்சொடு நெகிழ்தல்

துட்ட வஞ்சக நெஞ்சக மேயொன்று
சொல்லக் கேள்கடல் சூழுல கத்திலே
யிட்ட மென்கொ லிறையள வேனுமோர்
இன்ப மில்லை யிடைக்கிடை யின்னலால்
நட்ட மிக்குறல் கண்டுகண் டேங்கினை
நாணு கின்றிலை நாய்க்குங் கடையைநீ
பட்ட வன்மைக ளெண்ணி லெனக்குடல்
பதைக்கு முள்ளம் பகீலென வேங்குமே. (163)

பெரியபொரு ளெவைக்குமுதற் பெரும்பொருளாம்
அரும்பொருளைப் பேசற் கொண்ணுத்
துரியநிலை யனுபவத்தைச் சுகமயமா
யெங்குமுள்ள தொன்மை தன்னை
அரியபரம் பரமான சிதம்பரத்தே
நடம்புரியு மமுதை யந்தோ
உரியபரகதியடைதற் குன்னினையேன்
மனனேநீ யுய்கு வாயே. (164)

சொன்னிலைக்கும் பொருணிலைக்குந் தூரியதாய்
ஆனந்தச் சுடரா யன்பர்
தன்னிலைக்குஞ் செந்நிலைக்கும் அண்மையதாய்
அருள்பழுக்குந் தருவா யென்றும்
முன்னிலைக்கு நின்னிலைக்குங் காண்பரிதாய்
மூவாத முதலாய்ச் சுத்த
நன்னிலைக்கு நிலையாய பசுபதியை
மனனேநீ நவின்றி டாயே. (165)

## 74. பொதுத்தனித் திருவெண்பா

வந்திக்கு மெய்யடியார் மாலற்ற வோர்மனத்திற்
சந்திக்கு மெங்கள் சயம்புவே—பந்திக்கும்
வன்மலக்கட் டெல்லாம் வலிகெட் டறநினது
நின்மலக்கட் டண்ணருடா னேர். (166)

நீலக் களங்கொண்ட நீடொளியே நீள்கங்கை
கோலச் சடைக்கணிந்த கோமளமே-ஞாலத்தில்
அந்தோ சிறியேன் அருளின்றி வாடுவது
சந்தோட மோநின் றனக்கு. (167)

நான்சிறியே னென்னினுமிந் நானிலத்தி னுன்செய்பிழை
தான்சிறிதோ வன்றுலகிற் றூன்பெரிதே-மான்கரத்தோய்
அங்ஙனமே னும்முன் அருட்பெருமைக் கிப்பெருமை
எங்ஙனமென் றுள்ள மெழும். (168)

ஆவித் துணையேயென் னாரமுதே நின்வடிவைப்
பாவித் துணையேனிப் பாவியேன்-சேவித்து
வாழ்த்தேனின் பொன்னடியில் வந்தென் றலைகுனித்துத்
தாழ்த்தேனென் செய்தேன் றவம். (169)

அன்னேயென் னப்பாவென் னாருயிர்க்கோ ராதரவே
யென்னேநின் னுள்ள மிரங்கிலையே-பொன்னே
யுடையா ரிடையென் னுளநொந்து வாடிக்
கடையேன் படுந்துயரைக் கண்டு (170)

பகுதி தகுதி விகுதி யெனும்பாட்டில்
இகலி லிடையை யிரட்டித்-தகவி
ன்ருச்சித்தான் முன்னு மதுகடையாங் கண்டீர்
திருச்சிற் சபையானைச் சேர்ந்து. (171)

இவ்வழியிற் செல்லாதே யென்னுடையான் றன்னடிசேர்
அவ்வழியிற் செல்லென் றடிக்கடிக்குச்-செவ்வழியிற்
சொன்னலுங் கேட்கிலைநீ துட்டமன மேயுனக்கிங்
கென்ன லுறவே தினி. (172)

## 75. தனித் திருப்புலம்பல்

திங்கள் விளங்குஞ் சடைத்தருவைத்
தீம்பாற் சுவையைச் செந்தேனைச்
செங்கை மருவுஞ் செழுங்கனியைச்
சீரார் முக்கட் செங்கரும்பை

மங்கை மலையாண் மணந்தபெரு
    வாழ்வைப் பவள மலைதன்னை
யெங்கள் பெருமான் றனையந்தோ
    வென்னே யெண்ணா திருந்தேனே. (173)

அன்ப ரிதய மலர்க்கோயில்
    அமர்ந்த பரமா னந்தத்தைத்
துன்ப மகலச் சுகமளிக்கும்
    தூய துணையைச் சுயஞ்சுடரை
வன்ப ரிடத்தின் மருவாத
    மணியை மணியார் மிடற்றானை
இன்ப நிறைவை யிறையோனை
    யென்னே யெண்ணா திருந்தேனே. (174)

ஒருமைப் பயனை யொருமைநெறி
    யுணர்ந்தா ருணர்வி னுள்ளுணர்வைப்
பெருமைக் கதியைப் பசுபதியைப்
    பெரியோ ரெவர்க்கும் பெரியோனை
அருமைக் களத்திற் கருமையணி
    யம்மான் றன்னை யெம்மானை
இருமைப் பயனுந் தருவானை
    யென்னே யெண்ணா திருந்தேனே. (175)

கறையோர் கண்டத் தணிந்தருளுங்
    கருணா நிதியைக் கண்ணுதலை
மறையோ னெடுமாற் கரியசிவ
    மலையை யலையில் வாரிதியைப்
பொறையோ ருள்ளம் புகுந்தொளிரும்
    புனித வொளியைப் பூரணனும்
இறையோன் றன்னை யந்தோநான்
    என்னே யெண்ணா திருந்தேனே. (176)

## 76. திருப்புகழ்ச்சி

தாயுந் தந்தையுந் தெய்வமுங் குருவுந்
    தாங்கு கின்றதோர் தலைவனும் பொருளும்
ஆயு மின்பமு மன்புமெய் யறிவும்
    அனைத்து நீயென வாதரித் திருந்தேன்
ஏயு மென்னள விரக்கமொன் றிலையேல்
    என்செய் வேனிதை யார்க்கெடுத் துரைப்பேன்
சேயு நின்னரு ளசையுறுங் கண்டாய்
    தில்லை மன்றிடைத் திகழொளி விளக்கே. (177)

அருள்பழுத் தோங்குங் கற்பகத் தருவே
அருண் மருந் தொளிர்குணக் குன்றே
அருளொனு மமுதந் தருமொரு கடலே
அருட்கிர ணங்கொளுஞ் சுடரே
அருளொளி வீசு மரும்பெறன் மணியே
அருட்சுவை கனிந்தசெம் பாகே
அருண்மணம் வீசு மொருதனி மலரே
அருண்மய மாம்பர சிவமே. (178)

## 77. தனித்திரு விருத்தம்

நீர்பூத்த வேணியு மானந்தம் பூத்து நிறைமதியின்
சீர்பூத் தமுத விளநகை பூத்த திருமுகமும்
பார்பூத்த பச்சைப் பசுங்கொடி பூத்தசெம் பாகமுமோர்
கார்பூத்த கண்டமுங் கண்பூத்த காலுமென் கண்விருந்தே.

ஆயிரங் கார்முகி னீர்விழி நீர்தர வையநின்பாற்
சேயிரங் காரெனக் கென்றேநின் பொற்பதஞ் சிந்திக்கின்றேன்
நீயிரங் காயெனி லென்செய்கு வேனின் னிலத்திற்பெற்ற
தாயிரங் காளென்ப துண்டோதன் பிள்ளை தளர்ச்சிகண்டே.

செம்பவளத் தனிக்குன்றே யருளா னந்தச்
செழுங்கனியே முக்கண்ணுடைத் தேவே மூவா
வம்புவிநீ ரனல்வளிவா னாதி யாய
வரசேயென் னுருயிர்க்கோ ரரண மாகுஞ்
சம்புசிவ சயம்புவே சங்க ராவெண்
சைலம்வளர் தெய்வதவான் றருவே மிக்க
வம்பவிழ்மென் குழலொருபால் விளங்க வோங்கும்
மழவிடைமேல் வருங்காட்சி வழங்கு வாயே. (181)

நீடுகின்ற மாமறையு நெடுமாலுந்
திசைமுகனு நிமல வாழ்க்கை
நாடுகின்ற முனிவரரு முருத்திரருந்
தேடவரு ணட்டங் கொண்டு
பாடுகின்ற மெய்யடிய ருளம்விரும்பி
யானந்தப் படிவ மாகி
யாடுகின்ற மாமணியை யாரமுதை
நினைந்துநினைந் தன்பு செய்வாம். (182)

மறைமுடி விளக்கே போற்றி மாணிக்க மலையே போற்றி
கறைமணி கண்ட போற்றி கண்ணுதற் கரும்பே போற்றி [றி
பிறைமுடிச் சடைகொண் டோங்கும் பேரருட் குன்றே போற்
சிறைதவிர்த் தெனையாட் கொண்ட சிவசிவ போற்றிபோற்றி.

செய்வகை யறியேன் மன்றுண்மா மணிநின்
திருவுளக் குறிப்பையுந் தெரியேன்
உய்வகை யறியே னுணர்விலே னந்தோ
உறுகண்மே லுறுங்கொலென் றுலைந்தேன்
மெய்வகை யடையேன் வேறெவர்க் குரைப்பேன்
வினையனே னென்செய விரைகேன்
பொய்வகை யுடையே னெங்ஙனம் புகுகேன்
புலையனேன் புகலறி யேனே. (184)

நிதியைநினைந் துனைமறந்த மதியைநினைந்
தழுகேனோ நிமலா னந்தக்
கதியையிகழ்ந் திருள்விழைந்த விதியைநினைந்
தழுகேனோ கண்போல் வாய்ந்த
பதியையுனைப் பாடாத பாட்டைநினைந்
தழுகேனோ படிற்று நெஞ்சச்
சதியைநினைந் தழுகேனோ யாதுகுறித்
தழுகேனித் தமிய னேனே. (185)

தாய்தடை யென்றேன் பின்னர்த்
தாரமே தடையென் றேனான்
சேய்தடை யென்றே னிந்தச்
சிறுதடை யெல்லாந் தீர்ந்து
தோய்தடைச் சிறியே னின்னுந்
துறந்திலே னெனைத்த டுக்க
வேய்தடை யாதோ வெந்தா
யென்செய்கே னென்செய் கேனே. (186)

எண்கடந்த வுயிர்கடொறு மொளியாய் மேவி
இருந்தருளும் பெருவாழ்வே யிறையே நின்றன்
விண்கடந்த பெரும்பதத்தை விரும்பேன் றூய்மை
விரும்புகிலே னின்னருளை விழைந்தி லேனான்
பெண்கடந்த மயலெனுமோர் முருட்டுப் பேயாற்
பிடியுண்டே னடியுண்ட பிஞ்சு போன்றேன்
கண்கடந்த குருட்டூமர் கதைபோ னின்சீர்
கண்டுரைப்ப லென்கேனோ கடைய னேனே. (187)

கள்ளுருகு மலர்மணம்போற் கலந்தெங்கு
நிறைந்தோய்நின் கருணைக் கந்தோ
முள்ளுருகும் வலியபராய் முருடுருகு
முருகாத முறைசேர் கல்லும்
வள்ளுருகு மலையுருகு மண்ணுருகு
மரமுருகு மதியி லேன்றன்

உள்ளுருகும் வகையிலையென் செய்கேனு
னேன்பிறந்தே னுதிய னேனே. (188)

மாற்றரிய பசும்பொன்னே மணியேயென்
கண்ணேகண் மணியே யார்க்கும்
தோற்றரிய சுயஞ்சுடரே யானந்தச்
செழுந்தேனே சோதியே நீ
போற்றரிய சிறியேனைப் புறம்விடினும்
வேற்றவர்பாற் போகேன் வேதந்
தேற்றரிய திருவடிக்கண் பழிவிளைப்பேன்
நின்னுணை சிறிய னேனே. (189)

கலையயின்று நெறியொழுகுங் கருத்துடையே
னலனின்னைக் கலைவி லேனு
மலையயின்ற பெருங்குணத்தெம் வள்ளலே
யெனத்துதியேன் வஞ்ச மில்லா
நிலையயின்ற நல்லோர்தந் நேசமிலேன்
கைதவமே நினைப்பே னந்தோ
உலையயின்ற வரக்கெனநெஞ் சுருகேனு
னேன்பிறந்தே னுதிய னேனே. (190)

இரும்புன்னை மலர்ச்சடையா யிவ்வுலகிற்
சிலர்தங்கட் கென்று வாய்த்த
வரும்பின்னை மார்பகத்தோ னயனுதி
சிறுதெய்வ மரபென் றேதுங்
கரும்பொன்னைச் செம்பொன்னிற் கைவிடா
திருக்கின்றார் கடைய னேற்கே
தரும்பொன்னை மாற்றழிக்கு மரும்பொன்னீ
கிடைத்துமுனைத் தழுவி லேனே. (191)

வேம்புக்குந் தண்ணிய நீர்விடு கின்றனர் வெவ்விடஞ்சேர்
பாம்புக்கும் பாலுண வீகின் றனரிப் படிமிசையான்
வீம்புக்குந் தீம்புக்கு மானே னெனினும் விடேலெனைநீ
தேம்புக்கும் வார்சடைந் தேவே கருணைச் சிவக்கொழுந்தே.

பொல்லா வாழ்க்கைத் துயரமெனும்
புணரிப் பெருக்கில் வீழ்ந்தழுந்திப்
பல்லார் நகைக்கப் பாவிபடும்
பாட்டை முழுதும் பார்த்திருந்தும்
கல்லா லமர்ந்தீ ரென்னிரண்டு
கண்க ளனையீர் கறைமிடற்றீர்
எல்லா முடையீர் மால்விடையீர்
என்னே யிரங்கி யருளீரே. (193)

நேசனுநீ சுற்றமுநீ நேர்நின் றளித்துவரும்
ஈசனுநீ யீன்றருளு மெந்தையுநீ யென்றேநின்
தேசுறுசீ ரைந்தெழுத்துஞ் செப்புகின்ற நாயேனை
ஆசகலும் வண்ணம் அருள் புரிந்தா லாகாதோ. (194)

அருளா ரமுதே யரசேநின்
அடியேன் கொடியேன் முறையேயோ
இருள்சேர் மனத்தே டிடருழந்தேன்
எந்தா யிதுதான் முறையேயோ
மருள்சேர் மடவார் மயலாலே
மாழ்கின் றேனுன் முறையேயோ
தெருளோர் சிறிது மறியாதே
திகையா நின்றேன் முறையேயோ. (195)

ஒழியாக் கவலை யுறுகின்றேன்
உடையாய் முறையோ முறையேயோ
வழியாக் கருணைக் கடலேயென்
அரசே முறையோ முறையேயோ
பொழியாப் புயலே யனையார்பால்
புகுவித் தனையே முறையேயோ
இழியாத் திரிதந் துழல்கின்றேன்
இறைவா முறையோ முறையேயோ. (196)

மதியொளிர் கங்கைச் சடைப்பெருங் கருணை
வள்ளலே தெள்ளிய வமுதே
நிதியொளிர் வாழ்க்கை யிந்திரன் முதலோர்
நிலைத்தவான் செல்வமு மண்ணிற்
பதியொளிர் வாழ்க்கை மணிமுடி யரசர்
படைத்திடுஞ் செல்வமும் வேண்டேன்
கதியொளிர் நினது திருவருட் செல்வக்
களிப்பையே கருதுகின் றனனே. (197)

வைவ மென்றெழு கின்றவர் தமக்குநல் வாழ்வு
செய்வ மென்றெழு கின்றமெய்த் திருவருட் செயலுஞ்
சைவ மென்பதுஞ் சைவத்திற் சாற்றிடுந் தலைமைத்
தெய்வ மென்பது மென்னள வில்லையென் செய்வேன். (198)

ஐயரேயும தடியனு ளுகில்
அடிகணீரென தாண்டவ ராகிற்
பொய்ய னேனுளத் தவலமும் பயமும்
புன்க ணுந்தவிர்த் தருளுதல் வேண்டும்
தைய லோர்புற நின்றுளங் களிப்பச்
சச்சி தானந்தத் தனிநடம் புரியும்

மெய்ய ரேமிகு துய்யரே தரும்
விடைய ரேயென்றன் விழியமர்ந் தவரே. (199)

பொன்னென்கோ மணியென்கோ புனிதவொளித்
திரளென்கோ பொற்பி னேங்கும்
மின்னென்கோ விளக்கென்கோ விரிசுடர்க்கோர்
சுடரென்கோ வினைய னேன்யான்
என்னென்கோ என்னென்கோ வெம்பெருமான்
திருமேனி யிருந்த வண்ணம்
உன்னென்கோ தறுதவத்தாற் கண்டுகளித்
திடப் பெற்றேன் முக்கண் மூர்த்தி. (200)

## 78. அருணிலை விளக்கம்

மெய்விளக்கே விளக்கல்லால் வேறுவிளக்
கில்லையென்றார் மேலோர் நானும்
பொய்விளக்கே விளக்கெனவுட் பொங்கிவழி
கின்றேனோர் புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர்
நண்பர்களே செப்பக் கேளீர்
நெய்விளக்கே போன்றொருதண் ணீர்விளக்கு
மெரிந்ததுசந் நிதியின் முன்னே. (201)

## 79. திருமருந் தருணிலை

திருநெடுமா லயன்றேடத் துரியநடு
வொளித்ததெனத் தெளிந்தோர் சொல்லும்
ஒருகருணை மருந்துதிரு வம்பலத்தே
யிருந்திடக்கண் டுவந்தே னந்தோ
அருவுருவங் கடந்ததுபே ரானந்த
வடிவதுநல் லருள்வாய்ந் துள்ள
திருமையுநன் களிப்பதெல்லாம் வல்லதுபேர்
நடராச னென்ப தம்மா. (202)

## 80. திருவருள் விலாசம்

ஆண்டவனீ யாகிலுனக் கடியனுநா னாகில்
அருளுடையா யின்றிரவி லருளிறையாய் வந்து
நீண்டவனே முதலியருந் தீண்டரிதாம் பொருளின்
நிலைகாட்டி அடிமுடியி னெறிமுழுதுங் காட்டி
வீண்டவனே காலையினீ விழித்தவுட னெழுந்து
விதிமுடித்துப் புரிதியிது விளங்குமெனப் புகல்வாய்
தாண்டவனே யருட்பொதுவிற் றனிமுதலே கருணைத்
தடங்கடலே நெடுந்தகையே சங்கரனே சிவனே.

## 81. அம்மை திருப்பதிகம்

பொய்யாத மொழியுமயல் செய்யாத செயலும்வீண்
போகாத நாளும் விடயம்
புரியாத மனமுமுட் பிரியாத சாந்தமும்
புந்திதள ராத நிலையும்
எய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிறைவுநினை
யென்றுமற வாத நெறியும்
இறவாத தகவுமேற் பிறவாத கதியுமிவ்
வேழையேற் கருள்செய் கண்டாய்
கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு
கோமளத் தெய்வ மலரே
கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணிவி ளக்கே
ஐய்யா னவங்கொண்ட தில்லையம்பதி மருவும்
அண்ணலார் மகிழு மணியே
அகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி
வானந்த வல்லி யுமையே. (204)

## 82. கலைமகளார் திருப்பதிகம்

சங்கம்வளர்ந் திடவளர்ந்த தமிழ்க்கொடியைச்
சரச்சுவதி தன்னை யன்பர்
துங்கமுறக் கலைபயிற்றி யுணர்வளிக்குங்
கலைஞானத் தோகை தன்னைத்
திங்கணுதற் றிருவையருட் குருவைமல
ரோங்கியபெண் தெய்வந் தன்னைத்
தங்கமலை முலையாளைக் கலையாளைத்
தொழுதுபுகழ் சாற்று கிற்பாம். (205)

கலைபயின்ற உளத்தினிக்குங் கரும்பினைமுக்
கனியையருட் கடலை யோங்கு
நிலைபயின்ற முனிவரருந் தொழுதேத்த
நான்முகனார் நீண்ட நாவிற்
றலைபயின்ற மறைபயின்று மூவுலகுங்
காக்கின்ற தாயை வாகைச்
சிலைபயின்ற நுதலாளைக் கலைவாணி
யம்மையைநாம் சிந்திப் போமே. (206)

# 83. ஆனந்தக் களிப்பு

நல்ல மருந்திம் மருந்து - சுக
நல்கும் வைத்திய நாதமருந்து (நல்ல)
அருள்வடி வான மருந்து - நம்முள்
அற்புதமாக வமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து - அன்பர்க்
கின்புருவாக விருந்த மருந்து (நல்ல)

சஞ்சலந் தீர்க்கு மருந்து - எங்குந்
தானே தானுகித் தழைக்கு மருந்து
அஞ்சலென் றுளு மருந்து - சச்சி
தானந்த மாக வமர்ந்த மருந்து (நல்ல)

பிறப்பை யொழிக்கு மருந்து - யார்க்கும்
பேசப்படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கு மருந்து - என்னு
ளென்று மதுரித் தினிக்கு மருந்து (நல்ல)

அம்பலத் தாடு மருந்து - பர
மானந்த வெள்ளத் தழுத்து மருந்து
எம்பல மாகு மருந்து - வேளு
ரென்னுந் தலத்தி லிருக்கு மருந்து (நல்ல)

பால்வண்ண மாகு மருந்து - அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ண நாடு மருந்து - உள்ளே
நோக்கு கின்றோர்களை நோக்குமருந்து (நல்ல)

பார்க்கப் பசிபோ மருந்து - தன்னை
பாரா தவர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து - அநு
கூல மருந்தென்று கொண்டமருந்து (நல்ல)

கோதிலா தோங்கு மருந்து - அன்பர்
கொள்ளைகொண் டுண்ணக் குலாவுமருந்து
மாதொரு பாக மருந்து - என்னை
வாழ்வித்த வென்கண் மணியாமருந்து (நல்ல)

என்றுங் கெடாத மருந்து-வரு
மெல்லாப் பிணிக்கு மிதுவே மருந்து
துன்றுஞ் சிவோக மருந்து-நம்மைச்
சூழ்ந்திரு மைக்குந் துணையாமருந்து (நல்ல)

கரும்பி லினிக்கு மருந்து-கடுங்
கண்டகர்க் கெல்லாங் கசக்குமருத்து
இரும்பைக் குழைக்கு மருந்து-பே
ரின்ப வெள்ளத்தே யிழுக்கு மருந்து (நல்ல)

அணிமணி கண்ட மருந்து-அரு
ளானந்த சுத்தவகண்ட மருந்து
பிணிதவி ரின்ப மருந்து-யார்க்கும்
பேசாம ருந்தென்று பேசு மருந்து (நல்ல)

மூவர்க்கரிய மருந்து-செல்வ
முத்துக் குமாரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து-தைய
லையகி கண்டு தழுவு மருந்து

நல்லமருந் திம்மருந்து-சுக நல்கும்
வைத்திய நாதமருந்து. (207)

## 84. பாங்கியர்க்கு அறிவுறுத்தல்

அம்பலத்தி லாடுகின்றார் பாங்கிமாரே-அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே-மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே.

இன்பவடிவாய்ச் சபையிற் பாங்கிமாரே-நட
மிட்டவர்மே லிட்டம்வைத்தேன் பாங்கிமாரே.

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே-நட
நேசர்நண்மை யெய்தும் வண்ணம் பாங்கிமாரே.

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமாரே-யின்ப
வுருவாகி யோங்குகின்றார் பாங்கிமாரே.

கற்பனையெல் லாங்கடந்த பாங்கிமாரே-யென்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே.

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமாரே-மூன்று
கண்ணுடையா ரென்பாரையோ பாங்கிமாரே.

காமனைக்கண் ணலெரித்தார் பாங்கிமாரே-என்றன்
காதலைக்கண் டறிவாரோ பாங்கிமாரே.

காணவிழைந்தே னவரைப் பாங்கிமாரே-கொண்டு
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே.

கிட்டவர வேண்டு மென்றூர் பாங்கிமாரே-நான்
கிட்டுமுன்னே யெட்டநின்றூர் பாங்கிமாரே,
கிள்ளையைத்தூ தாவிடுத்தேன் பாங்கிமாரே-அது
கேட்டுவரக் காணேனேயோ பாங்கிமாரே.
குற்றமெல்லாங் குணமாகப் பாங்கிமாரே-கொள்ளும்
கொற்றவரென் கொழுநர்காண் பாங்கிமாரே.
குற்றமொன்றும் செய்தறியேன் பாங்கிமாரே-என்னைக்
கொண்டுகுலம் பேசுவாரோ பாங்கிமாரே.
குஞ்சிதபொற் பாதங்கண்டாற் பாங்கிமாரே-உள்ள
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே.
கூடல் விழைந்தே னவரைப் பாங்கிமாரே-அது
கூடும்வண்ணம் கூட்டிடுவீர் பாங்கிமாரே. (208)

## 85. வெண்ணிலா

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலா-ஒரு
தந்திரம்நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே.
நாதர்முடி மேலிருந்த வெண்ணிலாவே-அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.
அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே-எங்க
ளையர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே.
வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே-மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலாவே.
குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே-அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே.
வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே-நீதான்
விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலாவே.
முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே-அந்த
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலாவே.
நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலாவே-ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே.
வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே-அந்த
வாசியென்ன பேசுகண்டாய் வெண்ணிலாவே.
ஐந்தலைப்பாம் பாட்டுகின்றூர் வெண்ணிலாவே-அவர்
அம்பலத்தி னின்றதென்ன வெண்ணிலாவே.

ஓரெழுத்திலைந் துண்டென்பார் வெண்ணிலாவே-அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே.

அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே.

அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே-அவர்
ஆடும்வகை யெப்படியோ வெண்ணிலாவே.

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே-எங்கும்
ஆகிநின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே.

அம்பரத்திலாடு கின்றார் வெண்ணிலாவே-என்னை
ஆட்டுகின்றா ரிம்பரத்தே வெண்ணிலாவே. (209)

## 86. நடேசர் கொம்மி

பல்லவி

கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி-யிரு
கொங்கை குலுங்கவே கொம்மியடி

அநுபல்லவி

நம்மையாளும் பொன் அம்பல வாணனை
நாடிக் கொம்மி யடியுங்கடி-பதம்
பாடிக் கொம்மி யடியுங்கடி

சரணங்கள்

காமமகற்றிய தூயனடி-சிவ
காம சவுந்தரி நேயனடி
மாமறை யோதுசெவ் வாயனடி-மணி
மன்றெனு ஞானுவா காயனடி

ஆனந்தத் தாண்டவ ராஜனடி-நமை
யாட்கொண் டருளிய தேஜனடி
வானந்த மாமலை மங்கை மகிழ்-வடி
வாளனடி மண வாளனடி

கல்லைக் கனிவிக்குஞ் சுத்தனடி-முடி
கங்கைக் கருளிய கர்த்தனடி
தில்லைச்சிதம்பர சித்தனடி தேவ
சிங்கமடி யுயர் தங்கமடி.

பெண்ணொரு பால்வைத்த மத்தனடி-சிறு
பிள்ளைக்கறி கொண்ட பித்தனடி
நண்ணி நமக்கரு ளத்தனடி-மிக
நல்லனடி யெல்லாம் வல்லனடி

அம்பலத் தாடல்செய் யையனடி-யன்ப
ரன்புக் கெளிதரு மெய்யனடி
தும்பை முடிக்கணி தூயனடி-சுயஞ்
சோதியடி பரஞ் சோதியடி. (210)

## 87. சிலதா ஸம்வாதம்

தண்மதி யொண்முகப் பெண்மணியே யுன்னைத்
தான்கொண்ட நாயக ராரேடி?
அண்மையிற் பொன்னணி யம்பலத் தாடல்செய்
யைய ரமுத ரழகரடி.

செங்கயற் கண்மட மங்கைநல்லா யுன்றன்
செங்கை பிடித்தவ ராரேடி?
அங்கய லாரன்று பொன்னம் பலத்தெங்க
ளானந்தத் தாண்டவ ராஜனடி.

கன்னற் சுவைமொழி மின்னிடையா யுன்னைக்
கன்னி யழித்தவ ராரேடி?
உன்னற் கரியபொன் னம்பலத் தாடல்செய்
யுத்தம ரானந்த சித்தரடி.

தீமையி லாதபெண் மாமயிலே யுன்னைச்
சேர்ந்து கலந்தவ ராரேடி?
தாம முடிக்கணிந் தம்பலத்தே யின்பத்
தாண்டவஞ் செய்யுஞ் சதுரரடி.

அன்ன நடைப் பெண்க ளாரமுதே யுன்னை
யன்பிற் புணர்ந்தவ ராரேடி?
துன்ன லுடையின ரம்பலத்தே நின்ற
தூய திருநட ராயரடி.

காரள கப்பெண் சிகாமணியே யுன்றன்
கற்பை யழித்த வராரேடி?
பேரள வைக்கடந் தம்பலத்தே நின்ற
பித்தர் பரானந்த நித்தரடி. (211)

(கீர்த்தனை-இராகம்-தோடி: ஆதி தாளம்.)

பல்லவி

தெண்டனிட்டே னென்று சொல்லடி-சுவாமிக்கு நான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி

அநுபல்லவி

தண்டலை விளக்குந்தில்லைத் தலத்திற்பொன் னம்பலத்தே
கண்டவர் மயங்கவேடங் கட்டியாடு கின்றவர்க்குத் (தெண்)

சரணங்கள்

கற்பூரவாசம் வீசும் பொற்பாந் திருமுகத்தே
கனிந்த புன்னகையாடக் கருணைக் கடைக் கணுட
அற்பார் பொன்னம்பலத்தே யானந்தத்தாண்டவ
மாடிக்கொண்டே யென்னை யாட்டங்கண் டாருக்கு (தெ)

இழிந்தாலு நம்மையிங்கே யேற்றுவா ரென்றடைந்தால்
ஏற்றுவார் போலேபின்னு மிழியவைப்பாருக்குப்
பழந்தான் நழுவிமெல்லப் பாலில் விழுந்த தென்ன
பசப்பிப் பசப்பியன்பர் பண்டம் பறிப்ப வர்க்கு (தெ)

சுட்டதிருநீறுபூசி தொந்தோமென் றுடுவார்க்குத்
தோன்றுதலை மாலையணி தோள்விளங்க வருவார்க்குப்
பிட்டுக்காசைப் பட்டுமாறன் பிரம்படி பட்ட வர்க்கு
பிள்ளைக்கறிக் காசைகொண்ட கள்ளத்தவ வேடருக்கு (தெ)

வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச்செய் பவருக்கு
மாசுபறித்தவர் கையிற் காசுபறிக் கின்றவர்க்குத்
தாழ்ந்தாரை யடிக்கடித் தாழக்காண் பவருக்குத்
தாஞகி நாஞகித் தனியேநின் றவருக்கு (தெ)

ஆதியந்த நடுவில்லா ஆனந்த நாடருக்கு
அண்டருயிர் காத்த மணி கண்டசசி கண்டருக்கு
சோதிமய மாய்விளங்குந் தூயவடி வாளருக்குத்
தொண்டர் குடிகெடுக்கவே துஜங்கட்டிக்கொண்ட வர்க்கு

பாட்டுக்காசைப்பட்டு முன்னம் பரவைதன்வாயிலிற்போய்
பண்புரைத்துத் தூதனென்றே பட்டங்கட்டிக் கொண்ட
வீட்டுக்காசைப்படுவாரை வீட்டைவிட்டுத்துரத்தியே[வர்க்கு
வேட்டாண்டியாயுலகிலோட்டாண்டி யாக்குவார்க்கு(தெ)

தாய்வயிற்றிற் பிறவாது தானேமுளைத்த வர்க்கு
சாதிகுலமறியாது தாண்டவஞ்செய் கின்றவர்க்கு
ஏயதொழி லருளு மென்பிராண நாயகர்க்கு
ஏமாந்தவரை யெல்லா மேமாத்து மீசருக்கு (தெ) (212)

(கீர்த்தனை-இராகம் காம்போதி; தாளம்-(ஆதி)

பல்லவி

இன்னந்தயவு வரவிலையா-உனக்கென்மீதி
லென்ன வர்மஞ் சொலையா.

சரணங்கள்

அன்னம் பாலிக்குந்தில்லைப் பொன்னம்பலத்தி லாடும்
அரசே யரசே யரசேயென் றலறவும் (இன்னந்)

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமைகொண்ட
சிவமே சிவமே சிவமேயென் றலறவும் (இன்னந்)

முன்னம் பிழைபொறுத்தா யின்னம்பொழுது விட்டால்
முறையோ முறையோ முறையோவென்றலறவும் (இன்னந்)

தன்னையறியாவென்னை யின்னலுறச் செய்தாயே
தகுமோ தகுமோ தகுமோவென் றலறவும் (இன்னந்)

பண்டு மகிழ்ந் தென்னையாட் கொண்டு கருணைசெய்த
பரமே பரமே பரமேயென் றலறவும் (இன்னந்)

கொண்டு குலம் பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்
குருவே குருவே குருவே யென் றலறவும் (இன்னந்) (213)

## 88. நற்றாய் கவன்றது

ஓடுவாள் தில்லைத் திருச்சிற் றம்பலமென்
றுருகுவாள் உணர்வில ளாகித்
தேடுவாள் திகைப்பாள் தியங்குவாள் ஐயோ
தெய்வமே தெய்வமே என்பாள்
பாடுவாள் பதைப்பாள் பதறுவாள் நான்பெண்
பாவிகாண் பாவிகாண் என்பாள்
வாடுவாள் மயங்கி வருந்துவாள் இருந்து
வல்வினை யேன்பெற்ற மகளே. (214)

திருவெலா மளிக்குந் தெய்வமென் கின்றாள்
திருச்சிற் றம்பலவ னென்கின்றாள்
திருவெலா முடைய வொருவனென் கின்றாள்
உச்சிமேற் கரங்குவிக் கின்றாள்
கருவெலாங் கடந்தாங் கவன்றிருமேனி
காண்பதெந் நாள்கொலென் கின்றாள்
மருவெலா மயங்கு மலர்க்குழன் முடியாள்
வருந்துகின் றாளென் றன் மகளே. (215)

மன்றிடை நடிக்கு மணாளனை யல்லால்
மதிப்பேனோ பிறரையென் கின்றாள்
வன்றுயர் நீக்கு மவன்றிரு வடியை
மறப்பனோ கணமுமென் கின்றாள்
ஒன்று மில்லவனின் றுரைக்கினு மெல்லாம்
உடையவ னாகுமென் கின்றாள்
பொன்றுதல் பிறழ்த லினியுறே னென்றே
பொற்றொடி பொங்கு கின்றாளே. (216)

## 89. சல்லாப லகரி

சுந்தர நீறணி சுந்தரர் நடனத் தொழில் வல்லார்
வந்தன ரிங்கே வந்தன மென்றேன் மாதே நீ
மந்தண மிதுகே ளந்தண மிலநம் வாழ்வெல்லா
மந்தர மென்றோ ரென்னடி யம்மா வவர்சூதே.

நம்பல மாமென நன்மனை புக்கார் நடராஜர்
எம்பல மாவீ ரெம்பெரு மானீ ரேயென்றேன்
வம்பல மடவா யெம்முடையின்ப வாழ்வெல்லாம்
அம்பல மென்றா ரென்னடி யம்மா வவர்சூதே. (217)

வேட்கைக் கொத்து

## 90. தலைமகள் பாங்கியோடு கூறல்

விண்படைத்த புகழ்த்தில்லை யம்பலத்தா னெவர்க்கும்
மேலான னன்பருள மேவுநட ராஜன்
பண்படைத்த வெனையறியா விளம்பருவந் தனிலே
பரிந்துவந்து மாலையிட்டான் பார்த்தறியான் மீட்டும்
பெண்படைத்த பெண்களெலா மவமதித்தே வலது
பேசுகின்றார் கூசுகின்றேன் பிச்சையென லானேன்
கண்படைத்துங் குழியில்விழக் கணக்குமுண்டோ வவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (218)

என்னுயிரிற் கலந்துகலந் தினிக்கின்ற பெருமான்
என்னிறைவன் பொதுவினட மியற்றுநட ராஜன்
தன்னையறியாப் பருவத் தென்னைமணம் புரிந்தான்
தனையறிந்த பருவத்தே யெனையறிய விரும்பான்
பின்னையன்றி முன்னுமொரு பிழைபுரிந்தே னில்லை
பெண்பரிதா பங்காணல் பெருந்தகைக்கு மழகோ
கன்னலென்றாற் கைக்கின்ற கணக்குமுண்டோ வவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (219)

சின்மயமாம் பொதுவினிலே தன்மயமாய் நின்று
திருநடஞ்செய் பெருங்கருணைச் செல்வநடராஜ
னென்மயநா னறியாத விளம்பருவந் தனிலே
யென்னைமணம் புரிந்தனனீ தெல்லாரு மறிவா
ரின்மயமில் லாதவர்போ லின்றுமணந் தருளா
னிறையளவும் பிழைபுரிந்தே னில்லையவ னிதயங்
கன்மயமோ வன்றுசுவைக் கனிமயமே யென்னுங்
கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாயென் றோழி. (220)

எண்குணத்தா னெல்லார்க்கு மிறைவ னெல்லாம் வல்லான்
என்னகத்தும் புறத்துமுளா னின்பநட ராஜன்
பெண்குணத்தை யறியாத விளம்பருவந் தனிலே
பிச்சேற்றி மணம்புரிந்தான் பெரிதுகளித் திருந்தேன்
வண்குணத்தா லநுபவநா னறியநின்ற பொழுதில்
வந்தறியா னின்பமொன்றுந் தந்தறியா னவனும்
வெண்குணத்தா னல்லன்மிகு நல்லனெனப் பலகால்
விழித்தறிந்தும் விடுவேனோ விளம்பாயென் றோழி.(221)

பொய்யாத புகழுடையான் பொதுவினடம் புரிவான்
புண்ணியர்பா னண்ணியநற் புனிதநட ராஜன்
கொய்யாத வரும்பனைய விளம்பருவந் தனிலே
குறித்துமணம் புரிந்தனனுன் மறித்தும்வரக் காணேன்
செய்யாத செய்கையொன்றுஞ் செய்தறியேன் சிறிதுந்
திருவுளமே யறியுமற்றென் னொருவுளத்தின் செயல்கள்
நையாத வென்றனுயிர் நாதனருட் பெருமை
நானறிந்தும் விடுவேனோ நவிலாயென் றோழி. (222)

ஊன்மறந்த வுயிரகத்தே யொளிநிறைந்த வொருவன்
உலகமெலா முடையவனென் னுடையநட ராஜன்
பான்மறந்த சிறியவிளம் பருவமதின் மாலை
பரிந்தணிந்தான் றெரிந்ததனிப் பருவமிதிற் பரியான்
தான்மறந்தா னெனினுமிங்கு நான்மறக்க மாட்டேன்
தவத்தேறி யவத்திழியச் சம்மதமும் வருமோ
கோன்மறந்த குடியேபோன் மிடியேனு னவன்றன்
குணமறிந்தும் விடுவேனோ கூறுயென் றோழி. (223)

# மூன்ருவது திருமுறை

## 1. திருவுலாப் பேறு

### தலைவி பாங்கியொடு கிளத்தல்

தென்னூர் சோலைத் திருவொற்றித்
 தியாகப் பெருமான் பவனிவரப்
பொன்னூர் வீதி தனிற்பார்த்தேன்
 புளகம் போர்த்தேன் மயல்பூத்தேன்
மின்னூர் பலர்க்கு முன்னாக
 மேவி யவன்ற னெழில்வேட்டு
இன்னூ ரணங்கே யென்னடிநான்
 இச்சை மயமாய் நின்றதுவே. (1)

## நாரையுங் கிளியும் நாட்டுறு தூது

### தலைவிபறவைமேல் வைத்துப் பையுளெய்தல்

மன்னுங் கருணை வழிவிழியார்
 மதுர மொழியா ரொற்றிநகர்த்
துன்னு மவர்தந் திருமுன்போய்
 சுகங்கா ணின்று சொல்லீரோ
மின்னுந் தேவர் திருமுடிமேல்
 விளங்குஞ் சடையைக் கண்டவுடன்
பின்னுஞ் சடையை யவிழ்த்தொன்றும்
 பேசா ளும்மைப் பிரிந்தென்றே. (2)

வடிக்குந் தமிழ்த்தீந் தேனென்ன
 வசனம் புகல்வா ரொற்றிதனில்
நடிக்குந் தியாகர் திருமுன்போய்
 நாராய் நின்று நவிற்ருயோ
பிடிக்குங் கிடையா நடையுடைய
 பெண்க ளெல்லாம் பிச்சியென
நொடிக்கும் படிக்கு மிகுங்காம
 நோயால் வருந்தி நோவதுவே. (3)

ஒல்லார் புரமூன் றெரிசெய்தா
    ரொற்றி யமர்ந்தா ரெல்லார்க்கும்
நல்லார் வல்லா ரவர்முன்போய்
    நாராய் நின்று நவிற்றுதியே
அல்லார் குழலாள் கண்ணீராம்
    ஆற்றி லலைந்தா ளணங்கனையார்
பல்லார் சூழ்ந்து பழிதூற்றப்
    படுத்தாள் விடுத்தாள் பாயலென்றே. (4)

## 3. இரங்கன் மாலை

ஆல மிருந்த கழுத்தழக
    ரணிசே ரொற்றி யாலயத்தார்
சால வெனக்கு மாலையிட்ட
    தன்மை யொன்றே யல்லாது
கால நிரம்ப வவர்புயத்தைக்
    கட்டி யணைந்த தில்லையடி
கோல மதிவாண் முகத்தாயென்
    குறையை யெவர்க்குக் கூறுவனே. (5)

## 4. சல்லாப வியன்மொழி

வெற்றி யிருந்த மழுப்படையார்
    விடையார் மேரு வில்லுடையார்
பெற்றி யிருந்த மனத்தர்தமுட்
    பிறங்குந் தியாகப் பெருமானார்
சுற்றி யிருந்த பெண்களெலாஞ்
    சொல்லி நகைக்க வருகணைந்தார்
ஒற்றி யிருமென் றுரைத்தேனான்
    ஒற்றி யிருந்தே னேன்றாரே. (6)

## 5. இன்பக் கிளவி

பாரா திருந்தார் தமதுமுகம்
    பார்த்து வருந்தும் பாவைதனைச்
சேரா திருந்தார் திருவொற்றித்
    திகழுந் தியாகப் பெருமானார்
வாரா திருந்தா ரின்னுமிவள்
    வருத்தங் கேட்டு மாலைதனைத்
தாரா திருந்தார் சலமகளைத்
    தாழ்ந்த சடையிற் றரித்தாரே. (7)

சடையிற் றரித்தா ரொருத்திதனைத்
தழுவி மகிழ்மற் றொருபெண்ணைப்
புடையிற் றரித்தார் மகளேநீ
போனு லெங்கே தரிப்பாரோ
கடையிற் றரித்த விடமதனைக்
களத்திற் றரித்தார் கரித்தோலை
இடையிற் றரித்தா ரொற்றியூர்
இருந்தா ரிருந்தா ரென்னுளத்தே. (8)

## 6. இன்பப் புகழ்ச்சி

மாடொன் றுடையா ருணவின்றி
மண்ணுண் டதுகாண் மலரோன்றன்
ஓடொன் றுடையா ரொற்றிவைத்தா
ரூரை மகிழ்வோ டுவந்தாலங்
காடொன் றுடையார் கண்டமட்டுங்
கறுத்தார் பூத கணத்தோடு
ஈடொன் றுடையார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (9)

ஊரு மில்லா ரொற்றிவைத்தா
ருறவொன் றில்லார் பகையில்லார்
பேரு மில்லா ரெவ்விடத்தும்
பிறவா ரிறவார் பேச்சில்லார்
நேரு மில்லார் தாய்தந்தை
நேயர் தம்மோ டுடன்பிறந்தோர்
யாரு மில்லார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (10)

துத்திப் படத்தார் சடைத்தலையார்
தொலையாப் பலிதேர் தொன்மையினர்
முத்திக் குடையார் மண்ணெடுப்பார்
மொத்துண் டுழல்வார் மொய்கழற்காம்
புத்திக் குரிய பத்தர்கடம்
பொருளை யுடலை யாவையுமே
யெத்திப் பறிப்பார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (11)

மாறித் திரிவார் மனமடையார்
வணங்கு மடியார் மனந்தோறும்
வீறித் திரிவார் வெறுவெளியின்
மேவா நிற்பார் விறகுவிலை

கூறித் திரிவார் குதிரையின்மேற்
கொள்வார் பசுவிற் கோல்வளையோ
டேறித் திரிவார் மகளேநீ
யேதுக் கவரை விழைந்தனையே. (12)

## 7. திருவுலாத் திறம்

தேனார் கமலத் தடஞ்சூழுந்
திருவா ழொற்றித் தியாகரவர்
வானா ரமரர் முனிவர்தொழ
மண்ணோர் வணங்க வரும்பவனி
தானார் வங்கொண் டகமலரத்
தாழ்ந்து சூழ்ந்து கண்டலது
கானா ரலங்கற் பெண்ணேநான்
கண்க ளுறக்கங் கொள்ளேனே. (13)

திருமால் வணங்கு மொற்றிநகர்
செழிக்குஞ் செல்வத் தியாகரவர்
கருமா லகற்றுந் தொண்டர்குழாங்
கண்டு களிக்க வரும்பவனி
மருமாண் புடைய மனமகிழ்ந்து
மலர்க்கை கூப்பிக் கண்டலது
பெருமான் வடுக்கட் பெண்ணேநான்
பெற்றா ளோடும் பேசேனே. (14)

சேலார் தடஞ்சூ ழொற்றிநகர்
சேருஞ் செல்வத் தியாகரவ
ராலார் களமேல் விளங்குமுக
மழகு ததும்ப வரும்பவனி
நாலா ரணஞ்சூழ் வீதியிடை
நாடிப் புகுந்து கண்டலது
பாலார் குதலைப் பெண்ணேநான்
பாயிற் படுக்கை பொருந்தேனே. (15)

தென்னஞ் சோலை வளரொற்றி
யூர்வாழ் செல்வத் தியாகரவர்
பின்னுஞ் சடைமேற் பிறைவிளங்கிப்
பிறங்கா நிற்க வரும்பவனி
மன்னுங் கரங்க டலைகுவித்து
வணங்கி வாழ்த்திக் கண்டலது
துன்னுந் துவர்வாய்ப் பெண்ணேநான்
சோறெள் ளளவு முண்ணேனே. (16)

## 8. வியப்பு மொழி

மாதர் மணியே மகளேநீ வாய்த்த தவந்தான் யாதறியேன்
வேத ரனந்தர் மாலனந்தர் மேவி வணங்கக் காண்பரியார்
நாதர் நடன நாயகனூர் நல்லோ ருளத்து நண்ணுகின்றோர்
கோத ரறியாத் தியாகர்தமைக் கூடி யுடலங் குளிர்ந்தனையே.

என்னு ருயிர்போன் மகளேநீயென்ன தவந்தா னியற்றினையோ
பொன்னூர் புயனு மலரோனும் போற்றி வணங்கும் பொற்ப [தத்தார்
தென்னு ரொற்றித் திருநகரார் தியாக ரெனுமோர் திருப் [பெயரார்
கொன்னூர் சூலப் படையவரைக்கூடி யுடலங் குளிர்ந்தனையே.

## 9. புணராவிரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்

உள்ளார் புறத்தா ரொற்றியெனு
மூரா ரொப்பென் றொன்றுமிலார்
வள்ளா லென்று மறைதுதிக்க
வருவா ரின்னும் வந்திலரே
யெள்ளா திருந்த பெண்களெலா
மிகழாநின்றா ரினியமொழித்
தெள்ளா ரமுதே யென்னடிநான்
செய்வதொன்றுந் தெரிந்திலனே. (19)

பொய்ய ருளத்துப் புகுந்தறியார்
போத னெடுமால் காண்பரிதா
மையர்திருவா மொற்றிநக
ரமர்ந்தா ரின்னு மணைந்திலரே
வைய மடவார் நகைக்கின்றார்
மாரன் கணையாற் றிகைக்கின்றேன்
செய்ய முகத்தா யென்னடிநான்
செய்வ தொன்றுந் தெரிந்திலனே. (20)

## 10. குறியா ராய்ச்சி

ஆழி விடையா ரருளுடையா ரளவிட்டறியா வழகுடையார்
ஊழி வரினு மழியாத வொற்றித் தலம்வா ழுத்தமனார்
வாழி யென்பால் வருவாரோ வறியேன் வருந்த வாராரோ
தோழி யனைய குறமடவாய் துணிந்தோர் குறிநீ சொல்லு [வையே.

அணியா ரடியார்க் கயன்முதலா மமரர்க் கெல்லா மரிய
[ரென்பாம்
பணியா ரொற்றிப் பதியுடையார் பரிந்தென் முகந்தான்
[பார்ப்பாரோ
தணியாக் காதல் தவிர்ப்பாரோ சார்ந்து வரவு தாழ்ப்பாரோ
குணியா வெழில்சேர் குறமடவாய் குறிதானென்று கூறு
[வையே

## 11. ஆற்றுக்காதலின் இரங்கல்

எங்கள் காழிக் கவுணியரை
யெழிலார் சிவிகை யேற்றிவைத்தோர்
திங்க ளணியுஞ் செஞ்சடையார்
தியாகர் திருவா ழொற்றியினர்
அங்க ளணிபூந் தார்ப்புயத்தி
லணைத்தா ரல்ல ரெனைமடவார்
தங்க ளலரோ தாழாதென்
சகியே யினிநான் சகியேனே. (23)

## 12. திருக்கோலச் சிறப்பு

அள்ளிக் கொடுக்குங் கருணையினு
ரணிசே ரொற்றி யாலயத்தார்
வள்ளிக் குவந்தோன் றனையீன்ற
வள்ளல் பவனி வரக்கண்டேன்
துள்ளிக் குதித்தென் மனமவரைச்
சூழ்ந்த தின்னும் வந்ததிலை
யெள்ளிக் கணியா வவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (24)

கொழுதி யளிதே னுழுதுண்ணுங்
கொன்றைச் சடையார் கூடலுடை
வழுதி மருகர் திருவொற்றி
வாணர் பவனி வரக்கண்டேன்
பழுதி லவனுந் திருமாலும்
படைக்குங் கமலப் பண்ணவனும்
எழுதி முடியா வவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே. (25)

மாழை மணித்தோ ளெட்டுடையார்
மழுமா னேந்து மலர்க்கரத்தார்
வாழை வளஞ்சூ ழொற்றியூர்
வாணர் பவனி வரக்கண்டேன்

யாழை மலைக்கு மொழிமடவார்
யாரு மயங்கிக் கலையவிழ்ந்தார்
ஏழை யேனு னவரழகை
யென்னென் றுரைப்ப தேந்திழையே (26)

## 13. சோதிட நாடல்

பொன்னஞ் சிலையாற் புரமெரித்தார்
பொழில்சூ ழொற்றிப் புண்ணியனார்
முன்னஞ் சருந்து முக்கணனார்
மூவ ரறியா முதல்வர்வர
வின்னஞ் சிலநாள் சென்றிடுமோ
விலதே யின்று வருவாரோ
வுன்னஞ் சிறந்தீர் சோதிடம்பார்த்
துரைப்பீர் புரிநூ லுத்தமரே. (27)

## 14. திருவருட் பெருமிதம்

கருவாழ் வகற்றுங் கண்ணுதலார்
கண்ண னயனுங் காண்பரியார்
திருவா ழொற்றித் தேவரெனுஞ்
செல்வ ரவரே செல்வமதிற்
பெருவாழ் வுடையா ரெனநினைத்தாய்
பிச்சை யெடுத்த தறிந்திலையோ
இருவா மயல்கொண் டெதுபெறுவாய்
யேழை யடிநீ யென்மகளே. 28)

மட்டுக் கடங்கா வண்கையினர்
வளஞ்சே ரொற்றி வாணரவர்
பட்டுத் துகிலே திசைகளெவாம்
படர்ந்த தென்னப் பரிந்தனையோ
கட்டத் துகிலுங் கிடையாது
கந்தை யுடுத்த தறிந்திலையோ
இட்டுப் புணர்ந்திங் கெதுபெறுவாய்
யேழை யடிநீ யென்மகளே (29)

உள்ளி யுருகு மவர்க்கருளு
மொற்றி நகர்வா ழுத்தமர்க்கு
வெள்ளி மலையும் பொன்மலையும்
வீடென் றுரைப்பா ராஞலும்

கள்ளி நெருங்கிப் புறங்கொள்சுடு
காடே யிடங்காண் கண்டறிநீ
யெள்ளின் மயல்கொண் டெதுபெறுவாய்
யேழை யடிநீ யென்மகளே. (30)

## 15. காதற்சிறப்புக் கதுவா மாண்பு

உலக முடையார் தம்மூரை யொற்றிவைத்தா ரென்றாலும்
அலகில் புகழார் காபாலி யாகத் திரிந்தா ரென்றாலும்
திலக மனையார் புறங்காட்டிற் சேர்ந்து நடித்தா ரென்றாலும்
கலக விழியாய் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

என்னை யுடையா ரொருவேட னெச்சி லுவந்தா ரென்றாலும்
அன்னை யனையா ரொருமகனை யறுக்க வுரைத்தா ரென்றாலும்
துன்னு மிறையார் தொண்டனுக்குத் தூத ராணரென்றாலும்
கன்னியிதுகேள் நானவர்மேற் காத லொழியேன் கனவினுமே.

என்கண் ணனையார் மலைமகளை யிச்சித் தணைந்தா ராணலும்
வன்கண் ணடையார் தீக்கண்ணான் மதனையெரித்தா ராணலும்
புன்கண் ணறுப்பார் புன்னகையாற் புரத்தை யழித்தா
[ராணலும்
கன்னன் மொழியாய் நானவர்மேற் காத லொழியேன்
[கனவினுமே.

## 16. காதன் மாட்சி

தக்க வளஞ்சே ரொற்றியில்வாழ்
தம்பி ராணர் பவனிதனைத்
துக்க மகன்று காண வந்தால்
துகிலைக் கவர்ந்து துணிவுகொண்டே
மக்க மருவு நமைத்திரும்பிப்
பாரா தோடு கின்றார்நாம்
ஒக்க வோடி னாலுமவர்
ஓட்டம் பிடிக்க வொண்ணாதே. (34)

# நான்காவது திருமுறை

## 1. அன்பு மாலை

அற்புதப்பொன் னம்பலத்தே யாடுகின்ற வரசே
யாரமுதே யடியேன்ற னன்பேயென் னறிவே
கற்புதவு பெருங்கருணைக் கடலேயென் கண்ணே
கண்ணுதலே யானந்தக் களிப்பேமெய்க் கதியே
வெற்புதவு பசுங்கொடியை மருவுபெருந் தருவே
வேதவா கமமுடியின் விளங்குமொளி விளக்கே
பொற்புறவே யிவ்வுலகிற் பொருந்துசித்த ஞனேன்
பொருத்தமுநின் றிருவருளின் பொருத்தமதுதானே.(1)

துப்பாடு திருமேனிச் சோதிமணிச் சுடரே
துரியவெளிக் குள்ளிருந்த சுத்தசிவ வெளியே
அப்பாடு சடைமுடியெம் மானந்த மலையே
அருட்கடலே குருவேயென் னுண்டவனே யரசே
யிப்பாடு படவெனக்கு முடியாது துரையே
யிரங்கியருள் செயல்வேண்டு மிதுதருணங் கண்டாய்
தப்பாடு வேனெனினு மென்னைவிடத் துணியேற்
றணிமன்று ணடம்புரியுந் தாண்மலரெந் தாயே. (2)

குன்றாத குணக்குன்றே கோவாத மணியே
குருவேயென் குடிமுழுதாட் கொண்டசிவக் கொழுந்தே
யென்றாதை யாகியெனக் கன்னையுமாய் நின்றே
யெழுமையுமென் றனையாண்ட வென்னுயிரின் றுணையே
பொன்றாத பொருளேமெய்ப் புண்ணியத்தின் பயனே
பொய்யடியேன் பிழைகளெலாம் பொறுத்தபெருந் [தகையே
யன்றால நிழலமலர்ந்த வருளிறையே யெளியே
னுசையெலா நின்னடிமே லன்றியொன்று மிலையே. (3)

பால்காட்டு மொளிவண்ணப் படிகமணி மலையே
பத்திக்கு நிலைதனிலே தித்திக்கும் பழமே
சேல்காட்டும் விழிக்கடையாற் றிருவருளைக் காட்டுஞ்
சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகனே

## 4. ஆனந்த மாலை

சண்பை மறைக் கொழுந்துமகிழ் தரவமுதங் கொடுத்தாள்
 தயவுடையா ளெனையுடையாள் சர்வசத்தி யுடையாள்
செண்பகப்பொன் மேனியினுள் செய்யமலர்ப் பதத்தாள்
 சிவகாம வல்லிபெருந் தேவியுளங் களிப்பப்
பண்பகர்பொன் னம்பலத்தே யாநந்த நடஞ்செய்
 பரம்பரநின் றிருவருளைப் பாடுகின்றேன் மகிழ்ந்து
வெண்பகர்குற் றங்களெல்லாங் குணமாகக் கொள்ளு
 மெந்துரையென் றெண்ணுகின்ற வெண்ணமத னாலே.

## 5. சௌந்தர மாலை

சேலோடு மிணைந்தவிழிச் செல்வி பெருந்தேவி
 சிவகாம வல்லியோடு சிவபோக வடிவாய்
மேலோடு கீழ்நடுவுங் கடந்தோங்கு வெளியில்
 விளங்கியநின் றிருவுருவை யுளங்கொளும்போ தெல்லாம்
பாலோடு பழம்பிழிந்து தேன்கலந்து பாகும்
 பசுநெய்யுங் கூட்டியுண்ட படியிருப்ப தென்றால்
மாலோடு காண்கின்ற கண்களுக்கங் கிருந்த
 வண்ணமிந்த வண்ணமென வெண்ணவுமொண் ணாதே.

சித்தியெலா மளித்தசிவ சத்தியெனை யுடையாள்
 சிவகாம வல்லியொடு சிவஞானப் பொதுவின்
முத்தியெலாந் தரவிளங்கு முன்னவநின் வடிவை
 மூடமனச் சிறியேனு னுடவரும் பொழுது
புத்தியெலா மொன்றாகிப் புத்தமுத முண்டாற்
 போலுமிருப் பதுவதற்கு மேலுமிருப் பதுவேற்
பத்தியெலா முடையவர்கள் காணுமிடத் திருக்கும்
 படிதானெப் படியோவிப் படியென்ப தரிதே. (15)

## 6. அபராத மன்னிப்பு மாலை

செய்வகைநன் கறியாதே திருவருளோ டூடிச்
 சிலபுகன்றே னறிவறியாச் சிறியரினுஞ் சிறியேன்
பொய்வகையேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
 புண்ணியனே மதியணிந்த புரிசடையாய் விடையாய்
மெய்வகையோர் விழித்திருப்ப விரும்பியெனை யன்றே
 மிகவலிந்தாட் கொண்டருளி வினைதவிர்த்த விமலா
வைவகைய கடவுளரு மந்தணரும் பரவ
 வாநந்தத் திருநடஞ்செய் யம்பலத்தெம் மரசே. (16)

மால்காட்டி மறையாதென் மதிக்குமதி யாகி
வழிகாட்டி வழங்குகின்ற வகையதனைக் காட்டிக்
கால்காட்டிக் காலாலே காண்பதுவு மெனக்கே
காட்டியநின் கருணைக்குக் கைம்மாறென் றிலனே. (4)

செவ்வண்ணத் திருமேனி கொண்டொருபாற் பசந்து
திகழ்படிக வண்ணமொடு தித்திக்குங் கனியே
யிவ்வண்ண மெனமறைக்கு மெட்டாமெய்ப் பொருளே
யென்னுயிரே யென்னுயிர்க்குள் ளிருந்தருளும் பதியே
யவ்வண்ணப் பெருந்தகையே யம்பலத்தே நடஞ்செய்
யாரமுதே யடியேனிங் ககமகிழ்ந்து புரித
லெவ்வண்ண மதுவண்ண மிசைத்தருளல் வேண்டும்
என்னுடைய நாயகனே யிதுதருணங் காணே. (5)

## 2. அருட்பிரகாச மாலை

மறைமுடிக்கு மணியாகி வயங்கியசே வடிகண்
மண்மீது படநடந்து வந்தருளி யடியேன்
குறைமுடிக்கும் படிக்கதவந் திறப்பித்து நின்று
கூவியெனை யழைத்தொன்று கொடுத்தருளிச் செய்தாய்
கறைமுடிக்கும் களத்தரசே கருணைநெடுங் கடலே
கண்ணோங்கு மொளியேசிற் கநவெளிக்குள் வெளியே
பிறைமுடிக்குஞ் சடைக்கடவுட் பெருந்தருவே குருவே
பெரியமன்று ணடம்புரியும் பெரியபரம் பொருளே. (6)

காணுகின்ற கண்களுக்குக் காட்டுகின்ற வொளியாய்க்
காட்டுகின்ற வொளிதனக்குக் காட்டுவிக்கு மொளியாய்
பூணுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியேன்
பொருந்துமிடத் தடைந்துகத வந்திறக்கப் புரிந்து
கோணுகின்ற மனத்தாலே நாணுவதேன் மகனே [றெனக்கு
குறைவறவாழ் கெனமகிழ்ந்து கொடுத்தனையென்
மாணுகின்ற நின்னருளின் பெருமையையென் னென்பேன்
மணிமன்றி லானந்த மாநடஞ்செய் யரசே. (7)

எவ்வுலகு மெவ்வுயிரு மெச்செயலுந் தோன்றி
யியங்குமிட மாகியெல்லா முயங்குமிட மாகித்
தெவ்வுலகு நண்புலகுஞ் சமனாகக் கண்ட
சித்தர்கடஞ் சித்தத்தே தித்திக்கும் பதங்கள்
இவ்வுலகில் வருந்தநடந் தென்பொருட்டா லிரவி [தாய்
லெழிற்கதவந் திறப்பித்தங் கென்கையிலொன் றளித்
அவ்வுலக முதலுலக மனைத்துமகிழ்ந் தேத்த
அம்பலத்தே நடம்புரியுஞ் செம்பவளக் குன்றே. (8)

பாடுகின்ற மறைகளெலா மொருபுறஞ்சூழ்ந் தாடப்
பத்தரொடு முத்தரெலாம் பார்த்தாடப் பொதுவி
லாடுகின்ற திருவடிகள் வருந்தநடந் தடியே
னடையுமிடத் தடைந்திரவிற் காப்பவிழ்க்கப் புரிந்து
நாடுகின்ற சிறியேனை யழைத்தருளி நோக்கி
நகைமுகஞ்செய் தென்கரத்தே நல்கிஙையொன் றிதனல்
வாடுகின்ற வாட்டமெலாந் தவிர்ந்துமகிழ் கின்றேன்.
மன்னவநின் பொன்னருளை யென்னெனவாழ்த் துவனே.

எம்மதத்தி லெவரெவர்க்கு மியைந்தவனு பவமா
யெல்லாமா யல்லவுமா யிருந்தபடி யிருந்தே
யம்மதப்பொன் னம்பலத்தி லாநந்த நடஞ்செய்
யரும்பெருஞ்சே வடியிணைக ளசைந்துமிக வருந்த
விம்மதத்தி லென்பொருட்டா யிரவினடந் தருளி
யெழிற்கதவந் திறப்பித்தங் கெனையழைத்தென் கரத்தே
சம்மதத்தா லொன்றளித்த தயவினையென் புகல்வேன்
தம்மையறிந் தவரறிவின் முன்னுமொளி மணியே. (10)

உலகியலோ டருளியலு மொருங்கறியச் சிறியேன் [கித்
உணர்விலிருந் துணர்த்தியென துயிர்க்குயிராய் விளங்
திலகமெனத் திகழ்ந்தெனது சென்னிமிசை யமர்ந்த
திருவடிகள் வருந்தநடை செய்தருளி யடியேன்
இலகுமனைக் கதவிரவிற் றிறப்பித்தங் கென்னை
யினிதழைத்தொன் றளித்துமகிழ்ந் தின்னுநெடுங் காலம்
புலவர்தொழ வாழ்கவென்றாய் பொதுவினடம் புரியும் [னே.
பொருளேநின் னருளேமெய்ப் பொருளெனத்தேர்ந் தன

## 3. பிரசாத மாலை

உன்னுதற்கு முணர்வதற்கு முவட்டாத வடிவ
மொன்றெடுத்து மெய்யன்ப ருவக்கவெழுந் தருளி
மூன்னுதற்கோ ரணுத்துணையுந் தரமில்லாச் சிறியேன்
முகநோக்கிச் செழுமணப்பூ முகமலர்ந்து கொடுத்தாய்
துன்னுதற்கிங் கரிதாநின் றிருவுள்ளக் குறிப்பைத் [றேன்
துணிந்தறியே னென்னினுமோர் துணிவினுவக் கின்
பொன்னுதற்குத் திலகமெனுஞ் சிவகாம வல்லிப்
பூவையொரு புறங்களிப்பப் பொதுநடஞ்செய்பொருளே

ஒல்லும்வகை யறியாதே யுன்னருளோ டுடி
யூறுபுகன் றேன்றுயர மாறும்வகை யுணரேன்
புல்லியனேன் புகன்றபிழை பொறுத்தருளல் வேண்டும்
பூதியணிந் தொளிர்கின்ற பொன்மேனிப் பெருமான்
சொல்லியலும் பொருளியலுங் கடந்தபர நாதத்
துரியவெளிப் பொருளான பெரியநிலைப் பதியே
மெல்லியனற் சிவகாம வல்லிகண்டு மகிழ
விரியுமறை யேத்தநடம் புரியுமரு ளிறையே. (17)

## 7. ஆளுடையபிள்ளையார் அருண்மாலை

சீரார் சண்பைக் கவுணியர்தந் தெய்வமரபிற் றிகழ்விளக்கே
தெவிட்டா துளத்திற் றித்திக்குந் தேனேயழியாச்செல்வமே
காரார்மிடற்றுப்பவளமலைக்கண்ணின் முளைத்த கற்பகமே[யே
கரும்பே கனியே யென்னிரண்டு கண்ணே கண்ணிற்கருமணி
யேரார்பருவ மூன்றிலுமை யினிய முலைப்பா லெடுத்தூட்டு
மின்பக்குதலை மொழிக்குருந்தே யென்னுருயிருக் கொரு
[துணையே
பேராார்ஞான சம்பந்தப் பெருமானேநின் றிருப்புகழைப்
பேசுகின்றோர் மேன்மேலும் பெருஞ்செல் வத்திற் பிறங்கு
[வரே. (18)

## 8. ஆளுடையவரசு அருண்மாலை

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளைந்தவருட் பயனே யுண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாத மன்றி
விண்ணுளே யடைகின்ற போக மென்றும்
விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டாய்
ஒண்ணுளே யொன்பதுவாய் வைத்தா னென்றன்
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே. (19)

அருள்வழங்குந் திலகவதி யம்மை யார்பின்
அவதரித்த மணியேசொல் லரசே ஞானத்
தெருள்வழங்குஞ் சிவநெறியை விளக்க வந்த
செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறிய னேனை
இருள்வழங்கு முலகியனின் றெடுத்து ஞான
இன்னருடந் தாண்டருள்வா யின்றே லந்தோ
மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வே னுய்யும்
வகையறியே னின்னருட்கு மரபன் றீதே. (20)

## 9. ஆளுடைய நம்பிகள் அருண்மாலை

ஏழிசையா யிசைப்பயனா யின்னமுதா யென்னுடைய
தோழனுமா யென்றுமுன்னீ சொன்னபெருஞ் சொற்பொருளை
யாழநினைத் திடிலடியே னருங்கரணங் கரைந்துகரைந்
தூழியிலின் புறுவதுகா ணுயர்கருணைப் பெருந்தகையே. (21)

தேன்படிக்கு மமுதாமுன் றிருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை நானறியே னாவொன்றோ
வூன்படிக்கு முளம்படிக்கு முயிர்படிக்கு முயிர்க்குயிருந்
தான்படிக்கு மனுபவங்கா ணனிக்கருணைப் பெருந்தகையே.

## 10. ஆளுடையவடிகள் அருண்மாலை

தேசகத்தி லினிக்கின்ற தெள்ளமுதே மாணிக்க
வாசகனே யாநந்த வடிவான மாதவனே
மாசகன்ற நீதிருவாய் மலர்ந்ததமிழ் மாமறையின்
ஆசகன்ற வனுபவநா னனுபவிக்க வருளுதியே. (23)

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கா னற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே. (24)

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில் [வித்துத்
ஒருமொழியே யென்னையுமென் னுடையனையு மொன்று
தருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே. (25)

பெண்சுமந்த பாகப் பெருமானொரு மாமேல்
எண்சுமந்த சேவகன்போ லெய்தியதும் வைகைநதி
மண்சுமந்து நின்றதுமோர் மாறன் பிரம்படியாற்
புண்சுமந்து கொண்டதுநின் பொருட்டன்றோ புண்ணியனே.

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு நானடைதல் வியப்பன்றே. (27)

# ஐந்தாவது திருமுறை

## 1. சித்திவிநாயகர் பதிகம்

உலகெலாந் தழைப்ப வருண்மத வருவி
ஒழுகுமா முகமுமைங் கரமும்
இலகுசெம் மேனிக் காட்சியு மிரண்டோ
டிரண்டென வோங்குதிண் டோளும்
திலகவா ணுதலார் சித்திபுத் திகளைச்
சேர்த்தணைத் திடுமிரு மருங்கும்
விலகுறு தெளியேன் விழைந்தனன் சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (1)

பெரும்பொருட் கிடனும் பிரணவ வடிவிற்
பிறங்கிய வொருதனிப் பேறே
அரும்பொரு ளாகி மறைமுடிக் கண்ணே
அமர்ந்தபே ரானந்த நிறைவே
தரும்பர போக சித்தியுஞ் சுத்த
தருமமு முத்தியுஞ் சார்ந்து
விரும்பினோர்க் களிக்கும் வள்ளலே சித்தி
விநாயக விக்கினேச் சுரனே. (2)

## 2. வல்லபைகணேசர் பிரசாத மாலை

நளினமா மலர்வாழ் நான்முகத் தொருவ
னண்ணிநின் றுணையடி வழுத்திக்
களிநல னுடனிவ் வுலகெலாம் படைக்கக்
கடைக்கணித் ததையுள மறவேன்
அளிநல னுறுபே ரானந்தக் கடலே
யருமருந் தேயரு ளமுதே
வளிநிறை யுலகுக் கொருபெருந் துணையே
வல்லபைக் கணேசமா மணியே. (3)

பெருவய லாறு முகனக மலர்ந்துன்
பெருமைகள் பேசிடத் தினமும்
திருவளர் மேன்மை திறமுறச் சூழும்
திருவருட் பெருமையை மறவேன்

மருவளர் தெய்வக் கற்பக மலரே
மனமொழி கடந்தவான் பொருளே
வருமலை வல்லிக் கொழுமுதற் பேறே
வல்லபைக் கணேசமா மணியே. (4)

## 3. கணேசர் திருவருள் மாலை.

கள்ள நெஞ்சக னாயினு மையநான்
கள்ளமின்றிக் கழறுகின் றேனென
துள்ள நின்றிரு வுள்ள மறியுமே
யோது கின்றதென் போது கழித்திடேல்
வள்ள மாமலர்ப் பாதப் பெரும்புகழ்
வாழ்த்தி நாத்தழும் பேற வழங்குவாய்
வெள்ள வேணிப் பெருந்தகை யேயருள்
விளங்குஞ் சித்தி விநாயக வள்ளலே. (5)

## 4. தனித்திரு மாலை

திங்களங் கொழுந்து வேய்ந்த செஞ்சடைக்
கொழுந்தே போற்றி
மங்கைவல் லபைக்கு வாய்த்த மகிணநின்
மலர்த்தாள் போற்றி
ஐங்கர நால்வாய் முக்கண் ணருட்சிவக்
களிறே போற்றி
கங்கையாய் மகிழுஞ் செல்வக் கணேசநின்
கழல்கள் போற்றி. (6)

கலிவண்ணத்துறை

அடியா ருள்ளந் தித்தித் தூறு மமுதென்கோ
கடியார் கொன்றைச் செஞ்சடை யானைக் கன்றென்கோ
பொடியார் மேனிப் புண்ணியர் புகழும் பொருளென்கோ
அடிகேள் சித்தி விநாயக வென்னென் றறைகேனே. (7)

## 5. திருத்தணிகைப் பதிகம்

(பிரார்த்தனை மாலை)

சீர்கொண்ட தெய்வ வதனங்க ளாறுந் திகழ்கடப்பத்
தார்கொண்ட பன்னிரு தோள்களுந் தாமரைத் தாள்களுங்
கூர்கொண்ட வேலு மயிலுநற் கோழிக் கொடியுமருட்]மோர்
கார்கொண்ட வன்மைத் தணிகாசலமுமென் கண்ணுற்றதே.

அன்னே யெனைத்தந்த அப்பாவென் றேங்கி அலறுகின்றேன்
என்னே யிவ்வேழைக் கிரங்காது நீட்டித் திருத்தலெந்தாய்
பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த
மன்னே கலப மயின்மே லழகிய மாணிக்கமே. (9)

(எண்ணப்பத்து)

களித்து நின்றிருக் கழலிணை யேழையேன்
காண்பனோ வலதன்மை
யொளித்து வன்றுய ருழப்பனோ யின்னதென்
றுணர்ந்திலே னருட்போதந்
தெளித்து நின்றிடுந் தேசிக வடிவமே
தேவர்கள் பணிதேவே
தளிர்த்த தண்பொழிற் றணிகையில் வளர்சிவ
தாருவே மயிலோனே. (10)

யாரை யுந்துணை கொண்டிலே னின்னடி
யிணைதுணை யல்லானின்
பேரை யுன்னிவாழ்ந் திடும்படி செய்வையோ
பேதுறச் செய்வாயோ
பாரை யும்முயிர்ப் பரப்பையும் படைத்தருள்
பகவனே யுலகேத்துஞ்
சீரை யுற்றிடுந் தணிகையங் கடவுணின்
றிருவுள மறியேனே. (11)

(செழுஞ்சுடர் மாலை)

மின்னே ருலக நடையதனுன் மேவுந்
துயருக் காளாகிக்
கன்னேர் மனத்தே னிணைமறந்தேன் கண்டேன்
கண்டாய் கற்பகமே
பொன்னே கடவுண் மாமணியே போதப்
பொருளே பூரணமே
தென்னேர் தணிகை மலையரசே தேவே
ஞானச் செழுஞ்சுடரே. (12)

(குறையிரந்த பத்து)

சீர்பூத்த வருட்கடலே கரும்பே தேனே
செம்பாகே யெனதுகுல தெய்வ மேநற்
கூர்பூத்த வேன்மலர்க்கை யரசே சாந்த
குணக்குன்றே தணிகைமலைக் கோவே ஞானப்
பேர்பூத்த நின்புகழைக் கருதி யேழை
பிழைக்கவருள் செய்வாயோ பிழையை நோக்கிப்
பார்பூத்த பவத்திலுற விடிலென் செய்கேன்
பாவியே னந்தோவென் பயந்தீ ரேனே. (13)

(ஜீவசாக்ஷி மாலை)

பண்ணேறு மொழியடியர் பரவி வாழ்த்தும்
பாதமல ரழகினையிப் பாவி பார்க்கிற்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனுங்
காட்டென்றாற் காட்டுகிலாய் கருணை யீதோ
விண்ணேறு மரிமுதலோர்க் கரிய ஞான
விளக்கேயென் கண்ணேமெய் வீட்டின் வித்தே
தண்ணேறு பொழிற்றணிகை மணியே ஜீவ
சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே. (14)

கல்லாத வஞ்சகர்பாற் சென்று வீணாள்
கழித்துநிற்குங் கடையனிவன் கருணை யில்லாய்
பொல்லாத பாவியென வெண்ணி யென்னைப்
புறம்போக்கி லையாநான் புரிவதென்னே
யெல்லாஞ்செய் வல்லவனே தேவர் யார்க்கு
மிறைவனே மயிலேறு மெம்பி ரானே
சல்லாப வளத்தணிகை மணியே ஜீவ
சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே, (15)

(கருணை மாலை)

நெஞ்ச மேயிஃ தென்னை நின்மதி
வஞ்ச வாழ்வினின் மயங்கு கின்றனை
தஞ்ச மென்றருட் டணிகை சார்தியேற்
கஞ்ச மாமலர்க் கழல்கி டைக்குமே. (16)

சாறு சேர்திருத் தணிகை யெந்தைநின்
ஆறு மாமுகத் தழகை மொண்டுகொண்
டேறில் கண்களா லுண்ண வெண்ணினேன்
ஈறி லென்னுடை யெண்ண முற்றுமோ. (17)

மேலை வானவர் வேண்டு நின்றிருக்
காலை யென்சிரங் களிக்க வைப்பையோ
சாலை யோங்கிய தணிகை வெற்பனே
வேலை யேந்துகை விமல நாதனே. (18)

வண்ண னேயருள் வழங்குதும் பன்னிரு
கண்ண னேயயிற் கரங்கொ ளையனே
தண்ண னேர்திருத் தணிகை வேலனே
திண்ண மீதருள் செய்யுங் காலமே. (19)

(மருண் மாலை விண்ணப்பம்)

சொல்லும் பொருளு மாய்நிறைந்த
சுகமே யன்பர் துதிதுணையே
புல்லும் புகழ்சேர் நற்றணிகைப்
பொருப்பின் மருந்தே பூரணமே
யல்லும் பகலு நின்னுமம்
அந்தோ நினைந்துன் னுளாகேன்
கல்லும் பொருவா வன்மனத்தாற்
கலங்கா நின்றேன் கடையேனே. (20)

மணியே யடியேன் கண்மணியே மருந்தே
யன்பர் மகிழ்ந்தணியு
மணியே தணிகை யரசேதெள் ளமுதே
யென்ற னுருயிரே
பிணியேய் துயரால் வருந்திமனப் பேயா
வலைந்து பிறழ்கின்றேன்
றணியென் றுக நின்னருளைத் தருத
லிலையேற் றுழ்வேனே. (21)

குன்றே மகிழ்ந்த குணக்குன்றே கோவே
தணிகைக் குருபரனே
நன்றே தெய்வ நாயகமே நவிலற்
கரிய நல்லுறவே
யென்றே வருவா யருடருவா யென்றே
புலம்பி யேங்குற்றே
னின்றே காணப் பெறிலெந்தா யிறவேன்
பிறவே னிருப்பேனே. (22)

எளியே னினது திருவருளுக் கெதிர்நோக்
குற்றே யிரங்குகின்ற
களியே னெனைநீ கைவிட்டாற் கருணைக்
கியல்போ கற்பகமே
யளியே தணிகை யருட்சுடரே யடிய
ருறவே யருண்ஞானத்
துளியே யமையு மெனக்கெந்தாய்
வாவென் றொருசொற் சொல்லாயோ. (23)

(வேட்கை விண்ணப்பம்)

மன்னே யென்ற னுயிர்க்குயிரே மணியே
தணிகை மலைமருந்தே
யன்னே யென்னை யாட்கொண்ட வரசே
தணிகை யையாவே

பொன்னே ஞானப் பொங்கொளியே புனித
வருளே பூரணமே
யென்னே யெளியேன் றுயருழத்த லெண்ணி
யிரங்கா திருப்பதுவே. (24)

வருவா யென்று நாடோறும் வழிபார்த்
திரங்கி மனந்தளர்ந்தேன்
கருவாய் பவனென் றெனைத்தள்ளக் கருது
வாயோ வன்றியரு
ளுருவாய் வந்து தருவாயோ தணிகா
சலத்து ளுற்றமர்ந்த
வொருவா வுன்றன் றிருவுளத்தை யுணரே
னென்செய் துய்கேனே. (25)

செஞ்சொற் சுவையே மெஞ்ஞானச் செல்வப்
பெருக்கே தெள்ளமுதே
விஞ்சைப் புலவர் புகழ்த்தணிகை விளக்கே
துளக்கில் வேலோனே
வெஞ்சொற் புகலும் வஞ்சகர்பான் மேவி
நின்றாண் மலர்மறந்தே
பஞ்சிற் றமியேன் படும்பாட்டைப் பார்த்து
மருட்கண் பார்த்திலையே. (26)

பார்க்கின் றிலையே பன்னிருகண் படைத்து
மெளியேன் பாடனைத்துந்
தீர்க்கின் றிலையே யென்னேயான் செய்வேன்
சிறியேன் சீமானே
போர்க்குன் றெருடுசூர் புயக்குன்றும் பொடிசெம்
வேற்கைப் புண்ணியனே
சீர்க்குன் றெனுநல் வளத்தணிகைத் தேவே
மயிலூர் சேவகனே (27)

எளியே னினது சேவடியா மின்ப நறவை
யெண்ணி யெண்ணி
யளியே னெஞ்சஞ் சற்றேனும் மன்பொன்
றில்லே னதுசிறிது
மொளியே னெந்தா யென்னுள்ளத் தொளித்தே
யெவையு முணர்கின்றாய்
வலியே முதலாய் நின்றருளு மணியே
தணிகை வாழ்மன்னே. (28)

## 6. ஆறெழுத்து உண்மை

பெருமை நிதியே மால்விடைகொள் பெம்மான்
வருந்திப் பெறும்பேறே
யருமை மணியே தணிகைமலை யமுதே
யுன்ற னாறெழுத்தை
யொருமை மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த
திருவெண் ணீறிட்டா
லிருமை வளனு மெய்துமிட ரென்ப
தொன்று மெய்தாதே. (29)

வாரா விருந்த வடியவர்த மனத்தி
லொளிரு மாமணியே
யாரா வமுதே தணிகைமலை யரசே
யுன்ற னாறெழுத்தை
யோரா மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த
திருவெண் ணீறிட்டா
லேரார் செல்வப் பெருக்கிகவா விடும்பை
யொன்று மிகந்திடுமே. (30)

சேரு முக்கட் கனிகனிந்த தேனே
ஞானச் செழுமணியே
யாரும் புகழுந் தணிகையெம தன்பே
யுன்ற னாறெழுத்தை
யோரு மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த
திருவெண் ணீறிட்டாற்
பாரும் விசும்பும் பதஞ்சாரும் பழங்க
ளொன்றும் சாராதே. (31)

பதியே யெங்கு நிறைந்தருளும் பரம
சுகமே பரஞ்சுடரே
கதியே யளிக்குந் தணிகையமர் கடம்பா
வுன்ற னாறெழுத்தை
யுதியோ மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த
திருவெண் ணீறிட்டாற்
றுதியோர் நினது பதந்தோன்றும் துன்ப
மொன்றுந் தோன்றாதே. (32)

தோன்று ஞானச் சின்மயமே தூய
சுகமே சுயஞ்சுடரே
யான்றோர் புகழுந் தணிகைமலை யரசே
வுன்ற னாறெழுத்தை

மூன்று மனத்தி னுச்சரித்திங் குயர்ந்த
திருவெண் ணீறிட்டா
லீன்று ணிகரு மருளடையு மிடுக்க
ணென்று மடையாதே. (33)

(போக்கு உரையீடு)

மண்ணி னண்ணிய வஞ்சகர் பாற்கொடு
வயிற்றினு லலைப்பட்டேன்
கண்ணி னண்ணருங் காட்சியே நின்றிருக்
கடைக்கணேக் கருணேக்கி
யெண்ணி யெண்ணிநெஞ் சழிந்துகண்
ணீர்கொளு மேழையேன் றனக்கின்னும்
புண்ணி னண்ணிய வேலெனத் துயருறிற்
புலையனென் செய்கேனே. (34)

(பணித்திறம் வேட்டல்)

நண்ணேனே மகிழ்வினெடுந் திருத்தணிகை
மலையதனை நண்ணி யென்றன்
கண்ணேநீ யமர்ந்தவெழில் கண்குளிரக்
காணேனே கண்டு வாரி
யுண்ணேனே வானந்தக் கண்ணீர்கொண்
டாடியுனக் குகப்பாத் தொண்டு
பண்ணேனே நின்புகழைப் பாடேனே
வாயாரப் பாவி யேனே. (35)

பாவியேன் படுந்துயருக் கிரங்கியருட்
டணிகையிலென் பால்வா வென்று
கூவிநீ யாட்கொளவோர் கனவேனுங்
காணேனே குணப்பொற் குன்றே
ஆவியே அறிவேயென் னன்பேயென்
அரசேநின் னடியைச் சற்றும்
சேவியே னெனினுமெனைக் கைவிடே
லன்பர்பழி செப்பு வாரே. (36)

வாரேனே திருத்தணிகை வழிநோக்கி
வந்தென்கண் மணியே நின்று
பாரேனே நின்னழகைப் பார்த்துலக
வாழ்க்கைதனிற் படுமிச் சோபந்
தீரேனே நின்னடியைச் சேவித்தா
னந்தவெள்ளம் திளைத்தா டேனே
சாரேனே நின்னடியர் சமுகமதைச்
சார்ந்தவர்தா டலைக்கொள் ளேனே. (37)

தேடேனோ யென்னுத னெங்குற்றா
னெனவோடித் தேடிச் சென்றே
நாடேனோ தணிகைதனி நாயகனே
நின்னழகை நாடி நாடிக்
கூடேனோ வடியருடன் கோவேயெங்
குகனேயெங் குருவே யென்று
பாடேனோ வானந்தப் பரவசமுற்
றுன்கமலப் பதநண் ணேனோ. (38)

(நெஞ்சொடு புலத்தல்)

காயோ மெனநின் றவர்க்கினிய
கனியாந் தணிகைக் கற்பகத்தைப்
பேயோர் கணமும் போற்றுகிலாய்
புன்மை புரிந்தாய் புலங்கெட்டாய்
பேயோ வெங்குந் திரிந்தோடிப்
பேணு வென்பைப் பேணுகின்ற
நாயோ மனமே நீயுனைநான்
நம்பி வாளா நலிந்தேனே. (39)

தன்னு லுலகை நடத்துமருட்
சாமி தணிகை சாராமற்
பொன்னுன் மண்ணுற் பூவையராற்
புலம்பி வருந்தும் புன்னெஞ்சே
யுன்னு லென்ற னுயர்விழந்தே
னுற்று ரிழந்தே னுன்செயலைச்
சொன்னு னகைப்ப ரெனைவிட்டுந்
தொலையா யிங்கு நிலையாயே. (40)

கொள்ளும் பொழில்சூழ் தணிகைமலைக்
கோவை நினையா தெனைநரகிற்
றள்ளும் படிக்கோ தலைப்பட்டாய்
சகத்தின் மடவார் தம்மயலாங்
கள்ளுண் டந்தோ வெறிகொண்டாய்
கலைத்தா யென்னைக் கடந்தோர்க
ளெள்ளும் படிவந் தலைக்கின்று
யெனக்கென் றெங்கே யிருந்தாயோ. (41)

(புன்மை நினைந்திரங்கல்)

மஞ்சட் பூச்சின் மினுக்கி லிளைஞர்கண்
மயங்க வேசெயும் வாள்விழி மாதர்பாற்
கெஞ்சிக் கொஞ்சி நிறையழிந் துன்னருட்
கிச்சை நீத்துக் கிடந்தன னாயினேன்

மஞ்சுற் றேங்கும் பொழிற்றணி காசல
வள்ள லென்வினை மாற்றுத னீதியே
தஞ்சத் தால்வந் தடைந்திடு மன்பர்கள்
தம்மைக் காக்குந் தனியருட் குன்றமே. (42)

வஞ்ச மேகுடி கொண்டு விளங்கிய
மங்கை யர்க்கு மயலுழந் தேயவர்
நஞ்ச மேவு நயனத்திற் சிக்கிய
நாயி னேனுனை நாடுவ தென்றுகாண்
கஞ்ச மேவு மயன்புகழ் சோதியே
கடப்ப மாமலர்க் கந்தசு கந்தனே
தஞ்ச மேயென வந்தவர் தம்மையாள்
தணிகை மாமலைச் சற்குரு நாதனே. (43)

திருவடிசூட விழைதல்

தேனு ரலங்கற் குழன்மடவார்
திறத்தின் மயங்காத் திறலடைதற்
கானார் கொடியெம் பெருமான்ற
னருட்கண் மணியே யற்புதமே
கானார் பொழில்சூழ் திருத்தணிகைக்
கரும்பே கருணைப் பெருங்கடலே
வானு ரமுதே நின்றிருத்தாள்
அடியேன் முடிமேல் வைப்பாயே. (44)

கல்லாக் கொடிய மடவார்தங்
காம வலைக்கண் வீழாமே
நல்லார்க் கெல்லா நல்லவநின்
னுமந் துதிக்கும் நலம்பெறவே
சொல்லாற் புனைந்த மாலையொடுந்
தொழுது தணிகை தனைத்துதிக்க
வல்லார்க் கருளு நின்றிருத்தாள்
அடியேன் முடிமேல் வைப்பாயே. (45)

ஆற்று விளக்கம்

தணிகை மலையைச் சாரேனோ
சாமி யழகைப் பாரேனோ
பிணிகை யறையைப் பேரேனோ
பேரா வன்பு கூரேனோ
அணிசெ யருணீ ராரேனோ
ஆறுத் தாகந் தீரேனோ
பணிசெய் தொழும்பிற் சேரேனோ
பார்மீ திரங்கு நீரேனே. (46)

வந்தென் னெதிரி னில்லாரோ
மகிழ வொருசொல் சொல்லாரோ
முந்தும் மதனை வெல்லாரோ
மோகந் தீரப் புல்லாரோ
கந்த னெனும்பே ரல்லாரோ
கருணை நெஞ்சங் கல்லாரோ
சந்தத் தணிகை யில்லாரோ
சகத்தி லெல்லாம் வல்லாரே. (47)

காமப் பயலைத் தடுப்பாரோ
கடப்ப மலர்த்தார் கொடுப்பாரோ
வேமத் தனத்தைக் கடுப்பாரோ
வெண்மே லன்பை விடுப்பாரோ
மாமற் றொருவீ டடுப்பாரோ
மனதிற் கோபந் தொடுப்பாரோ
தாமத் தாழ்வைக் கெடுப்பாரோ
தணிகை தனில்வே லெடுப்பாரே. (48)

தணிகா சலம்போய்த் தழையேனோ
சாமி திருத்தாள் விழையேனோ
பணிகா தலித்துப் பிழையேனோ
பாடி மனது குழையேனோ
திணிகா ணுலகை யழையேனோ
சேர்ந்தவ் வீட்டு ணுழையேனோ
பிணிகா ணுலகிற் பிறந்துழன்றே
பேதுற் றலையும் பழையேனே. (49)

மன்னுங் குவளை யீயாரோ
மதவேண் மதத்தைக் காயாரோ
வின்னுங் கோப மோயாரோ
வென்றாய் தனக்குத் தாயாரோ
துன்னு மிரக்கந் தோயாரோ
துகளேன் றுயரை யாயாரோ
பன்னும் வளங்கள் செறிந்தோங்கும்
பணிகொள் தணிகைத் தூயாரே. (50)

ஏழைமையின் இரங்கல்

தேனே யுளங்கொ டெளிவே யகண்ட
சிதமேவி நின்ற சிவமே
கோனே கனிந்த சிவபோத ஞான
குருவே விளங்கு குகனே

தானே தனக்கு நிகராய் விளங்கு
தணிகா சலத்தெம் மரசே
தானே மையிங்கு மனநொந்து நொந்து
நலிகின்ற செய்கை நலமோ. (51)

மணியே கலாப மலையே மலர்ந்த
மதியே நினைச்சொன் மலரால்
அணியே னலன்பு மமையேன் மனத்தில்
அடியா ரடிக்கண் மகிழ்வாய்ப்
பணியே னினைந்து பதையே னிருந்து
பருகே னுவந்த படியே
யெணியே நினைக்கி லவமா மிவேழை
யெதுபற்றி யுய்வ தரசே. (52)

பணித்திறஞ் சாலாப் பாடிழிவு

நன்றறியேன் றீங்கனைத்தும் பறியேன் பொல்லா
நங்கையர்தங் கண்மாய நவையைச் சற்றும்
வென்றறியேன் கொன்றறிவார் தம்மைக் கூடும்
வேடனேன் றிருத்தணிகை வெற்பி னின்பாற்
சென்றறியே னிலையென்ப தறியே னொன்றுஞ்
செய்தறியேன் சிவதருமஞ் செய்வோர் நல்லோ
ரென்றறியேன் வெறியேனிங் கந்தோ வந்தோ
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா யிருக்கின் றேனே. (53)

அல்லார்க்குங் குழலார்மே லாசை வைப்பே
னையாநின் றிருத்தாண்மே லன்பு வையேன்
செல்லார்க்கும் பொழிற்றணிகை யெங்கே யென்று
தேடிடே னின்புகழைச் சிந்தை செய்யேன்
கல்லார்க்குங் கடுமனத்தேன் வன்க ணேன்புன்
கண்ணினே னுதவாத கையேன் பொய்யேன்
எல்லார்க்கும் பொல்லாத பாவி யேன்யான்
ஏன்பிறந்தேன் புவிச்சுமையா யிருக்கின் றேனே. (54)

குறைநேர்ந்த பத்து

முன்னறியேன் பின்னறியேன் மாதர் பாலென்
மூடமன மிழுத்தோடப் பின்சென் றெய்த்தேன்
புன்னெறியேன் பொய்யரொடும் பயின்றே னின்றன்
புனிதவருட் கடலாடேன் புளக மூடேன்
பொன்னரையன் றெழுஞ்சடிலப் புனித னீன்ற
புண்ணியமே தணிகைவளர் போத வாழ்வே
யென்னரசே யென்னமுதே நின்பா லன்றி
எவர்க்கெடுத்தென் குறைதன்னை யியம்பு கேனே. (55)

முறையிட்ட பத்து

*பொன்னைப் பொருளா நினைப்போர்பாற்*
*போந்து மிடியால் இரந்தலுத்தேன்*
*நின்னைப் பொருளென் றுணராத*
*நீச னினையோர் நிலைகாணேன்*
*மின்னைப் பொருவுஞ் சடைப்பவள*
*வெற்பில் விளைந்த வியன்கரும்பே*
*முன்னைப் பொருளே தணிகையனே*
*முறையோ முறையோ முறையேயோ.* (56)

*மக்கட் பிறவி யெடுத்துமனை வழுத்தாக்*
*கொடிய மரமனை யேன்*
*துக்கக் கடலில் வீழ்ந்து மனஞ்*
*சோர்கின் றேனோர் துணைகாணேன்*
*செக்கர்ப் பொருவு வடிவேற்கைத் தேவே*
*தெவிட்டாத் தெள்ள முதே*
*முக்கட் கரும்பின் முழுமுத்தே*
*முறையோ முறையோ முறையேயோ.* (57)

## 7. ஆற்றுப் புலம்பல்

அண்ணாவோ வென்னருமை யையாவோ பன்னிரண்டு
கண்ணாவோ வேல்பிடித்த கையாவோ செம்பவள
வண்ணாவோ நற்றணிகை மன்னாவோ வென்றென்றே
யெண்ணாவோ துன்பத் திருங்கடற்குண் மன்னினனே. (58)

பொன்பிணிக்கு நெஞ்சப் புலையேனை யிவ்வுலகில்
வன்பிணிக்கோ பெற்று வளர்த்தா யறியேனே
யென்பிணைத்தார் வள்ளற் கினிமை பெறுமணியே
யன்பிணைத்தோர் போற்று மருட்டணிகை மன்னவனே. (59)

வன்னேயும் வஞ்சகர்தம் வன்சார்பும் வன்றுயரு
மென்னேயுங் கொண்டதனை யெண்ணி யிடிவேனே
வன்னே முறைபோகி யையா முறையேயோ
மன்னே முறைதணிகை வாழ்வே முறையேயோ. (60)

## 8. புண்ணியநீற்று மான்மியம்

மாலேந்திய குழலார்தரு மயல்போ மிடரயல்போங்
கோலேந்திய வரசாட்சியுங் கூடும் புகழ்நீடும்
மேலேந்திய வானாடர்கண் மெலியாவித மொருசெவ்
வேலேந்திய முருகாவென வெண்ணீ றணிந்திடிலே. (61)

## 9. உறுதி யுணர்த்தல்

மஞ்சேர் பிணிமிடி யாதியை நோக்கி வருந்துறுமென்
னெஞ்சே தணிகைய னறெழுத் துண்டுவெண் ணீறுண்டுநீ
யெஞ்சே லிரவும் பகலுந் துதிசெய் திடுதிகண்டாய்
யஞ்சே லிதுசத் தியமாமென் சொல்லையறிந்துகொண்டே (62)

## 10. கையடைமுட்டற் கிரங்கல்

கண்ணப்ப னென்னுந் திருப்பெய ராலுல கம்புகழுந்
திண்ணப்ப னேத்துஞ் சிவனார் மகனுக்குத் தெண்டனிட்ட
விண்ணப்ப மொன்றிந்த மேதினி மாயையில் வீழ்வதறுத்
தெண்ணப் படுநின் திருவரு ளீகவிவ் வேழையற்கே. (63)

## 11. நாள் அவம்படாமை வேண்டல்

வாழுமிவ் வுலக வாழ்க்கையை மிகவும்
வலித்திடு மங்கையர் தம்பாற்
றாழுமென் கொடிய மனத்தினை மீட்டுன்
றாண்மலர்க் காக்குநா ளுளதோ
சூழுநெஞ் சிருளைப் போழுமெய் யொளியே
தோற்றமீ றற்றசிற் சுகமே
ஊழுமுற் பவமோ ரேழும்விட் டகல
உதவுசீ ரருட்பெருங் குன்றே. (64)

## 12. திருவருள் விலாசப்பத்து

ஆறுமுகப் பெருங்கருணைக் கடலே தெய்வ
யானைமகிழ் மணிக்குன்றே யரசே முக்கட்
பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே பிரம ஞானம்
வீறுமுகப் பெருங்குணத்தோ ரிதயத் தோங்கும்
விளக்கமே யானந்த வெள்ள மேமுன்
றேறுமுகப் பெரியவருட் குருவா யென்னைச்
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே. (65)

ஞாலமெலாம் படைத்தவனைப் படைத்த முக்கண்
நாயகனே வடிவேற்கை நாத னேநான்
கோலமெலாங் கொடியேனற் குணமொன் றில்லேன்
குற்றமே விழைந்தேனிக் கோது ளோனைச்
சாலமெலாஞ் செயுமடவார் மயக்கி னீக்கிச்
சன்மார்க்க மடையவரு டருவாய் ஞானச்
சீலமெலா மடையவருட் குருவாய் வந்து
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே. (66)

பன்னிருகண் மலர்மலர்ந்த கடலே ஞானப்
பரஞ்சுடரே யாறுமுகம் படைத்த கோவே
யென்னிருகண் மணியேயெந் தாயே யென்னை
யீன்றானே யென்னரசே யென்றன் வாழ்வே
மின்னிருவர் புடைவிளங்க மயின்மீ தேறி
விரும்புமடி யார்காண மேவுந் தேவே
சென்னியினன் னடிமலர்வைத் தென்னை முன்னே
சிறுகாலை யாட்கொண்ட தேவ தேவே. (67)

## 13. செல்வச்சீர்த்தி மாலை

அடியார்க் கெளிய ரெனுமுக்க ணையர் தமக்கு முலகீன்ற
வம்மை தனக்குந் திருவாய்முத் தளித்துக் களிக்கு மருமருந்தே
கடியார் கடப்ப மலர்மலர்ந்த கருணைப் பொருப்பே கற்பகமே
கண்ணுண் மணியே யன்பர்மனக் கமலம் விரிக்குங் கதிரொளியே.

படியார் வளிவான் றீமுதலைம் பகுதி யாய பரம்பொருளே
பகர்தற் கரிய மெய்ஞ்ஞானப் பாகே யசுரர் படைமுழுதும்
தடிவா யென்னச் சுரர்வேண்டத் தடிந்த வேற்கைத் தனிமுதலே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

பித்தப் பெருமான் சிவபெருமான் பெரிய பெருமான் றனக்கருமைப்
பிள்ளைப் பெருமா னெனப்புலவர் பேசிக் களிக்கும் பெருவாழ்வே
மத்தப் பெருமா னீக்குமொரு மருந்தே யெல்லாம் வல் [லோனே
வஞ்சச் சமண வல்லிருளை மாய்க்கு ஞான மணிச்சுடரே
யத்தக் கமலத் தயிற்படைகோ ளரசே மூவர்க் கருள்செய்தே
யாக்க லளித்த லழித்தலெனு மம்முத் தொழிலுந் தருவோனே
சத்த வுலக சராசரமுந் தாளிலொடுக்குந் தனிப்பொருளே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண் [முகனே (69)

## 14. இங்கிதப் பத்து

நதியும் மதியும் பொதியுஞ் சடையார் நவின்மாலும்
விதியுந் துதியைம் முகனார் மகனார் மிகுசீருந்
நிதியும் பதியுங் கதியுந் தருவார் நெடுவேலார்
வதியும் மயின்மேல் வருவார் மலரே வருமாறே. (70)

பொன்னை யிருத்தும் பொன்மல ரெகினப் புள்ளேநீ
அன்னை யிகழ்ந்தே யங்கலர் செய்வா னனுராகந்
தன்னை யளிக்குந் தண்டணி கேசர் தம்பாற்போ
யென்னை யிகழ்ந்தா ளென்செயல் கொண்டா ளென்பாயே.

## 15. போற்றித் திருவிருத்தம்

மூவடி வாகி நின்ற முழுமுதற் பரமே போற்றி
மாவடி யமர்ந்த முக்கண் மலைதரு மணியே போற்றி[போற்றி
சேவடி வழுத்துந் தொண்டர் சிறுமைதீர்த் தருள்வோய்
தூவடி வேல்கைக் கொண்ட சுந்தர வடிவே போற்றி. (72)

மறையெலாம் பரவ நின்ற மாணிக்க மலையே போற்றி
சிறையெலாந் தவிர்ந்து வானோர் திருவுறச் செய்தோய்
[போற்றி
குறையெலா மறுத்தே யின்பங் கொடுத்தவென் குருவே
[போற்றி
துறையெலாம் விளங்கு ஞானச் சோதியே போற்றி
[போற்றி. (73)

முத்தியின் முதல்வ போற்றி மூவிரு முகத்த போற்றி
சத்திவேற் கரத்த போற்றி சங்கரி புதல்வ போற்றி
சித்திதந் தருளுந் தேவர் சிகாமணி போற்றி போற்றி
பத்தியின் விளைந்த வின்பப் பரம்பர போற்றி போற்றி. (74)

முருகநின் பாதம் போற்றி முளரியங் கண்ணற் கன்பாம்
மருகநின் கழல்கள் போற்றி வானவர் முதல்வ போற்றி
பெருகருள் வாரி போற்றி பெருங்குணப் பரப்பே போற்றி
தருகநின் கருணை போற்றி சாமிநின் னடிகள் போற்றி. (75)

வேதமுங் கலைகள் யாவும் விளம்பிய புலவபோற்றி
நாதமுங் கடந்து நின்ற நாதனின் கருணை போற்றி
போதமும் பொருளு மாகும் புனிதநின் பாதம் போற்றி
ஆதர மாகி யென்னு ளமர்ந்தவென் னரசே போற்றி. (76)

## 16. தனித் திருத்தொடை

முருகா சரணஞ் சரணமென் றுன்பத முன்னியுள்ள
முருகாத நாயனை யேற்குநின் றண்ணரு ளுண்டுகொலோ
வருகாத பாற்கடன் மீதே யனந்த லமர்ந்தவன்றன்
மருகாமுக் கண்ணவன் மைந்தா வெழின்மயில்
[வாகனனே (77)

உலகம் பரவு மொருமுதல்வா தெய்வத்
திலகந் திகழிடத்துத் தேவே—யிலகுதிருப்
புள்ளிருக்கும் வேளூர்ப் புனிதா வடியேன்றன்
உள்ளிருக்குந் துன்பை யொழி. (78)

செக்கச் சிவந்தே திகழொருபாற் பச்சையதாய்
அக்கட் பரிதிபுரத் தார்ந்தோங்கு—முக்கட்
குழைக்கரும்பீன் முத்துக் குமாரமணி யேயென்
பிழைக்கிரங்கி யாளுதியோ பேசு. (79)

திருமாலைப் பணிகொண்டு திகிரிகொண்ட
தாருகனைச் செறித்து வாகைப்
பெருமாலை யணிதிணிதோட் பெருமானே
யொருமான்றன் பெண்மேற் காமர்
வருமாலை யுடையவர்போன் மணமாலை
புனைந்தமுழு மணியே முக்கட்
குருமாலைப் பொருளுரைத்த குமாரகுரு
வேபரம குருவே போற்றி. (80)

தோடேந்து கடப்பமலர்த் தொடையொடுசெங்
குவளைமலர்த் தொடையும் வேய்ந்து
பாடேந்து மறிஞர்தமிழ்ப் பாவொடுநா
யடியேன்சொற் பாவு மேற்றுப்
பீடேந்து மிருமடவார் பெட்பொடுமாங்
கவர்கடனப் பெரிய யானை
கோடேந்து மணிநெடுந்தோட் குமரகுரு
வேபரம குருவே போற்றி. (81)

ஆறு முகங்கொண்ட வையாவென் றுன்ப மனைத்துமின்னும்
ஏறு முகங்கொண்ட தல்லா திறங்கு முகமிலையால்
வீறு முகங்கொண்ட கைவேலின் வீரம் விளங்கவென்னைச்
சீறு முகங்கொண்ட வத்துன்ப மோடச் செலுத்துகவே. (82)

## 17. தெய்வமணி மாலை

ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்த முறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை
பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டுமத மானபேய்
பிடியா திருக்க வேண்டும்

மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டுமுனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டு நின்கருணை நிதிவேண்டு நோயற்ற
வாழ்வினில் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. (83)

சேவலங் கொடிகொண்ட நினையன்றி வேறுசிறு
தேவரைச் சிந்தை செய்வோர்
செங்கனியை விட்டுவேப் பங்கனியை யுண்ணுமொரு
சிறுகருங் காக்கை நிகர்வார்
நாவலங் காரமற வேறுபுகழ் பேசிநின்
னற்புகழ் வழுத் தாதபேர்
நாய்ப்பால் விரும்பியான் றூய்ப்பாலை நயவாத
நவையுடைப் பேய ராவார்
நீவலந்தர நினது குற்றேவல் புரியாது
நின்றுமற் றேவல் புரிவோர்
நெல்லுக் கிறைக்காது புல்லுக் கிறைக்கின்ற
நெடியவெறு வீண ராவார்
தாவலஞ் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. (84)

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு புலனு முண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையுமுண்டு
வாருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையுமுண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமுமுண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவு முண்டு
தேனுண்டு வண்டுறு களம்பணியு நின்பதத்
தியானமுண் டாயி லரசே
தாருண்ட சென்னையிற் கந்தகோட் டத்துவளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. (85)

## 18. கந்தர் சரணப்பத்து

அருளா ரமுதே சரணஞ் சரணம்
அழகா வமலா சரணஞ் சரணம்
பொருளா வெனையாள் புனிதா சரணம்
பொன்னே மணியே சரணஞ் சரணம்
மருள்வார்க் கரியாய் சரணஞ் சரணம்
மயில்வா கனனே சரணஞ் சரணம்
கருணா லயனே சரணஞ் சரணம்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம். (86)

முடியா முதலே சரணஞ் சரணம்
முருகா குமரா சரணஞ் சரணம்
வடிவே லரசே சரணஞ் சரணம்
மயிலூர் மணியே சரணஞ் சரணம்
அடியார்க் கெளியாய் சரணஞ் சரணம்
அரியாய் பெரியாய் சரணஞ் சரணம்
கடியார்க் கதியே சரணஞ் சரணம்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம். (87)

பூவே மணமே சரணஞ் சரணம்
பொருளே யருளே சரணஞ் சரணம்
கோவே குகனே சரணஞ் சரணம்
குருவே திருவே சரணஞ் சரணம்
தேவே தெளிவே சரணஞ் சரணம்
சிவசண் முகனே சரணஞ் சரணம்
காவே தருவே சரணஞ் சரணம்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம். (88)

## 19. சண்முகர் கொம்மி

குறவர் குடிசை நுழைந்தாண்டி—அந்தக்
கோமாட்டி யெச்சில் விழைந்தாண்டி
துறவர் வணங்கும் புகழாண்டி—அவன்
தோற்றத்தைப் பாடி யடியுங்கடி. (89)

மாமயி லேறி வருவாண்டி—அன்பர்
வாழ்த்த வரங்கள் தருவாண்டி
தீமை யிலாத புகழாண்டி—அவன்
கீர்த்தியைப் பாடி யடியுங்கடி. (90)

பன்னிரு தோள்க ளுடையாண்டி—கொடும்
பாவிகள் தம்மை யடையாண்டி
என்னிரு கண்க ளனையாண்டி—அவன்
ஏற்றத்தைப் பாடி யடியுங்கடி. (91)

வேங்கைமர மாகி நின்றாண்டி—வந்த
வேடர் தமையெலாம் வென்றாண்டி
தீங்குசெய் சூரனைக் கொன்றாண்டி—அந்த
தீரனைப் பாடி யடியுங்கடி. (92)

சீர்திகழ் தோகை மயின்மேலே—இளஞ்
செஞ்சுடர் தோன்றுந் திறம்போலே
கூர்வடி வேல்கொண்டு நம்பெருமாள்—வருங்
கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள். (93)

ஆறு முகங்களிற் புன்சிரிப்பும்—இரண்
டாறு புயந்திக ழற்புதமும்
வீறு பரஞ்சுடர் வண்ணமுமோர்—திரு
மேனியும் பாருங்கள் வெள்வளைகாள். (94)

ஆனந்த மான வமுதனடி—பர
மானந்த நாட்டுக் கரசனடி
தானந்த மில்லாச் சதுரனடி—சிவ
சண்முக நங்குரு சாமியடி. (95)

வேத முடிசொல்லு நாதனடி—சதுர்
வேத முடிதிகழ் பாதனடி
நாத வடிவுகொ ணீதனடி—பர
நாதங் கடந்த நலத்தனடி. (96)

தத்துவத் துள்ளே யடங்காண்டி—பர
தத்துவ மன்றித் துடங்காண்டி
சத்துவ ஞான வடிவாண்டி—சிவ
சண்முக நாதனைப் பாடுங்கடி. (97)

சச்சிதா னந்த வுருவாண்டி—பர
தற்பர போகந் தருவாண்டி
உச்சிதா ழன்பர்க் குறவாண்டி—அந்த
உத்தம தேவனைப் பாடுங்கடி. (98)

அற்புத மான வழகனடி—துதி
அன்பர்க் கருள்செய் குழகனடி
சிற்பர யோகத் திறத்தனடி—அந்தச்
சேவகன் கீர்த்தியைப் பாடுங்கடி. (99)

சைவந் தழைக்கத் தழைத்தாண்டி—ஞான
சம்பந்தப் பேர்கொண் டழைத்தாண்டி
பொய்வந்த வுள்ளத்திற் போகாண்டி—அந்தப்
புண்ணியன் பொன்னடி போற்றுங்கடி. (100)

வாசி நடத்தித் தருவாண்டி—ஒரு
வாசியி லிங்கே வருவாண்டி
ஆசில் கருணை யுருவாண்டி—அவன்
அற்புதத் தாண்மல ரேத்துங்கடி. (101)

இராப்பக லில்லா விடத்தாண்டி—அன்பர்
இன்ப வுளங்கொ ண்டிடத்தாண்டி
அராப்பளி யீந்த திடத்தாண்டி—அந்த
அண்ணலைப் பாடி யடியுங்கடி. (102)

ஒன்றிரண் டான வுளவாண்டி—அந்த
ஒன்றிரண் டாகா வளவாண்டி
மின்றிரண் டன்ன வடிவாண்டி—அந்த
மேலவன் கீர்த்தியைப் பாடுங்கடி. (103)

## 20. சண்முகர் காலைப்பாட்டு

வாரும்வாருந் தெய்வ வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும். (104)

சங்க மொலித்தது தாழ்கடல் விம்மிற்றுச்
சண்முக நாதரே வாரும்
உண்மை விநோதரே வாரும். (105)

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்றுப்
பொன்னுன வேலரே வாரும்
மின்னூர்முந் நூலரே வாரும். (106)

காக்கை கரைந்தது காலையு மாயிற்றுக்
கண்ணுதல் சேயரே வாரும்
ஒண்ணுதல் நேயரே வாரும். (107)

செங்கதிர் தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்
எங்குரு நாதரே வாரும். (108)

அருண னுதித்தன னன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறு முகத்தோரே வாரும்
மாறி லகத்தோரே வாரும். (109)

சூரியன் றோன்றினன் றொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும்
வீரசிங் காரரே வாரும். (110)

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலா யுதத்தோரே வாரும்
காலா யுதத்தோரே வாரும். (111)

சேவ லொலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும். (112)

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும். (113)

மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும். (114)

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரே வாரும்
வைப்பி னணியரே வாரும். (115)

# ஆறாவது திருமுறை

## 1. அருட்பெருஞ்சோதி அகவல்

அருட்சபை நடம்புரி அருட்பெருஞ் ஜோதி
தெருட்பெருஞ் சீர்சொலத் திகழ்வ சித்தியே.

(அருட்பெருஞ் ஜோதி)

அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி யருட்பெருஞ் ஜோதி
அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்
அருட்சிவ பதியாம் அருட்பெருஞ் ஜோதி
ஆகம முடிமே லாரண முடிமேல்
ஆகநின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி
இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய அருட்பெருஞ் ஜோதி
உரைமனங் கடந்த வொருபெரு வெளிமேல்
அரசுசெய் தோங்கும் அருட்பெருஞ் ஜோதி
ஊக்கமும் உணர்ச்சியு மொளிதரு மாக்கையும்
ஆக்கமு மருளிய அருட்பெருஞ் ஜோதி
எல்லையில் பிறப்பெனு மெழுகடல் கடத்தியென்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி
ஏறா நிலமிசை யேற்றியென் றனக்கே
ஆறாறு காட்டிய அருட்பெருஞ் ஜோதி
ஐயமுந் திரிபும் அறுத்தென துடம்பினுள்
ஐயமும் நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

(தனிப் பொருள்)

ஒன்ற திரண்டது வொன்றினி ரண்டது
வொன்றினி னொன்றது வொன்றெனு மொன்றே
ஒன்றல விரண்டல வொன்றி னிரண்டல
ஒன்றினு ளொன்றல வொன்றெனு மொன்றே
ஒன்றினி லொன்றுள வொன்றினி லொன்றில
ஒன்றுற வொன்றிய வொன்றெனு மொன்றே

(மெய்ப் பொருள்)

எழுநிலை மிசையே யின்புரு வாகி
வழுநிலை நீக்கி வயங்குமெய்ப் பொருளே
நவநிலை மிசையே நடுவுறு நடுவே
சிவமய மாகித் திகழ்ந்தமெய்ப் பொருளே

(பராபர இயல்)

பரத்தினிற் பரமே பரத்தின்மேற் பரமே
பரத்தினுட் பரமே பரம்பர பரமே
பரம்பெறும் பரமே பரந்தரும் பரமே
பரம்பதம் பரமே பரஞ்சிதம் பரமே
பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே
பரஞ்சுக பரமே பரஞ்சிவ பரமே
பரங்கொள்சிற் பரமே பரஞ்செய்தற் பரமே
தரங்கொள்பொற் பரமே தனிப்பெரும் பரமே
வரம்பரா பரமே வனம்பரா பரமே
பரம்பரா பரமே பதம்பரா பரமே

(பத வியல்)

சத்திய பதமே சத்துவ பதமே
நித்திய பதமே நிர்க்குண பதமே

(சிவ ரகசியம்)

பிரமமே பரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தருஞ் சிவமே
அவனோ டவளா யதுவா யலதாய்
நவமா நிலைமிசை நண்ணிய சிவமே
எம்பொரு ளாகி யெமக்கருள் புரியுஞ்
செம்பொரு ளாகிய சிவமே சிவமே
ஒருநிலை யிதுவே யுயர்நிலை யெனுமொரு
திருநிலை மேவிய சிவமே சிவமே
மெய்வைத் தழியா வெளி நடுவுறு
தெய்வப் பதியாஞ் சிவமே சிவமே
எங்கே கருணை இயற்கையின் உள்ளன
அங்கே விளங்கிய அருட்பெருஞ் சிவமே

(திருவருள் வல்லபம்)

அருணெறி யொன்றே தெருணெறி மற்றெலாம்
இருணெறி யெனவெனக் கியம்பிய சிவமே
அருணிலை யொன்றே அனைத்தும் பெறுநிலை
பொருணிலை காணெனப் புகன்றமெய்ச் சிவமே

(சிவபதி)

உள்ளகத் தமர்ந்தென துயிரிற் கலந்தருள்
வள்ளல் சிற்றம்பலம் வளர்சிவ பதியே
நிகரிலா வின்ப நிலைநடு வைத்தெனைத்
தகவொடு காக்குந் தனிச்சிவ பதியே
சுத்தசன் மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்திய னாக்கிய தனிச்சிவ பதியே

(அருள் குரு)

பரமுட னபரம் பகர்நிலை யிவையெனத்
திரமுற வருளிய திருவருட் குருவே
அறிபவை யெல்லாம் அறிவித் தென்னுள்ளே
பிறிவற விளங்கும் பெரியசற் குருவே

(உயிர்த்தாய்)

ஆன்றசன் மார்க்க மணிபெற வெனைத்தான்
ஈன்றமு தளித்த வினியநற் றாயே
என்னுட லென்னுயிர் என்னறி வெல்லாம்
தன்னினைவென் றாக்கிய தயையுடைத் தாயே

(உயிர்த் தந்தை)

துன்பெலாந் தவிர்த்துளே யன்பெலா நிரம்ப
இன்பெலா மளித்த வென்றனித் தந்தையே
நாயிற் கடையே னலம்பெறக் காட்டிய
தாயிற் பெரிதுந் தயவுடைத் தந்தையே
அறிவிலாப் பருவத் தறிவெனக் களித்தே
பிறிவிலா தமர்ந்த பேரருட் டந்தையே

(உயிர்த் துணை)

இகத்தினும் பரத்தினும் எனக்கிடர் சாராது
அகத்தினும் புறத்தினு மமர்ந்த மெய்த்துணையே

(உயிர் நட்பு)

அயர்வற வெனக்கே யருட்டுணை யாகியென்
உயிரினுஞ் சிறந்த வொருமையென் னட்பே
அன்பினிற் கலந்தென தறிவினிற் பயின்றே
இன்பினி லளைந்தவென் னின்னுயிர் நட்பே

(உயிர் உறவு)

மனக்குறை நீக்கி நல்வாழ் வளித்தென்று
மெனக்குற வாகிய வென்னுயி ருறவே

(இயற்கை உண்மை)

பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்
இதுவெனற் கரிதா மென்றனிச் சத்தே

(இயற்கை விளக்கம்)

என்றுமுள் ளதுவா யெங்குமோர் நிறைவா
யென்றும் விளங்கிடு மென்றனிச் சித்தே
சக்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்
இத்தகை விளங்கு மென்றனிச் சித்தே

(இயற்கை இன்பம்)

ஆக்குறு மவத்தைக ளனைத்தையுங் கடந்துமேல்
ஏக்கற நிறைந்த வென்றனி யின்பே

(அருள் அமுதம்)

கரும்புறு சாறுங் கனிந்தமுக் கனியின்
விரும்புறு மிரதமு மிக்கதீம் பாலும்
குணங்கொள் கோற்றேனுங் கூட்டியொன் றாக்கி
மணங்கொளப் பதஞ்செய் வகையுற வியற்றிய
உணவெனப் பலகா லுரைக்கினும் நிகரா
வணமுறு மின்ப மயமே யதுவாய்க்
கலந்தறி வுருவாய்க் கருதுதற் கரிதாய்
நலந்தரு விளக்கமும் நவிலருந் தண்மையும்
உள்ளதா யென்று முள்ளதா யென்னுள்
உள்ளதா யென்ற னுயிருள முடம்புடன்
எல்லா மினிப்ப வியலுறு சுவையளித்
தெல்லாம் வல்லசித் தியற்கைய தாகிச்
சாகா வரமும் தனித்தபே ரறிவும்
மாகா தலிற்சிவ வல்லப சத்தியும்
செயற்கரு மனந்த சித்தியு மின்பமும்
மயக்கறத் தருந்திறல் வண்மைய தாகிப்
பூரண வடிவாய்ப் பொங்கிமேற் றதும்பி
ஆரண முடியுட னாகம முடியுங்
கடந்தென தறிவாங் கனன்மேற் சபைநடு
நடந்திகழ் கின்றமெய்ஞ் ஞானவா ரமுதே
சத்திய வமுதே தனித்திரு வமுதே
நித்திய வமுதே நிறைசிவ வமுதே

சச்சிதா னந்தத் தனிமுத லமுதே
மெய்ச்சிதா காச விளைவரு ளமுதே
ஆனந்த வமுதே யருளொளி யமுதே
(மணி)
தானந்த மில்லாத் தத்துவ வமுதே
அண்டமு மதன்மே லண்டமு மவற்றுள்
பண்டமுங் காட்டிய பரம்பர மணியே
பிண்டமு மதிலுறு பிண்டமு மவற்றுள
பண்டமுங் காட்டிய பராபர மணியே
நினைத்தவை நினைத்தவை நினைத்தாங் கெய்துற
வனைத்தையுந் தருமோ ரரும்பெறன் மணியே
விண்பத மனைத்து மேற்பத முழுவதுங்
கண்பெற நடத்துங் ககனமா மணியே
வான்பெறற் கரிய வகையெலாம் விரைந்து
நான்பெற வளித்த நாத மந்திரமே
அகரமு முகரமு மழியாச் சிகரமும்
வகரமு மாகிய வாய்மை மந்திரமே
இடையுறப் படாத வியற்கை விளக்கமாய்த்
தடையொன்று மில்லாத் தகவுடை யதுவாய்
மாற்றிவை யென்ன மதித்தளப் பரிதா
யூற்றமும் வண்ணமு மொருங்குடை யதுவாய்க்
காட்சிக் கினியநற் கலையுடை யதுவா
யாட்சிக் குரியபன் மாட்சியு முடைத்தாய்க்
கைதவர் கனவினுங் காண்டற் கரிதாய்
செய்தவப் பயனுந் திருவருள் வலத்தால்
உளம்பெரு மிடமெலா முதவுக வெனவே
வளம்பட வாய்ந்த மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்தசெம் பொன்னே
மும்மையுந் தருமொரு செம்மையை யுடைத்தா
யிம்மையே கிடைத்திங் கிலங்கிய பொன்னே
எடுத்தெடுத் துதவினு மென்றுங் குறையா
தடுத்தடுத் தோங்குமெய் யருளுடைப் பொன்னே
தளர்ந்திடே லெடுக்கின் வளர்ந்திடு வேமெனக்
கிளர்ந்திட வுரைத்துக் கிடைத்த செம்பொன்னே
எண்ணிய படியெலா மியற்றுக வென்றெனைப்
புண்ணிய பலத்தாற் பொருந்திய நிதியே
பளகிலா தோங்கும் பளிக்குமா மலையே
வளமெலா நிறைந்த மாணிக்க மலையே
புற்புதந் திரைநுரை புரைமுத லிலதோர்

அற்புதக் கடலே யமுதத் தெண்கடலே
பவக்கடல் கடந்துநான் பார்த்தபோ தருகே
யுவப்புறு வளங்கொண் டோங்கிய கரையே
என்றுயர்ச் சோலைக ளெல்லாந் தவிர்த்துள
நன்றுற விளங்கிய நந்தனக் காவே
சேற்றுநீ ரின்றிநற் றீஞ்சுவை தருமோர்
ஊற்றுநீர் நிரம்ப வுடைய பூந்தடமே
கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணை நன்னீரே
யிளைப்பற வாய்த்த வின்சுவை யுணவே
தென்னைவாய்க் கிடைத்த செவ்விள நீரே
தென்னைவான் பலத்திற் றிருகுதீம் பாலே
நீர்நசை தவிர்க்கு நெல்லியங் கனியே
வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே
கட்டுமாம் பழமே கதலிவான் பழமே
யிட்டநற் சுவைசெய் யிலந்தையங் கனியே
என்பெரும் பதியே யென்னுயி ரியலே
யென்பெரு நிறைவே யென்றனி யறிவே
தோலெலாங் குழைத்திடச் சூழ்நரம் பனைத்தும்
மேலெலாங் கட்டவை விட்டுவிட் டியங்கிட
என்பெலா நெக்குநெக் கியலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசையெலா மெய்யுறத் தளர்ந்திட
ஒண்ணுதல் வியர்த்திட வொளிமுக மலர்ந்திட
தண்ணிய வுயிர்ப்பினிற் சாந்தந் ததும்பிட

(தனி அன்பு)

உண்ணகை தோற்றிட வுரோமம் பொடித்திடக்
கண்ணினீர் பெருகிக் கால்வழிந் தோடிட
வாய்துடித் தலறிட வளர்செவித் துளைகளிற்
கூயிசைப் பொறியெலாங் கும்மெனக் கொட்டிட
மெய்யெலாங் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்
கையெலாங் குவிந்திடக் காலெலாஞ் சுலவிட
மனங்கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட
இனம்பெறு சித்த மிசைந்து களித்திட
அகங்கார மாங்காங் கதிகரிப் பமைந்திடச்
சகங்காண வுள்ளந் தழைத்து மலர்ந்திட
அறிவுரு வனைத்து மானந்த மாயிடப்
பொறியுரு வான்மதற் போதமும் போயிடத்
தத்துவ மனைத்துந் தாமொருங் கொழிந்திடச்

சத்துவ மொன்றே தனித்துநின் ரோங்கிட
என்னு ளேயரும்பி யென்னு ளேமலர்ந்து
என்னுளே விரிந்த யென்னுடை யன்பே

(நித்திய விளக்கு)

அருளொளி விளங்கிட வாணவ மெனுமோர்
இருளற வென்னுளத் தேற்றிய விளக்கே

(அருட் கனல்)

உள்ளொளி யோங்கிட வுயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட் கனலே
கலங்கொளப் புரிந்திடு ஞானயா கத்திடை
வலஞ்சுழித் தெழுந்து வளர்ந்த மெய்க்கனலே
வேதமு மாகம விரிவும் பரம்பர
நாதமுங் கடந்த ஞானமெய்க் கனலே

(பரஞ்சுடர்)

சமரச சத்தியச் சபையி னடம்புரி
சமரச சத்தியத் தற்சுயஞ் சுடரே

(அருட் பெருஞ்சோதி)

சபையென துளமெனத் தானமர்ந் தெனக்கே
அபய மளித்ததோ ரருட்பெருஞ் ஜோதி
மருளெலாந் தளிர்த்து வரமெலாங் கொடுத்தே
அருளமு தருந்திய வருட்பெருஞ் ஜோதி
வாழிநின் பேரருள் வாழிநின் பெருஞ்சீர்
ஆழியொன் றளித்த வருட்பெருஞ் ஜோதி
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி
சித்திக ளனைத்தையுந் தெளிவித் தெனக்கே
சத்திய நிலைதனைத் தயவினிற் றந்தனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி
உலகினி லுயிர்களுக் குறுமிடை யூறெலாம்
விலகநீ யடைந்து விலக்குக மகிழ்க
சுத்தசன் மார்க்கச் சுகநிலை பெறுக
உத்தம னாகுக வோங்குக வென்றனை
போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய வருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி! (1)

[இந்த அகவல் 1596 அடிகளையுடையது. 54 பகுதிகளைக் கொண்டது. அவற்றுட் சில அடிகளே மேலே உள்ளவை.]

## 2. பரசிவ வணக்கம்

திருவிளங்கச் சிவயோக சித்தி யெலாம்விளங்கச்
சிவஞான நிலைவிளங்கச் சிவா நு பவம்விளங்கத்
தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற் றம்பலத்தே
திருக்கூத்து விளங்கவொளி சிறந்த திருவிளக்கே
உருவிளங்க வுயிர்விளங்க வுணர்ச்சி யதுவிளங்க
உலகமெலாம் விளங்கவரு ளுதவு பெருந்தாயாம்
மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்தொரு பால்விளங்க
வயங்குமணிப் பொதுவிளங்க வளர்ந்த சிவக்
கொழுந்தே (2)

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிரொளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புறு வாம் பர சிவமே. (3)

## 3. பதி விளக்கம்

உரைவளர் கலையே கலைவள ருரையே
வுரைகலை வளர்த்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே
விரைமலர் வளர் நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே
கரைதரு வளர்கிளர் கனியே
பரைவள ரொளியே யொளிவளர் பரையே
பரையொளி வளர்சிவ பதியே. (4)

நிறைவளர் முறையே முறைவளர் நிறையே
நிறைமுறை வளர்பெரு நெறியே
பொறைவளர் புவியே புவிவளர் பொறையே
புவிபொறை வளர்தரு புனலே
துறைவளர் கடலே கடல்வளர் துறையே
துறைகடல் வளர்தரு சுதையே
மறைவளர் பொருளே பொருள்வளர் மறையே
மறைபொருள் வளர்சிவ பதியே. (5)

காட்டுகின்ற வுவர்க்கடல்போற் கலைகளினுஞ் செல்வக்
களிப்பினிலுஞ் சிறந்துமிகக் களித்துநிறை கின்றேன்
நீட்டுகின்ற வாடத்தி லொருசிறிது முதவேன்
நெடுந்தூர மாழ்ந்துதவாப் படுங்கிணறு போல்வேன்
ஆட்டுகின்ற வருட்பெருமை யொருசிறிதுந் தெரியே
னச்சமிலே னுணமிலே னடக்கமொன்று மில்லேன்
கூட்டுகின்ற வுலகிடைநா னேன்பிறந்தே னினது
குறிப்பறியேன் மன்றினடங் குலவுகுல மணியே. (15)

விழியைத் தூர்க்கின்ற வஞ்சரை விழைந்தேன்
விருந்தி லேயுண வருந்தியோர் வயிற்றுக்
குழியைத் தூர்க்கின்ற கொடியரிற் கொடியேன்
கோப வெய்யனேன் பாபமே பயின்றேன்
வழியைத் தூர்ப்பவற் குளவுரைத் திடுவேன்
மாய மேபுரி பேயரிற் பெரியேன்
பழியைத் தூர்ப்பதற் கென்செயக் கடவேன்
பரம னேயெனைப் பரிந்துகொண் டருளே. (16)

தூங்கு கின்றதே சுகமென வறிந்தேன்
சோற தேபெறும் பேறதென் றுணர்ந்தேன்
ஏங்கு கின்றதே தொழிலெனப் பிடித்தேன்
இரக்கின் றோர்களே யென்னினு மவர்பால்
வாங்கு கின்றதே பொருளென வலித்தேன்
வஞ்ச நெஞ்சினுற் பஞ்செனப் பறந்தேன்
ஓங்கு கின்றதற் கென்செயக் கடவேன்
உடைய வாவெனை யுவந்துகொண் டருளே. (17)

துருக்க லோகடுங் கருங்கலோ வயிரச்
சூழ்க லோவெனக் காழ்கொளு மனத்தேன்
தருக்க லாணவக் கருக்கலோ டுழல்வேன்
சந்தை நாயெனப் பந்தமுற் றலைவேன்
திருக்கெ லாம்பெறு வெருக்கெனப் புகுவேன்
தீய னேன்பெரும் பேயனே னுளந்தான்
உருக்க லாவதற் கென்செயக் கடவேன்
உடைய வாவெனை யுவந்துகொண் டருளே. (18)

## 5. முறையீடு

மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன் றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலை யறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியேன் அறந்தான்
செய்தறியேன் மனமடங்குந் திறத்தினிலோ ரிடத்தே

இருந்தறியேன் அறிந்தோரை யேத்திடவு மறியேன்
    எந்தைபிரான் மணிமன்றம் எய்தவறி வேனோ
இருந்ததிசை சொலவறியேன் எங்ஙனநான் புகுவேன்
    யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்
        திலனே. (19)

கற்குமுறை கற்றறியேன் கற்பனகற் றறிந்த
    கருத்தர்திருக் கூட்டத்திற் களித்திருக்க வறியேன்
நிற்குநிலை நின்றறியே னின்னுரி னடித்தேன்
    நெடுங்காமப் பெருங்கடலை நீந்தும்வகை யறியேன்
சிற்குணமா மணிமன்றிற் றிருநடனம் புரியுந்
    திருவடியென் சென்னிமிசைச் சேர்க்கவறி வேனோ
இற்குணஞ்செய் துழல்கின்றே னெங்ஙனநான் புகுவேன்
    யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்
        திலனே. (20)

சாதிமதஞ் சமயமெனுஞ் சங்கடம்விட் டறியேன்
    சாத்திரச்சே றுடுகின்ற சஞ்சலம்விட் டறியேன்
ஆதியந்த நிலையறியேன் அலையறியாக் கடல்போல்
    ஆனந்தப் பெரும்போகத் தமர்ந்திடவு மறியேன்
நீதிநெறி நடந்தறியேன் சோதிமணிப் பொதுவில்
    நிருத்தமிடு மொருத்தர்திருக் கருத்தையறி வேனோ
ஏதிலர்சா ருலகினிடை யெங்ஙனநான் புகுவேன்
    யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்
        திலனே. (21)

## 6. அடியார் பேறு

எந்த வகைசெய் திடிற்கருணை எந்தாய் நீதான்
        [இரங்குவையோ
அந்த வகையை நானறியேன் அறிவிப் பாரும் எனக்கில்லை
இந்த வகையிங் கையோநான் இருந்தாற் பின்னர்
        [என்செய்வேன்
பந்த வகையற் றவருளத்தே நடிக்கும் உண்மைப்
        [பரம்பொருளே (22)

எல்லாம் உடையாய் நின்செயலே எல்லாமென்றால்
        [என்செயல்கள்
எல்லாம் நினது செயலன்றோ என்னே என்னைப் புறந்தள்ளல்
வல்லாய் என்னைப் புறம்விடுத்தால் புறத்தும் உன்றன்
        [மயமன்றே
நல்லார் எங்குஞ் சிவமயமென் றுரைப்பார் எங்கள்
        [நாயகனே. (23)

## 7. ஆத்தும விசாரத் தழுங்கல்

போகமே விழைந்தேன் புலைமனச் சிறியேன்
பூப்பினும் புணர்ந்தவெம் பொறியேன்
ஏகமே பொருளென் றறிந்திலேன் பொருளின்
இச்சையால் எருதுநோ வறியாக்
காகமே யெனப்போய்ப் பிறர்தமை வருத்திக்
களித்தபா தகத்தொழிற் கடையேன்
மோகமே உடையேன் என்னினும் எந்தாய்
முனிந்திடேல் காத்தருள் எனையே. (24)

வட்டியே பெருக்கிக் கொட்டியே யேழை
மனைகவர் கருத்திலேன் ஓட்டைச்
சட்டியே யெனினும் பிறர்கொளத் தரியேன்
தயவிலேன் சூதெலாம் அடைத்த
பெட்டியே நிகர்த்த மனத்தினேன் உலகிற்
பெரியவர் மனம்வெறுத் திடச்செய்
எட்டியே மண்ணுங் கட்டியே யனையேன்
என்னினும் காத்தருள் எனையே. (25)

## 8. அவா அறுப்பு

சோற்றிலே விருப்பஞ் சூழ்ந்திட லொருவன்
துன்னுநற் றவமெலாஞ் சுருங்கி
ஆற்றிலே கரைத்த புளியெனப் போமென்
றறிஞர்க ளுரைத்திடல் சிறிதும்
போற்றிலே னுன்னைப் போற்றிலேன் சுவையிற்
பொருந்திய காரசா ரஞ்சேர்
சாற்றிலே கலந்த சோற்றிலே யாசை
தங்கினே னென்செய்வே னெந்தாய். (26)

## 9. திருவருட் பெருமை

வெறுத்துரைத்தேன் பிழைகளெல்லாம் பொறுத்தருளல்
[வேண்டும்
விளங்கறிவுக் கறிவாகி மெய்ப்பொதுவி னடிப்போய்
கறுத்துரைத்தார் தமக்குமருள் கனிந்துரைக்கும் பெரிய
கருணைநெடுங் கடலேமுக் கண்ணோங்குங் கரும்பே
மறுத்துரைப்ப தெவனருணீ வழங்குகினு மன்றி
மறுத்திடினும் முன்னையலான் மற்றொருசார் பறியேன்
செறுத்துரைத்த வுரைகளெலாந் திருவருளே யென்று
சிந்திப்ப தல்லாமல் செய்வகையொன் றிலனே. (27)

மனம்பிடியா மையினுலோ மாட்டாமை யாலோ
மறதியினு லோவெனது வருத்தமத னுலோ
தினம்பிடியா மயக்காலோ திகைப்பாலோ பிறர்மேற்
சினத்தாலோ வெதனுலோ சிலபுகன்றே னிதனை
சினம்பிடியாத் தேவர்திரு வுளம்பிடியா தெனவே
சிந்தைகளித் திருக்கின்றேன் திருவுளத்தை யறியேன்
இனம்பிடியா மையுமுண்டோ வுண்டெனிலன் புடையார்
ஏசல்புகழ் பேசலென வியம்புதலென் னுலகே. (28)

நாயகரே யுமதுவச நானிருக்கின் றதுபோல்
நாடியதத் துவத்தோழி நங்கையரென் வசத்தே
மேயவரா காமையினு லவர்மேலங் கெழுந்த
வெகுளியினுற் சிலபுகன்றேன் வேறுநினைத் தறியேன்
தூயவரே வெறுப்புவரில் விதிவெறுக்க வென்றூர்
சூழவிதித் தாரைவெறுத் திடுதலவர் துணிவே
தீயவரா யினுங்குற்றங் குறியாது புகன்றூற்
தீமொழியன் றெனத்தேவர் செப்பியது முளதே. (29)

## 10. பிரிவாற்றுமை

அறிவிலே னறிந்தார்க் கடிப்பணி புரியேன்
அச்சமு மவலமு முடையேன்
செறிவிலேன் பொதுவாந் தெய்வநீ நினது
திருவுளத் தெனைநினை யாயேல்
எறிவிலேன் சிறியே னெங்ஙனம் புகுவேன்
என்செய்வேன் யார்துணை யென்பேன்
பிறிவிலேன் பிரித்தா லுயிர்தரிக் கலனென்
பிழைபொறுத் தருள்வதுன் கடனே. (30)

இனியநற் றுயில் இனியவென் அரசே
யென்னிரு கண்ணுண்மா மணியே
கனியென வினிக்குங் கருணையா ரமுதே
கனகவம் பலத்துறுங் களிப்பே
துனியுறு மனமுஞ் சோம்புறு முணர்வுஞ்
சோர்வுறு முகமுங்கொண் டடியேன்
தனியுளங் கலங்க லழகதோ வெனைத்தான்
தந்தநற் றந்தைநீ யலையோ. (31)

தந்தையுந் தாயுங் குருவும்யான் போற்றுஞ்
சாமியும் பூமியும் பொருளுஞ்
சொந்தநல் வாழ்வும் நேயமுந் துணையுஞ்
சுற்றமு முற்றுநீ யென்றே

சிந்தையுற் றிங்கே யிருக்கின்றே னிதுநின்
திருவுளந் தெரிந்ததே யெந்தாய்
நிந்தைசெய் யுலகில் யானுளங் கலங்கல்
நீதியோ நின்னருட் கழகோ. (32)

## 15. சிற்சபை விளக்கம்

சோறு வேண்டினுந் துகிலணி முதலாஞ்
சுகங்கள் வேண்டினுஞ் சுகமலாற் சுகமாம்
வேறு வேண்டினும் நினையடைந் தன்றி
மேவொ ணாதெனும் மேலவ ருரைக்கே
மாறு வேண்டிலேன் வந்துநிற் கின்றேன்
வள்ள லேயுன்றன் மனக்குறிப் பறியேன்
சாறு வேண்டிய பொழில்வட லரசே
சத்தி யச்சபைத் தனிப்பெரும் பதியே. (33)

## 16. திருவருள் முறையீட்டுக் கண்ணி

பற்று நினைந்தெழுமிப் பாவிமனத் தீமையெலா
முற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. (34)

எள்ளே நின்னிடத்தே யெண்ணுகின்ற தோறுமதை
யுள்ளே நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. (35)

துன்னுகின்ற தீமைநின்பாற் சூழ்ந்துரைக்குந் தோறுமதை
யுன்னுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. (36)

கோகோ வெனுங்கொடியேன் கூறியகுற் றங்களெலாம்
ஓகோ நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா, (37)

பித்தனெனத் தீமை பிதற்றிய தெண்ணுதொறு
முத்தமனே யென்னுடைய வுள்ள முருகுதடா. (38)

மன்றுடையாய் நின்னருளை வைதகொடுஞ் சொற்பொருளி
லொன்றை நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. (39)

அஞ்சலென்றாய் நின்பா லடாதமொழி பேசியதை
யஞ்சி நினைக்கிலெனக் கஞ்சும் கலங்குதடா. (40)

எண்ணாக் கொடுமையெலா மெண்ணியுரைத் தேனதனை
அண்ணா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. (41)

எச்சோடு மில்லா திழிந்தேன் பிழைகளெலாம்
அச்சோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. (42)

கொதிக்கின்ற வன்மொழியாற் கூறியதை யையோ
மதிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. (43)

சினங்கொண்ட போதெல்லாஞ் செப்பியவன் சொல்லே
மனக்கொள்ளுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. (44)

ஊடுகின்ற சொல்லா லுரைத்ததனை யெண்ணியெண்ணி
வாடுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. (45)

ஊடும்போ துன்னை யுரைத்தவெலா நாயடியேன்
நாடும்போ தெல்லாமென் னுடி நடுங்குதடா. (46)

கன்றி யுரைத்த கடுஞ்சொற் கடுவையெலாம்
நன்றியிலே னென்னுதொறு நாடி நடுங்குதடா. (47)

ஊனமிலா நின்னை யுரைத்தகொடுஞ் சொல்லையெலாம்
ஞானமிலே னெண்ணுதொறு நாடி நடுங்குதடா. (48)

இனியேது செய்வே னிகழ்ந்துரைத்த சொல்லை
தனியே நினைத்திடினுந் தாது கலங்குதடா. (49)

ஆவதறியா தடியே னிகழ்ந்த கொடும்
பாவ நினைக்கிற் பகீரென் றலைக்குதடா, (50)

குற்ற நினைத்தகொடுஞ் சொல்லெலா மென்னுளத்தே
பற்ற நினைக்கிற் பயமா யிருக்குதடா. (51)

எள்ளுகின்ற தீமை யெடுத்துரைத்தே னுங்கதனை
விள்ளுகின்ற தோறுமுளம் வெந்து வெதும்புதடா. (52)

## 17. தற்சுதந்தரம் இன்மை

பொடியெடுக்கப் போயதனை மறந்துமடி
யெடுத்தரையிற் புனைவேன் சில்லோர்
தடியெடுக்கக் காணிலதற் குளங்கலங்கி
யோடுவெளித் தரத்தே னிங்கே
முடியெடுக்க வல்லேனோ விறைவாநின்
அருளிலதேல் முன்னே வைத்த
வடியெடுக்க முடியாதே யந்தோவிச்
சிறியேனு லாவ தென்னே. (53)

பாட்டுவித்தாற் பாடுகின்றேன் பணிவித்தாற்
பணிகின்றேன் பதியே நின்னைக்
கூட்டுவித்தாற் கூடுகின்றேன் குழைவித்தாற்
குழைகின்றேன் குறித்த வூணை
யூட்டுவித்தா லுண்கின்றே னுறக்குவித்தா
லுறங்குகின்றே னுறங்கா தென்றும்
ஆட்டுவித்தா லாடுகின்றே னந்தோவிச்
சிறியேனு லாவ தென்னே. (54)

உடுப்பவனு முண்பவனும் நானேயென்
னவுநாண முறுவ தெந்தாய்
தடுப்பவனுந் தடைதீர்த்துக் கொடுப்பவனும்
பிறப்பிறப்புத் தன்னை நீக்கி
யெடுப்பவனுங் காப்பவனு மின்பவனு
பவவுருவா யென்னு ளோங்கி
யடுப்பவனு நீயென்று லந்தோவிச்
சிறியேனு லாவ தென்னே. (55)

## 18. அத்துவிதானந்தத் தநுபவ விடையீடு

திருத்தகுபொன் னம்பலத்தே திருநடஞ்செய் தருளுந்
திருவடிக ளடிச்சிறியேன் சென்னிமிசை வருமோ
உருத்தகுநா னிலத்திடைநீண் மலத்தடைபோய் ஞான
வுருப்படிவ மடைவேனோ வொன்றிரண்டென் னுத
பொருத்தமுறு சுத்தசிவா னந்தவெள்ளந் ததும்பிப்
பொங்கியகம் புறங்காணு தெங்குநிறைந் திடுமோ
அருத்தகுமவ் வெள்ளத்தே நான்மூழ்கி நான்போ
யதுவாகப் பெறுவேனோ வறிந்திலன்மேல் விளைவே. (56)

களக்கமறப் பொதுநடநான் கண்டுகொண்ட தருணங்
கடைச்சிறியே னுளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பியுதிர்ந் திடுமோ
வெம்பாது பழுக்கினுமென் கரத்திலகப் படுமோ
கொளக்கருது மலமாயைக் குரங்குகவர்ந் திடுமோ
குரங்குகவ ராதெனது குறிப்பிலகப் படினுந்
துளக்கமற வுண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ
சோதிதிரு வுளமெதுவோ வேதுமறிந் திலனே. (57)

திருப்பொதுவிற் றிருநடநான் சென்றுகண்ட தருணஞ்
சித்தியெனும் பெண்ணரசி யெத்தியென்கை பிடித்தாள்
கருப்பறியா தெனையதன்முன் கலந்தபுத்தி யெனுமோர்
காரிகைதான் கண்டளவிற் கனிந்துமகிழ்ந் திடுமோ
விருப்பமுறா தெனைமுனிந்து விடுத்திடுமோ நேயம்
விளைந்திடுமோ விவர்க்குநிதஞ் சண்டைவிளைந் திடுமோ
தருப்பொதுவி லிருவருக்குஞ் சந்ததியுண் டாமோ
தடைபடுமோ திருவுளந்தான் சற்றுமறிந் திலனே. (58)

தாய்கொண்ட திருப்பொதுவி லெங்கள்குரு நாதன்
சந்நிதிபோய் வரவிடுத்த தனிக்கரணப் பூவை
காய்கொண்டு வந்திடுமோ பழங்கொண்டு வருமோ
கனிந்தபழங் கொண்டுவரும் காலதனை மதமாம்

பேய்கொண்டு போய்விடுமோ பிலத்திடைவீழ்ந் திடுமோ
　　பின்படுமோ முன்படுமோ பிணங்கியொளித் திடுமோ
வாய்கொண்டு வென்றிடுமோ தோற்றிடுமோ வென்னை
　　மறந்திடுமோ திருவுளத்தின் வண்ணமறிந் திலனே. (59)

தீட்டுமணிப் பொதுநடஞ்செய் திருவடிகண் டேத்தச்
　　செல்கின்றேன் சிறியேன்முன் சென்றவழி யறியேன்
காட்டுவழி கிடைத்திடுமோ நாட்டுவழி தருமோ
　　காலிளைப்புக் கண்டிடுமோ காணுதோ களிப்பாம்
மேட்டினிடை விடுத்திடுமோ பள்ளத்தே விடுமோ
　　விவேகமெனுந் துணையுறுமோ வேடர்பய முறுமோ
ஈட்டுதிரு வடிச்சமுகங் காணவுநேர்ந் திடுமோ
　　வெப்படியோ திருவுளந்தா னேதுமறிந் திலனே. (60)

ஞானமணிப் பொதுநடஞ்செய் திருவடிகண் டிடவே
　　நடக்கின்றே னந்தோமுன் னடந்தவறி வறியேன்
ஊனமிகு மாணவமாம் பாவியெதிர்ப் படுமோ
　　வுடைமையெலாம் பறித்திடுமோ நடைமெலிந்து [போமோ
ஈனமுறு மகங்காரப் புலிகுறுக்கே வருமோ
　　விச்சையெனு மிராக்கதப்பே யெனைப்பிடித்துக் கொளு
ஆனமலத் தடைநீக்க வருட்டுணைதா னுறுமோ [மோ
　　ஐயர்திரு வுளமெதுவோ யாதுமறிந் திலனே. (61)

## 19. திருக்கதவந் திறத்தல்

திருக்கதவந் திறவாயோ திரைகளெல்லாந் தவிர்த்தே
　　திருவருளாம் பெருஞ்சோதித் திருவுருக்காட் டாயோ
உருக்கியமு தூற்றெடுத்தென் னுடம்புயிரோ டுளமு
　　மொளிமயமே யாக்குறமெய் யுணர்ச்சியரு ளாயோ
கருக்கருதாத் தனிவடிவோய் நின்னையென்னுட் கலந்தே
　　கங்குல்பக லின்றியென்றிங் களித்திடச்செய் யாயோ
செருக்கருதா தவர்க்கருளுஞ் சித்திபுரத் தரசே
　　சித்தசிகா மணியேயென் றிருநடநா யகனே. (62)

கலையுரைத்த கற்பனையே நிலையெனக்கொண் டாடும்
　　கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக
மலைவறுசன் மார்க்கமொன்றே நிலைபெறமெய் யுலகம்
　　வாழ்ந்தோங்கக் கருதியருள் வழங்கினையென் றனக்கே
உலைவறுமிப் பொழுதேநற் றருணமென நீயே
　　யுணர்த்தினைவந் தணைந்தருள்வாயுண்மையுரைத் தவனே
சிலைநிகர்வன் மனங்கரைத்துத் திருவமுத மளித்தோய்
　　சித்தசிகா மணியேயென் றிருநடநா யகனே. (63)

## 20. பிள்ளைச் சிறு விண்ணப்பம்

தடித்தவோர் மகனைத் தந்தையீண் டடித்தாற்
றாயுட னணைப்பள்தா யடித்தாற்
பிடித்தொரு தந்தை யணைப்பனிங் கெனக்குப்
பேசிய தந்தையுந் தாயும்
பொடித்திரு மேனி யம்பலத் தாடும்
புனிதநீ யாதலா லென்னை
அடித்தது போது மணைத்திடல் வேண்டும்
அம்மையப் பாவினி யாற்றேன். (64)

வெம்மதிக் கொடிய மகன்கொடுஞ் செய்கை
விரும்பினு மங்ஙனம் புரியச்
சம்மதிக் கின்றா ரவன்றனைப் பெற்ற
தந்தைதாய் மகன்விருப் பாலே
இம்மதிச் சிறியேன் விழைந்ததொன் றிலைநீ
யென்றனை விழைவிக்க விழைந்தேன்
செம்மதிக் கருணைத் திருநெறி யிதுநின்
திருவுள மறியுமே யெந்தாய். (65)

இறக்கவு மாசை யில்லையிப் படிநா
னிருக்கவு மாசையின் றினிநான்
பிறக்கவு மாசை யிலையுல கெல்லாம்
பெரியவர் பெரியவ ரெனவே
சிறக்கவு மாசை யிலைவிசித் திரங்கள்
செய்யவு மாசையொன் றில்லை
துறக்கவு மாசை யிலைதுய ரடைந்து
தூங்கவு மாசையொன் றிலையே. (66)

எவ்வுயிர்த் திரளு மென்னுயி ரெனவே
யெண்ணிநல் லின்புறச் செயவும்
அவ்வுயிர் களுக்கு வருமிடை யூற்றை
யகற்றியே யச்சநீக் கிடவுஞ்
செவ்வையுற் றுனது திருப்பதம் பாடிச்
சிவசிவ வென்றுகூத் தாடி
யொவ்வுறு களிப்பா லழிவுறா திங்கே
யோங்கவு மிச்சைகா ணெந்தாய். (67)

உலகறி வெனக்கிங் குற்றநாள் தொடங்கி
யுன்னறி வடையுநாள் வரையில்
இலகியென் னோடு பழகியு மெனைத்தான்
எண்ணியும் நண்ணியும் பின்னர்

விலகிய மாந்த ரனைவரு மிங்கே
மெய்யுறக் கூடிநின் றுனையே
அலகில்பே ரன்பிற் போற்றிவாழ்ந் திடவும்
அடியனேற் கிச்சைகா ணெந்தாய். (68)

தங்கமே யனையார் கூடிய ஞான
சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவுஞ் சங்கஞ்
சார்திருக் கோயில்கண் டிடவுந்
துங்கமே பெறுஞ்சற் சங்கநீ டூழி
துலங்கவுஞ் சங்கத்தி லடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி
யாடவு மிச்சைகா ணெந்தாய். (69)

மண்ணுல கதிலே யுயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை யொருசிறி தெனினுங்
கண்ணுறப் பார்த்துஞ் செவியுறக் கேட்டுங்
கணமும்நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறு மெனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தந் தவிர்க்கநல் வரந்தான்
நல்குத லெனக்கிச்சை யெந்தாய். (70)

என்னுயிர்க் குயிராந் தெய்வமே யென்னை
யெழுமையுங் காத்தரு ளிறைவா
என்னுளத் தினிக்குந் தீஞ்சுவைக் கனியே
எனக்கறி வுணர்த்திய குருவே
என்னுடை யன்பே திருச்சிற்றம் பலத்தே
எனக்கருள் புரிந்தமெய் யின்பே
என்னையீன் றெடுத்த தந்தையே யடியேன்
இசைக்கின்றேன் கேட்கவிம் மொழியே. (71)

## 21. பிள்ளைப்பெரு விண்ணப்பம்

கருணையா ரமுதே யென்னுயிர்க் குயிரே
கனிந்தசிற் றம்பலக் கனியே
வருணமா மறையின் மெய்ப்பொரு ளாகி
வயங்கிய வள்ளலே யன்பர்
தெருணிறை யுளத்தே திகழ்தனித் தலைமைத்
தெய்வமே திருவருட் சிவமே
தருணமென் றெருமைத் தந்தையே தாயே
தரித்தருள் திருச்செவிக் கிதுவே. (72)

அன்னையே யப்பா திருச்சிற்றம் பலத்தென்
ஐயனே யிவ்வுல கதிலே
பொன்னையே யுடையார் வறியவர் மடவார்
புகலுமா டவரிவர் களுக்குள்
தன்னையே யறியாப் பிணியினு லாவி
தளர்கின்றார் தருணமீ தெனவே
சொன்னபோ தெல்லாம் பயந்துநா னடைந்த
சோபத்தை நீயறி யாயோ. (73)

காவிநேர் பங்காள் பங்கனே தலைமைக்
கடவுளே சிற்சபை தனிலே
மேவிய வொளியே யிவ்வுல கதிலூர்
வீதியா திகளிலே மனித
ராவிபோ னதுகொண் டுறவின ரழுத
வழுகுரல் கேட்டபோ தெல்லாம்
பாவியே னுள்ளம் பகீரென நடுங்கிப்
பதைத்ததுன் னுளமறி யாதோ. (74)

கற்றவ ருளத்தே கரும்பினி லினிக்குங்
கண்ணுதற் கடவுளே யென்னைப்
பெற்றதாய் நேய ருறவினர் துணைவர்
பெருகிய பழக்கமிக் குடையோர்
மற்றவ ரிங்கே தனித்தனி பிரிந்து
மறைந்திட்ட தோறுமப் பிரிவை
யுற்றுநா னினைக்குந் தோறுமுண் ணடுங்கி
யுடைந்தன னுடைகின்றே னெந்தாய். (75)

எட்டரும் பொருளே திருச்சிற்றம் பலத்தே
யிலகிய விறைவனே யுலகிற்
பட்டினி யுற்றார் பசித்தனர் களையால்
பரதவிக் கின்றன ரென்றே
யொட்டிய பிறராற் கேட்டபோ தெல்லா
முளம்பகீ ரெனநடுக் குற்றே
னிட்டவிவ் வுலகிற் பசியெனி லெந்தா
யென்னுள நடுங்குவ தியல்பே. (76)

இன்புறு முணவு கொண்டபோ தெல்லா
மிச்சுகத் தாலினி யாது
துன்புறுங் கொல்லோ வென்றுள நடுங்கிச்
சூழ்வெறு வயிற்றொடு மிருந்தே

னன்பிலே யன்பர் கொடுத்தவை யெல்லா
மையகோ தெய்வமே யிவற்றால்
வன்புறச் செய்யே லென்றுளம் பயந்து
வாங்கியுண் டிருந்தன னெந்தாய். (77)

அந்தமோ டாதி யில்லதோர் பொதுவி
லரும்பெருஞ் சோதியே யடியேன்
சொந்தமோ வறியேன் பகலிர வெல்லாந்
தூக்கமே கொண்டனன் தூக்கம்
வந்தபோ தெல்லாம் பயத்தொடும் படுத்தேன்
மற்றுநா னெழுந்தபோ தெல்லாந்
தொந்தமாம் பயத்தாற் சிவசிவ தூக்கந்
தொலைவதெக் காலமென் றெழுந்தேன். (78)

பகலிர வடியேன் படுத்தபோ தெல்லாந்
தூக்கமாம் பாவிவந் திடுமே
யிகலுறு கனவாங் கொடியவெம் பாவி
யெய்துமே லென்செய்வே மென்றே
யுகலுற வுள்ளே நடுங்கிய நடுக்க
முன்னுள மறியுமே யெந்தாய்
நகலுறச் சிறியேன் கனவுகண் டுள்ள
நடுங்கிடா நாளுமொன் றுளதோ. (79)

புன்புலா லுடம்பி னசுத்தமு மிதனிற்
புகுந்துநா னிருக்கின்ற புணர்ப்பு
மென்பொலா மணியே யெண்ணிநா னெண்ணி
யேங்கிய யேக்கநீ யறிவாய்
வன்புலா லுண்ணு மனிதரைக் கண்டு
மயங்கியுண் ணடுங்கியாற் றுமெ
லென்பெலாங் கருக விளைத்தன னந்த
விளைப்பையு மையநீ யறிவாய். (80)

அருளினை யளிக்கு மப்பனே யுலகி
லன்புளார் வலித்தெனக் கீந்த
பொருளினை வாங்கிப் போனபோ தெல்லாம்
புழுங்கிய புழுக்கநீ யறிவாய்
மருளுமப் பொருளைச் சாலகத் தெறிந்து
மனமிக விளைத்ததும் பொருளால்
இருளுறு மெனநா னுளநடுங் கியது
மெந்தைநின் றிருவுள மறியும். (81)

பொருளிலே யுலக மிருப்பதா தலினல்
புரிந்துநா மொருவர்பாற் பலகால்
மருவினுற் பொருளி னிச்சையாற் பலகால்
மருவுகின் றனெனக் கருதி
வெருவுவ ரெனநா னஞ்சியெவ் விடத்து
மேவிலே னெந்தைநீ யறிவா
யொருவுமப் பொருளை நினைத்தபோ தெல்லா
முவட்டினே னிதுவுநீ யறிவாய். (82)

சகப்புற வாழ்வைப் பார்த்திடிற் கேட்கிற்
சஞ்சல முறுமெனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்குந் தோட்டங்க டோறும்
நண்ணியும் பிறவிடத் தலைந்தும்
பகற்பொழு தெல்லா நாடொறுங் கழித்தேன்
பகலன்றி யிரவுமப் படியே
மிகப்பல விடத்துந் திரிந்தன னடியேன்
விளம்பலென் னீயறிந் ததுவே. (83)

கையுற வீசி நடப்பதை நாணிக்
கைகளைக் கட்டியே நடந்தேன்
மெய்யுறக் காட்ட வெருவிவெண் டுகிலால்
மெய்யெலா மையகோ மறைத்தேன்
வையமேற் பிறர்தங் கோலமு நடையும்
வண்ணமு மண்ணலே சிறிதும்
பையநா னூன்றிப் பார்த்ததே யில்லை
பார்ப்பனேல் பயமிகப் படைப்பேன். (84)

வைகிய நகரி லெழிலுடை மடவார்
வலிந்தெனைக் கைபிடித் திழுத்தும்
சைகைவே றுரைத்துஞ் சரசவார்த் தைகளாற்
றனித்தெனைப் பலவிசை யறிந்தும்
பொய்கரைந் தாணை புகன்றுமேல் விழுந்தும்
பொருண்முத லியகொடுத் திசைத்துங்
கைகலப் பறியே னடுங்கினே னவரைக்
கடிந்தது மில்லைநீ யறிவாய். (85)

எளியரை வலியா ரடித்தபோ தையோ
வென்மனங் கலங்கிய கலக்கம்
தெளியநா னுரைக்க வல்லவ னல்லேன்
றிருவுள மறியுமே யெந்தாய்

களியரைக் கண்டு பயந்தவென் பயந்தான்
கடலினும் பெரியது கண்டாய்
அளியர்பாற் கொடியர் செய்தவெங் கொடுமை
அறிந்தவென் னடுக்கமா ரறிவார். (86)

தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தாற்
சிறுகுறு மென்றுளம் பயந்தே
நாட்டிலே சிறிய வூர்ப்புறங் களிலே
நண்ணினே னூர்ப்புற மடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க்
களத்திலே திரிந்துற்ற விளைப்பை
யேட்டிலே யெழுத முடியுமோ விவைக
ளெந்தைநீ யறிந்தது தானே. (87)

காணுறு பசுக்கள் கன்றுக ளாதி
கதறிய போதெலாம் பயந்தே
னேணுறு மாடு முதல்பல மிருக
மிளைத்தவை கண்டுள மிளைத்தேன்
கோணுறு கோழி முதல்பல பறவை
கூவுதல் கேட்டுளங் குலைந்தேன்
வீணுறு கொடியர் கையிலே வாளை
விதிர்த்தல்கண் டென்னென வெருண்டேன். (88)

நலிதரு சிறிய தெய்வமென் றையோ
நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர வாடு பன்றிகுக் கிடங்கள்
பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே
புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிது தெய்வவெங் கோயில்
கண்டகா லத்திலும் பயந்தேன். (89)

பன்னிரண் டாண்டு தொடங்கிநா னிற்றைப்
பகல்வரை யடைந்தவை யெல்லா
முன்னினின் றுரைத்தா லுலப்புறு ததனு
லொருசில வுரைத்தன னெனினு
மென்னுளத் தகத்தும் புறத்துமுட் புறத்து
மியல்புறப் புறத்தினும் விளங்கி
மன்னிய சோதி யாவுநீ யறிந்த
வண்ணமே வகுப்பதென் னினக்கே. (90)

இதுவரை யடியே னடைந்தவெம் பயமு
மிடர்களுந் துன்பமு மெல்லாம்
பொதுவளர் பொருளே பிறர்பொருட் டல்லாற்
புலையனேன் பொருட்டல விதுநின்
மதுவளர் மலர்ப்பொற் பதத்துணை யறிய
வகுத்தன னடியனேன் றனக்கே
யெதிலுமோ ராசை யிலையிலை பயமு
மிடருமற் றிலையிலை யெந்தாய். (91)

பயந்துய ரிடருண் மருட்சியா தியவிப்
பகையெலாம் பற்றறத் தவிர்த்தே
நயந்தநின் னருளா ரமுதளித் தடியே
னுடியீண் டெண்ணிய வெல்லாம்
வியந்திடத் தருதல் வேண்டுமீ தெனது
விண்ணப்ப நின்றிரு வுளத்தே
வயந்தரக் கருதித் தயவுசெய் தருள்க
வள்ளலே சிற்சபை வாழ்வே. (92)

என்னுயிர் காத்தல் கடனுனக் கடியேன்
இசைத்தவிண் ணப்பமேற் றருளி
உன்னுமென் னுள்ளத் துறும்பய மிடர்கள்
உறுகண்மற் றிவையெலா மொழித்தே
நின்னரு ளமுத மளித்தென தெண்ண
நிரப்பியாட் கொள்ளுதல் வேண்டும்
மன்னுபொற் சபையில் வயங்கிய மணியே
வள்ளலே சிற்சபை வாழ்வே. (93)

## 22. வேண்டுகோள்

அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம்நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரு மெய்ப்பதமும் எங்கணுநான் சென்றே
யெந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கந்
திகழ்ந்தோங்க வருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டுந்
தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே. (94)

அண்ணாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அழியாத தனிவடிவம் யானடைதல் வேண்டும்
கண்ணார நினையெங்குங் கண்டுவத்தல் வேண்டும்
காணாத காட்சியெலாங் கண்டுகொளல் வேண்டும்

பண்ணுர நின்றனையே பாடியுறல் வேண்டும்
பரமானந் தப்பெருங்கூத் தாடியிடல் வேண்டும்
உண்ணுடி யுயிர்களுறுந் துயர்தவிர்த்தல் வேண்டும்
உனைப்பிரியா துறுகின்ற வுறவதுவேண் டுவனே. (95)

அத்தாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்சோ தியைப்பெற்றே யகங்களித்தல்
[வேண்டும்
செத்தாரை மீட்டுமிங்கே யெழுப்பியிடல் வேண்டும்
திருச்சபைக்கே யடிமைகளாச் செய்வித்தல் வேண்டும்
ஒத்தாரு முயர்ந்தாருந் தாழ்ந்தாரு மெவரும்
மொருமையுள ராகியுல கியல்நடத்த வேண்டும்
எத்தாலு மழியாத வடிவதிலே நானு
மெந்தாயு மொன்ருக வினிதுறல்வேண் டுவனே. (96)

அரைசேநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்சோ தியைப்பெற்றேயகமகிழ்தல்வேண்டும்
வரைசேரெவ் வுலகமுமோ ரொழுக்கமுறல் வேண்டும்
மடிந்தாரை மீளவுநான் வருவித்தல் வேண்டும்
புரைசேருங் கொலைநெறியும் புலைநெறியுஞ் சிறிதும்
பொருந்தாம லெவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்
உரைசேர்மெய்த் திருவடிவி லெந்தாயு நானு
மொன்ருகி யென்ஞான்று மோங்குதல்வேண்
[டுவனே. (97)

அச்சாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆறந்த நிலைகளெல்லா மறிந்தடைதல் வேண்டும்
எச்சார்பு மாகியுயிர்க் கிதம்புரிதல் வேண்டும்
எனையடுத்தார் தமக்கெல்லா மின்புதரல் வேண்டும்
இச்சாதி சமயவிகற் பங்களெலாந் தவிர்ந்தே
யெவ்வுலகுஞ் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்
உச்சாதி யந்தமிலாத் திருவருளில் யானும்
உடையாயுங் கலந்தோங்கு மொருமையும்வேண்
[டுவனே. (98)

## 23. சிவானந்த நிலை

வெண்பா

கண்டேன் களித்தேன் கருணைத் திருவமுதம்
உண்டே னுயிர்நிலைமே லோங்குகின்றேன்—கொண்டேன்
அழியாத் திருவுருவ மச்சோவெஞ் ஞான்றும்
அழியாச்சிற் றம்பலத்தை யான். (99)

பார்த்தேன் பணிந்தேன் பழிச்சினேன் மெய்ப்புளகம்
போர்த்தேனென் னுள்ளமெலாம் பூரித்தேன்—ஆர்த்தேநின்
ருடுகின்றேன் பாடுகின்றே னன்புருவா னேனருளை
நாடுகின்றேன் சிற்சபையை நான். (100)

எண்ணுகின்றே னெண்ணங்க ளெல்லாந் தருகின்றான்
உண்ணுகின்றே னுண்ணவுண்ண வூட்டுகின்றான்—
நண்ணுதிருச்
சிற்றம் பலத்தே திருநடஞ்செய் கின்றானென்
குற்றம் பலபொறுத்துக் கொண்டு. (101)

கொண்டா னடிமை குறியான் பிழையொன்றுங்
கண்டா னளித்தான் கலந்திருந்தான்—பண்டாய
நான்மறையு மாகமமு நாடுந் திருப்பொதுவில்
வான்மயத்தா னென்னை மகிழ்ந்து. (102)

## 24. சிவ தரிசனம்

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
பதிவெறுத்தே னிதிவெறுத்தேன் பற்றனைத்துந்
தவிர்ந்தேன்
ஆவியுடல் பொருளையுன்பாற் கொடுத்தே னுன்னருட்பே
ராசைமய மாகியுனை யடுத்துமுயல் கின்றேன்
கூவியெனை யாட்கொளநீ நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூவியிளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழுமண வாளா
தெருணிறைவா னமுதளிக்குந் தருணமிது தானே. (103)

கட்டவிழ்ந்த கமலமெனக் கருத்தவிந்து நினையே
கருதுகின்றேன் வேறொன்றுங் கருதுகிலே னிதுதான்
சிட்டருளந் திகழ்கின்ற சிவபதியே நினது
திருவுளமே யறிந்ததுநான் செப்புதலென் புவிமேன்
விட்டகுறை தொட்டகுறை யிரண்டுநிறைந்தனவே
விரைந்துவந்தே யருட்சோதி புரிந்தருளுந் தருணந்
தொட்டதுநான் றுணிந்துரைத்தே னீயுணர்த்த வுணர்ந்தே
சொல்வதலா லென்னறிவாற் சொல்லவல்லே னன்றே.

## 25. தற்போத விழப்பு

நாடுகின்ற மறைகளெலா நாமறியோ மென்று
நாணியுரைத் தலமரவே நல்லமணி மன்றில்
ஆடுகின்ற சேவடிகண் டானந்தக் கடலில்
ஆடுமன்பர் போனமக்கும் அருட்கிடைத்த தெனினும்

வீடுகின்ற பிறர்சிறிது மறியாம லிருக்க
வேண்டுமென விருந்தவென்னை வெளியிலிழுத் திட்டு
வாடுகின்ற வகைபுரிந்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. (105)

நதிகலந்த சடையசையத் திருமேனி விளங்க
நல்லதிருக் கூத்தாட வல்லதிரு வடிகள்
கதிகலந்து கொளச்சிறியேன் கருத்திடையே கலந்து
கள்ளமற வுள்ளபடி காட்டிடக்கண் டின்னும்
பதிகலந்து கொளுமட்டும் பிறரறியா திருக்கப்
பரிந்துள்ளே யிருந்தவென்னை வெளியிலிழுத் திட்டு
மதிகலந்து கலங்கவைத்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. (106)

## 26. பிரிவாற்றாமை

போக மாட்டேன் பிறரிடத்தே பொய்யிற் கிடந்து [புலர்ந்துமனம்
வேக மாட்டேன் பிறிதொன்றும் விரும்ப மாட்டேன் [பொய்யுலக
ஞுக மாட்டே னரசேயென் னப்பா வென்ற னையாநான்
சாக மாட்டே னுனைப்பிரிந்தாற் றரிக்க மாட்டேன் [கண்டாயே. (107)

திண்ணம் பழுத்த சிந்தையிலே தித்தித் துலவாச் சுயஞ்சோதி
வண்ணம் பழுத்த தனிப்பழமே மன்றில் விளங்கு [மணிச்சுடரே
தண்ணம் பழுத்த மதியமுதே தருவா யிதுவே [தருணமென்றன்
எண்ணம் பழுத்த தினிச்சிறியே னிறையுந் தரியேன் [தரியேனே. (108)

நாட்டுக் கிசைந்த மணிமன்றில் ஞான வடிவாய் நடஞ்செயரு
ளாட்டுக் கிசைந்த பெருங்கருணை யப்பா வென்ற [னரசேயென்
பாட்டுக் கிசைந்த பதியேயோர் பரமா னந்தப் பழமேமேல்
வீட்டுக் கிசைந்த விளக்கேயென் விவேகம் விளங்க [விளக்குகவே. (109)

## 27. பிரியேன் என்றல்

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப்
[பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிரா தியவெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுண்
மணியேயென் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேயென் னவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே. **(110)**

வாழையடி வாழையென வந்ததிருக் கூட்ட
மரபினில்யா னொருவனன்றோ வகையறியே னிந்த
வேழைபடும் பாடுனக்குத் திருவுளச்சம் மதமோ
விதுதகுமோ விதுமுறையோ விதுதருமந் தானோ
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்யா னுனக்கு
மகனலனோ நீயெனக்கு வாய்த்ததந்தை யலையோ
கோழையுல குயிர்த்துயர மினிப்பொறுக்க மாட்டேன்
கொடுத்தருணின் னருளொளியைக் கொடுத்தருளிப்
[பொழுதே. **(111)**

உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தா
லுயிர்விடுவேன் கணந்தரியே னுன்னாணை யிதுநீ
யென்னைமறந் திடுவாயோ மறந்திடுவா யெனில்யா
னென்னசெய்வே னெங்குறுவே னெவர்க்குரைப்பே
[னெந்தாய்
அன்னையினுந் தயவுடையாய் நீமறந்தா யெனினும்
அகிலமெலா மளித்திடுநின் னருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே யிருக்கின்றேன் மறவேல்
இதுதருண மருட்சோதி யெனக்குவிரைந் தருளே. **(112)**

நான்மறந்தே னெனினுமெனைத் தான்மறவா னெனது
நாயகனென் றுடுகின்றே னெனினுமிது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மா லயனை
மறந்தேனம் முருத்திரரை மறந்தேனென் னுடைய
வூன்மறந்தே னுயிர்மறந்தே னுணர்ச்சியெலா மறந்தே
னுலகமெலா மறந்தேனிங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேலிங் கெனையே
பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே. **(113)**

தெருவிடத்தே விளையாடித் திரிந்தவெனை வலிந்தே
சிவமாலை யணிந்தனையச் சிறுவயதி லிந்த
வுருவிடத்தே நினக்கிருந்த வாசையெலா மிந்நா
ளோடியதோ புதியவொரு வுருவுவிழைந் ததுவோ
கருவிடத்தே யெனைக்காத்த காவலனே யுனது
கால்பிடித்தேன் விடுவேனோ கைப்பிடியன் றதுதான்
வெருவிடத்தென் னுயிர்ப்பிடிகா ணுயிரகன்று லன்றி
விடமாட்டேன் விடமாட்டேன் விடமாட்டே
[னேனே. (114)

## 28. வாதனைக்கு இரங்கல்

படமாட்டேன் துயர்சிறிதும் படமாட்டேன் இனிநான்
பயப்படவு மாட்டேனுன் பதத்துணையே பிடித்தேன்
விடமாட்டேன் ஏமாந்து விடமாட்டேன் கண்டீர்
மெய்ம்மையிது நும்மாணை விளம்பினனும் அடியேன்
கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவு மாட்டேன்
இளரொளியம் பலத்தாடல் வளரொளிநும் மல்லால்
நடமாட்டே னென்னுளத்தே நான்சாக மாட்டேன்
நல்லதிரு வருளாலே நான்றுணு னேனே. (115)

பாயிரமா மறைகளெலாம் பாடுகின்ற பாட்டுன்
பாட்டேயென் றறிந்துகொண்டேன் பரம்பொருளுன்
[பெருமை
ஆயிரமா யிரங்கோடி நாவுடையோ ரெனினும்
அணுத்துணையும் புகலரிதே லந்தோவிச் சிறியேன்
வாயிரங்கா வகைபுகலத் துணிந்தேனென் னுடைய
மனத்தாசை யொருகடலோ வெழுகடலிற் பெரிதே
சேயிரங்கா முனமெடுத்தே யணைத்திடுந்தா யனையாய்
திருச்சிற்றம் பலம்விளங்குஞ் சிவஞான குருவே. (116)

அந்நாளி லடிச்சிறியே னம்பலவா யிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே யயர்ந்தழுது நின்றேன்
முந்நாளில் யான்புரிந்த பெருந்தவத்தா லெனக்கு
முகமலர்ந்து மொழிந்தவருண் மொழியைநினைந் தந்தச்
செந்நாளை யெதிர்பார்த்தே பன்னுளுங் களித்தேன்
சிந்தைமலர்ந் திருந்தேனச் செல்வமிகு திருநாள்
இந்நாளே யாதவிறு லெனக்கருள்வீ ரென்றேன்
என்பதன்முன் னளித்தீர்நும் மன்புலகிற் பெரிதே. (117)

## 29. முறையீடு

கருணை நிதியே யபய மபயம் கனகா கரனே யபய மபயம்
அருணை டகனே யபய மபய மழகா வமலா வபய மபயம்
தருணை தவனே யபய மபயந் தனிநா யகனே யபய மபயம்
தெருணை டுறுவா யபய மபயந் திருவம் பலவா வபய
[மபயம். (118)

அடியா ரிதயாம் புயனே யபய மரசே யமுதே யபய மபயம்
முடியா தினிநான் றரியே னபயம் முறையோ முறையோ
[முதல்வா வபயம்
கடியே னலனு னபய மபயங் கருணை கரனே யபய மபயந்
தடியே லருள்வா யபய மபயந் தருணை தவனே யபய மபயம்.

இடர்தீர் நெறியே யருள்வா யபய
மினிநான் றரியேன் றரியே னபயம்
விடர்போ லெனைநீ நினையே லபயம்
விடுவே னலனு னபய மபயம்
உடலோ டுறுபே ரருளா வியுமிங்
குனவே யெனவே யலவே யபயம்
சுடர்மா மணியே யபய மபயஞ்
சுகநா டகனே யபய மபயம். (120)

## 30. அருள்விளக்க மாலை

அருள்விளக்கே யருட்சுடரே யருட்சோதிச் சிவமே
அருளமுதே யருணிறைவே யருள்வடிவப் பொருளே
இருள்கடிந்தென் னுளமுழுது மிடங்கொண்ட மதியே
யென்னறிவே யென்னுயிரே யெனக்கினிய வுறவே
மருள்கடிந்த மாமணியே மாற்றறியாப் பொன்னே
மன்றில்நடம் புரிகின்ற மணவாளா வெனக்கே
தெருளளித்த திருவாளா ஞானவுரு வாளா
தெய்வநடத் தரசேநான் செய்மொழியேற் றருளே (121)

கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே
ஆடையிலே யெனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. (122)

கதிக்குவழி காட்டுகின்ற கண்ணேயென் கண்ணிற்
கலந்தமணி யேமணியிற் கலந்தகதி ரொளியே
விதிக்குமுல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே
மெய்யுணர்ந்தோர் கையகத்தே விளங்கியதீங் கனியே
மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே
மறைமுடியா கமமுடிமேல் வயங்குமின்ப நிறைவே
துதிக்குமன்பர் தொழப்பொதுவில் நடம்புரியு மரசே
சொன்மாலை சூட்டுகின்றேன் தோளிலணிந் தருளே.

உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்தித்தென் னுடம்போ
டுயிருணர்வுங் கலந்துகலந் துள்ளகத்தும் புறத்தும்
தண்ணியவண் ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே
ததும்பியென்றன் மயமெல்லாந் தன்மயமே யாக்கி
எண்ணியவென் னெண்ணமெலா மெய்தவொளி வழங்கி
இலங்குகின்ற பேரருளா மின்னமுதத் திரளே
புண்ணியமே யென்பெரிய பொருளேயென் னரசே
புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

கைக்கிசைந்த பொருளேயென் கருத்திசைந்த கனிவே
கண்ணேயென் கண்களுக்கே கலந்திசைந்த கணவா
மெய்க்கிசைந்த வணியேபொன் மேடையிலென் னுடனே
மெய்கலந்த தருணத்தே விளைந்தபெருஞ் சுகமே
நெய்க்கிசைந்த வுணவேயென் னெறிக்கிசைந்த நிலையே
நித்தியமே யெல்லாமாஞ் சத்தியமே யுலகிற்
பொய்க்கிசைந்தார் காணாதே பொதுநடஞ்செய் யரசே
புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே.

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தேங்கின்
றனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டி னிறக்கி
யெடுத்தசுவைக் கட்டியினு மினித்திடுந்தெள் ளமுதே
அநித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியா மலங்கலணிந் தருளே.

கண்களிக்கப் புகைசிறிதுங் காட்டாதே புருவக்
கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே
பண்களிக்கப் பாடுகின்ற பாட்டில்விளை சுகமே
பத்தருளே தித்திக்கப் பழுத்ததனிப் பழமே

மண்களிக்க வான்களிக்க மணந்தசிவ காம
வல்லியென மறைகளெலாம் வாழ்த்துகின்ற வாமப்
பெண்களிக்கப் பொதுநடஞ்செய் நடத்தரசே நினது
பெரும்புகழ்ச்சே வடிகளுக்கென் னரும்புமணிந்தருளே.

உருவெளியே யுருவெளிக்குள் ளுற்றவெளி யுருவே
யுருநடுவும் வெளிநடுவு மொன்றுன வொன்றே
பெருவெளியே பெருவெளியில் பெருஞ்சோதி மயமே
பெருஞ்சோதி மயநடுவே பிறங்குதனிப் பொருளே
மருவொழியா மலரகத்தே வயங்குமொளி மணியே
மந்திரமே தந்திரமே மதிப்பரிய மருந்தே
திருவொழியா தோங்குமணி மன்றினடத் தரசே
சிறுமொழியென் றிகழாதே சேர்த்துமகிழ்ந்தருளே.

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கனின்று கேட்டாலும் பரிந்துணர்ந் தாலும்
ஈர்த்தாலும் யிடித்தாலுங் கட்டியணைத் தாலும்
இத்தனைக்குந் தித்திக்கு மினித்தசுவைக் கரும்பே
வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே
மெய்ம்மையறி வானந்தம் விளக்குமரு ளமுதே
தீர்த்தாவென் றன்பரெலாந் தொழப்பொதுவில் நடிக்குந்
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே (129)

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங்கண்ணே
வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும்மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்குஞ் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
யெல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
யென்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே. (130)

கையாத தீங்கனியே கயக்காத வமுதே
கரையாத கற்கண்டே புரையாத கரும்பே
பொய்யாத பெருவாழ்வே புகையாத கனலே
போகாத புனலேயுள் வேகாத காலே

கொய்யாத நறுமலரே கோவாத மணியே
குளியாத பெருமுத்தே யொளியாத வெளியே
செய்யாத பேருதவி செய்தபெருந் தகையே
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. (131)

எண்ணாத மந்திரமே யெழுதாத மறையே
யேறாத மேனிலைநின் றிறங்காத நிறைவே
பண்ணாத பூசையிலே படியாத படிப்பே
பாராத பார்வையிலே பதியாத பதிப்பே
நண்ணாத மனத்தகத்தே யண்ணாத நலமே
நாடாத நாட்டகத்தே நடவாத நடப்பே
அண்ணாவென் னப்பாவென் னையாவென் னரசே
அடியிணைக்கென் சொன்மாலை அணிந்துமகிழ்ந் தருளே.

கொலைபுரிவார் தவிரமற்றை யெல்லாரு நினது
குலத்தாரே நீயெனது குலத்துமுதன் மகனே
மலைவறவே சுத்தசிவ சமரசசன் மார்க்கம்
வளரவளர்ந் திருக்கவென வாழ்த்தியவென் குருவே
நிலைவிழைவார் தமைக்காக்கு நித்தியனே யெல்லா
நிலையும்விளங் குறவருளில் நிறுத்தியசிற் குணனே
புலையறியாப் பெருந்தவர்கள் போற்றமணிப் பொதுவில்
புனிதநடத் தரசேயென் புகலுமணிந் தருளே. (133)

உயிர்க்கொலையும் புலைப்பசிப்பு முடையவர்க ளெல்லா
முறவினத்தா ரல்லரவர் புறவினத்தா ரவர்க்குப்
பயிர்ப்புறுமோர் பசிதவிர்த்தன் மாத்திரமே புரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவே லிங்கே
நயப்புறுசன் மார்க்கமவ ரடையளவு மிதுதான்
நம்மாணை யென்றெனக்கு நவின்றவரு ளிறையே
மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியு
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. (134)

## 31. திருவடிப் புகழ்ச்சி

பாலானைத் தேனானைப் பழத்தி னானைப்
பலனுறுசெங் கரும்பானைப் பாய்ந்து வேகாக்
காலானைக் கலைசாகாத் தலையி னானைக்
காலென்றுந் தலையென்றுங் கருதற் கெய்தா

மேலானை மேனிலைமே லமுதா னானை
மேன்மேலு மெனதுளத்தே விளங்க லன்றி
யேலானை யென்பாட லேற்றுக் கொண்ட
வெம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. (135)

மருந்தானை மணியானை வழுத்தா நின்ற
மந்திரங்க ளானானை வான நாட்டு
விருந்தானை யுறவானை நண்பி னானை
மேலானைக் கீழானை மேல்கீ ழென்னப்
பொருந்தானை யென்னுயிரிற் பொருந்தி னானைப்
பொன்னானைப் பொருளானைப் பொதுவா யெங்கு
மிருந்தானை யிருப்பானை யிருக்கின் றானை
யெம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. (136)

## 36. அமையங் கூறல்

கருவிற் கலந்த துணையேயென் கனிவிற் கலந்த வமுதேயென்
கண்ணிற் கலந்த வொளியேயென் கருத்திற்கலந்த
[களிப்பேயென்
உருவிற் கலந்த வழகேயென் னுயிரிற் கலந்த வுறவேயென்
உணர்விற் கலந்த சுகமேயென் னுடைய வொருமைப்
[பெருமானே
தெருவிற் கலந்து விளையாடுஞ் சிறியேன் றனக்கே
[மெய்ஞ்ஞான
சித்தி யளித்த பெருங்கருணைத் தேவே யுலகத் திரளெல்லாம்
மருவிக் கலந்து வாழ்வதற்கு வாய்த்த தருண மிதுவென்றே
வாயே பறையா யறைகின்றே னெந்தாய் கருணை
[வலத்தாலே. (137)

ஓவா துண்டு படுத்துறங்கி யுணர்ந்து விழித்துக் கதைபேசி
யுடம்பு நோவா துளமடக்கா தோகோ நோன்பு
[கும்பிட்டே
சாவா வரமுஞ் சித்தியெலாந் தழைத்த நிலையுஞ் சன்மார்க்க
சங்க மதிப்பும் பெற்றேனென் சதுர்தென் பெரிதென்
[சரித்திரத்தை
யாவா நினைக்கி லதிசயமென் னப்பா வரசே யமுதேயென்
ஆவிக் கினிய துணையேயென் னன்பே யறிவே யருட்சோதித்
தேவா விதுநின் செயலேயிச் செயலை நினைக்குந்
[தொறுமெனது
சிந்தை கனிந்து கனிந்துருகித் தெள்ளா ரமுத
[மானதுவே. (138)

## 33. குரு தரிசனம்

தவள நிறத்துத் திருநீறு தாங்கும்
மணித்தோட் டாணுவை நங்
குவளை விழித்தாய் ஒருபுறத்தே குலவ
விளங்கும் குருமணியைக்
கவள மதமா கரியுரியைக் களித்த
மேனிக் கற்பகத்தைப்
பவள மலையைப் பழமலையிற் பரவி
யேத்தக் கண்டேனே! (139)

ஆதி நடுவு முடிவுமிலா அருளா
னந்தப் பெருங்கடலை
ஓதி யுணர்தற் கரியசிவ யோகத்
தெழுந்த வொருசுகத்தைப்
பாதி யாகி யொன்றாகிப் படர்ந்த
வடிவைப் பரம்பரத்தைச்
சோதி மலையைப் பழமலையிற் சூழ்ந்து
வணங்கிக் கண்டேனே! (140)

## 34. அச்சோப் பத்து

எப்பொழுதும் எவ்வுயிரும் எவ்வுலகும்
விளங்கவிளக் கிடுவான் தன்னைச்
செப்பரிய பெரியவொரு சிவபதியைச்
சிவகதியைச் சிவபோ கத்தைத்
துப்பரவு பெறவெனக்கே யருளமுதந்
துணிந்தளித்த துணையை என்றன்
அப்பனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
சோதியைப் பெற்றேன் அச்சோ வச்சோ. (141)

சாதியைநீள் சமயத்தை மதத்தையெலாம்
விடுவித்தென் றன்னை ஞான
நீதியிலே சுத்தசிவ சன்மார்க்க
நிலைதனிலே நிறுத்தி னானைப்
பாதியை யொன் றானவனைப் பரம்பரனைப்
பராபரனைப் பதிய ஞதி
ஆதியைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
சோதியைப் பெற்றேன் அச்சோ வச்சோ. (142)

## 35. பரசிவ நிலை

அருட்சோதித் தெய்வமெனை ஆண்டு கொண்ட தெய்வம்
அம்பலத்தே யாடுகின்ற வானந்தத் தெய்வம்

பொருட்சாரு மறைகளெலாம் போற்றுகின்ற தெய்வம்
போதாந்தத் தெய்வமுயர் நாதாந்தத் தெய்வம்
இருட்பாடு நீக்கியொளி யீந்தருளுந் தெய்வம்
எண்ணியநான் எண்ணியவா றெனக்கருளுந் தெய்வம்
தெருட்பாட லுவந்தெனையுஞ் சிவமாக்குந் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். (143)

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்
தன்னைநிக ரில்லாத தனித்தலைமைத் தெய்வம்
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்
மலரடியென் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
கருணைநிதித் தெய்வமுற்றுங் காட்டுவிக்குந் தெய்வம்
சேயாக வெனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். (144)

## 36. திருவடிப் புகழ்ச்சி

கலைவளர் கலையே கலையினுட் கலையே
கலையெலாந் தருமொரு கருவே
நிலைவளர் கருவுட் கருவென வயங்கும்
நித்திய வானமே ஞான
மலைவளர் மருந்தே மருந்துறு பலனே
மாபலந் தருகின்ற வாழ்வே
புலைதவிர்த் தெனையும் பொருளெனக் கொண்டு
பொதுநடம் புரிகின்ற பொருளே. (145)

காரண வருவே காரிய வுருவே
காரண காரியங் காட்டி
ஆரண முடியும் ஆகம முடியும்
அமர்ந்தொளிர் அற்புதச் சுடரே
நாரண தரமே நாரண வலமே
நாரணு காரத்தின் ஞாங்கர்ப்
பூரண வொளிசெய் பூரண சிவமே
பொதுநடம் புரிகின்ற பொருளே! (146)

## 37. திருப்பள்ளி எழுச்சி

பொழுது விடிந்ததென் உள்ளமென் கமலம்
பூத்தது பொன்னொளி பொங்கிய தெங்கும்
தொழுதுநிற் கின்றனன் செய்பணி யெல்லாஞ்
சொல்லுதல் வேண்டுமென் வல்லசற் குருவே

